உ

திருச்சிற்றம்பலம்.

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# சாத்திரக்கொத்து

இது
தமிழ்ப்பண்டிதர்
சே. வெள்ளியம்பலம்பிள்ளையவர்கள் குமாரர்
சே. சிவஞானம்பிள்ளையவர்கள்
விருப்பத்தின்படி
திருமயிலை - வித்வான்
சண்முகம்பிள்ளையவர்களால்
பார்வையிடப்பட்டு,
நே. முருகேச முதலியாரவர்களால்
தமது
சென்னைப் புரசை
"கணேச" அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.
1905.

உ

திருச்சிற்றம்பலம்.

---

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# சாத்திரக்கொத்து



இஃது
தமிழ்ப் பண்டிதர்
சே. வெள்ளியம்பலம்பிள்ளையவர்கள் குமாரர்
சே. சிவஞானம்பிள்ளையவர்கள்
விருப்பத்தின்படி,

திருமயிலை - வித்வான்
சண்முகம்பிள்ளையவர்களால்
பார்வையிடப்பட்டு,

நே. முருகேச முதலியாரவர்கள்
தமது
சென்னைப் புரசை
"கணேச" அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.
1904.

உ

சிவமயம்.

# அட்டவணை.



| நம்பர். | விஷயம். | | | | பக்கம். | பாட்டு. |
|---|---|---|---|---|---|---|
| 1 | செல்காலத்திரங்கல் | | ... | ... | 1 | 54 |
| 2 | நிகழ்காலத்திரங்கல் | | ... | ... | 8 | 50 |
| 3 | வருகாலத்திரங்கல் ... | | ... | ... | 14 | 48 |
| 4 | அநுபூதிவிளக்கம் ... | | ... | ... | 20 | 64 |
| 5 | தாலாட்டு ... | ... | ... | ... | 28 | 62 |
| 6 | வெண்பா ... | ... | ... | ... | 36 | [illegible] |
| 7 | கட்டளைக்கலித்துறை | | ... | ... | 50 | 54 |
| 8 | துகளறுபோதம் ... | | ... | ... | 63 | [illegible] |
| 9 | திருப்புன்முறுவல் | | ... | ... | 87 | [illegible] |

திருச்சிற்றம்பலம்.

# நூலாசிரியர் வரலாறு.

தெய்வப்புலமை ஔவையாரால் 'சோழவளநாடு சோறுடைத்து' என்னும் பூவிரிபுனல்சூழ் காவிரி வளஞ்செறிந் தின்னநீர்த் தோங்குறாஉம் சென்னி நன்னாட்டகத்துப்,

"பிரமபுரம் வேணுபுரம் பெரும்புகலி வெங்குருநீர்ப்
பொருவிறுத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம்பன் னிரண்டுதிருப் பெயர்த்தால்."

என்னும் பன்னிரு திருப்பெயருடைப்பழம்பதியின்கண் 'ஒரும் வேதாந்தத் துச்சியிற் பழுத்த சாரங்கொண்ட சைவசித்தாந்த' சந்தானகுரவருளொருவரா கொற்றவன்குடி உமாபதி சிவனாற் சிறப்பித்தெடுத் தோதப்பட்ட வேளாண்குடிவாழ்க்கை யுடையார் பின்கண் சிற்றம்பல நாடிக ளென்பாரொருவர் தோன்

னர். இவர் தம்மைப் பெற்றோர் சுக்கில பக்கத்துச் சந்திரன்போல் வளர்க்க வளர்ந்து தக்கவயதுநிரம்புதற்குள் நிகண்டு கற்று இலக்கியம் இலக்கணம் தருக்க முதலிய கருவி நூல்கள் பயின்று சிற்சபையி லற்புத நடஞ்செயு மாண்டகை நீண்ட பூங்கழற்க ணன்புடைமை முற்பிறப் பிலுடைமையாற் பதி பசு பாச மென்னு முப்பொரு ளுணர்ச்சியுடைய ராயினர்.

இவ ரிருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாத முடையராக விளங்கலாற் சுத்தாத்துவித வைதிக சைவ பரமாசாரிய சிகாமணியாகிய பொய்கண் டகன்ற மெய்கண்ட தேசிகர் மரபிடை யருளுபதேசம் பெற்றுச் சிறந்து சிவானுபூதிச் செல்வராய் வீற்றிருந்தனர். இவர்பா லருளுபதேசம் பெற்றுச் சிறந்தா ரனேகப லர். இவருளொரு திருக்கூட்டமாகச் சேர்ந்து அடிக ளடிகட்குழுவ லன்புடைய ராகிச் சிவானுபூதிமான்க ளெனச் சிறந்தார் அறுபான் மூவர்; அவர் தத்துவப் பிரகாசர், ஞானப் பிரகாசர், கண்ணப்பர் முதலாயினோர். இவரனைவரு மொருங் கெய்திக் கவுரிமாயூரத் தண் மையாய தொரு மடாலயத் தெழுந்தருளிச் சிவபூசை, குருபூசை முதலியன நடத்தி வந்தனர்.

இவ்வாறிருக்கையி லொருநாள் அடிகளும் அடியரும் வழக்கம்போற் றிருவமுது மிசைந்தனர். அதுபோழ்து பரிசாரகன் வேப்பெண்ணெயை ஆனெயென் றுணராமே யெடுத்தவருண்ணு மன்னத்திற்பெய்தனன். அடிகள் முதலானோரும் ஒரு விகற்பமு மில்லாது விழைந்து அமுது கொண்டனர். அவருளொருவராகிய கண்ணப்பர் சற்றே விகற்பமெய்திப் பரிசாரகன் அன்னத்திற் பெய்தது வேப்பெண்ணெயென் றுணர்ந்து எண்ணெயினை விட்டுப் பிசைந்த பருப்பன்னமுண்ணாது கவன்று 'வே' யென்றோக்காளித்தனர். அதனையுணர்ந்த அடிகளும் 'நமது திருக்கூட்டத்தே பக்குவ மில்லாதாரு மிருப்பது தகுதியோ' எனக் கட்டளை யிட்டனர். அதனைக் கேட்ட கண்ணப்பரும் உடனே இம்மென் றெழுந்து அப்பந்தியினின்று நீங்கிப் போந்து தம தடிக ளடிகளைச் சிந்தனையி லிடைவிடாது சிந்தித்துக் கொண்டே வடக்கனோக்கிச் சென்றனர்.

இவர் சென்ற சின்னாட்பின்னர் அடிகளும் தம்மடியரோடுஞ் சித்திரை மதியிற் றிருவோணநாளிற் சமாதியிறங்குவதாக அந்நாளிற் பொன்னி நதிசூழ்ந்த சென்னன்னாட்டினை யரசாண்டுவரும் அரசனைக் கூயறிவித்து

அதற்குத் தக்கஇடம் அமைக்க வெனக்கட்டளையிட்ட னர். அரசனே கழிபேருவகையெய்தி அக்கௌரிமாயூ ரத்திற் கண்மையாகிய பூம்பொழி லொன்றில் அவ் வடிகள் கட்டளையிட்டாங்கு அடிகட்கொரு சமாதியும் அடியர்அறுபானிருவருக்குமத்துணைச்சமாதியுமமைத்து அடிகட்கு விண்ணப் பித்ததன்றி இச்சிறந்த செய்தியை உலகமெங்கும் அறியப் பறை சாற்றுவித்தனன்.

இவ்வதிசயங் கேட்டாங் கனைவரும் குறித்த நாளில் அப்பூம்பொழிலையடைந்து யாது விநோத நடக்குமோ காண்பேமென் றெதிர்பார்த் திருந்தனர். அரசனே அப்பூம்பொழிலை யொப்பனை புனைந் தடிகளடிகளை வண ங்கி விண்ணப்பித்தனன். இறைவனேடு புக்கொடுங் குங்கால நேர்ந்தமையான் அடிகளும் தம்மடியருடன் அப்பூம்பொழிலை யெய்திக் காணவந்தார் யாரையும் திருவருட் கண்ணுனேக்கி யாசீர்வதித்து யாவருங்கேட் பத் திருவெண்பாக்கள் மூன்றனை யருளிச்செய்து தமக் கென்றமைத்த சமாதியி லிறங்கிச் சிவத்தியானத்தோடு சின்முத்திரையாகிய மோனமுத்திரை தாங்கி நிலவினர். பின்னர் அடியரறுபா னிருவருந் தனித்தனி யொவ்வொ ருதிருவெண்பாப்பாடிக் கொண்டே தம்மடிக ளடிகளைத்

தியானஞ் செய்துகொண்டு மும்முறை வலம் வந்தெட்டுறுப்பு நிலமுறப்பணிந்து தத்தமக் கமைத்த சமாதியிலிறங்கிச் சித்திபெற்றனர்.

இவ்வாறு நிகழு மதிசயம் அரசனும் பலரும் வியப்புற்று இப்பெற லருஞ்செல்வம் இக்கூட்டத்திற் சேர்ந்தவடியவ ரொருவரெய்தப் பெற்றிலரே! அவரெங்குற்றனரோ! யாண்டுள்ளாரோ! அவரிச்செய்தி யுணர்வரோ! எனப்பலபடப் பேசிக் கவல் கொண்டனர். அவ்வமையத்தில் வடக்கட் சென்ற அடியர் தற்செயலா யாண்டுத் தோன்றித் தமக்கென்றொரு சமாதியமைக்கப் படாமையா லாங்குள்ள வெல்லாச் சமாதிகளையுமும்முறைவலம்வந்துவணங்கித்தம்மடிகள் சமாதியை நாடி யாராவன்பு மீதூர்ந்து கண்ணீருங் கம்பலையுமாய் நெஞ்சநெக்குநெக்குக் கசிந்துருகி நின்று; 'ஆண்டகுரு சிற்றம் பலவாவடியேற்கா - மீண்டும் பிறக்க நீ வேண்டாவோ' எனக் கூறி நின்றனர். உடனே அச்சமாதி பிளவுபட அடிகள் விழித்து நோக்கி எதிரிற் கூப்பிய கையராய்க் கவல்கொண்ட கண்ணப்பரை யிருகையா ரத்தழீஇக்கொண்டு தமது மடிமீதிருத்தி ஐக்கியஞ்செய்து கொண்டனர். இவர் பெற்றபேறேபேறு.

இவர் பெற்றது யாரினுஞ் சிறப்புற்றதெனக் கண்டார் யாவருங்கழறித் தத்தமிருக்கையை யடைந்தனர். அரசனே அச்சமாதிக் கட்டடங்களை யெல்லா மேலே விதானித்துத் திருத்திப் பூசனை நடத்த வமைத்துச் சிவப்பேறுற்றுச் சிறந்தனன். இதனுண்மை பின்வருமபியுத்தர் செய்யுளா னறியலாம். அது "முத்தாறுபத்து மூவர் பணிந் தேத்தும், சித்தர் வனந்தில்லைச் சிற்றம்பலவா-பத்தர், பவவிருளை நீக்கியருள் பானுவேதுய்ய, தவ வடிவே நின்றாள் சரண்." இக்கவுரிமா யூரத்திற் கடுத்த இவர் சமாதி யமைந்த பூம்பொழிலைச் சித்தர்வனமென்றும், சித்தக் காடென்றும் இன்னும் வழங்குகின்றனர்.

இச்சாத்திரக் கொத்து ளடங்கிய நூல்கள் செல்காலத்திரங்கல், நிகழ் காலத்திரங்கல், வருகாலத்திரங்கல், அநுபூதிவிளக்கம், தாலாட்டு, கலித்துறை, மூறுவல் துகளறுபோத மென்பன. இவ்வடிகளும் அடியவ ரும் சமாதியடையும்போது சிற்றம்பலநாடிகள் மூன்று வெண்பாவும் ஏனையோர் ஒவ்வொரு வெண்பாவும் பாடியதாகத் தோன்றுகின்றது. திருச்செந்தூர் அகவலையும் இவர் செய்ததாகச் சிலர் கூறுப. இப்பெயரினர் வேறிருவருளர். அவர் பெரியபமுதைச் சிற்றம்பல நாடிகளும், சிறுபமுதைச் சிற்றம்பலநாடிகளு மெனப்படுவர்.

# முகவுரை.

யான் சிற்றம்பல நாடிகளும் அவரடியரும் பாடிய இவ்வரிய பெரிய நூல்களடங்கிய திரட்டொன்று வெகு காலத்திற்குமுன் கிடைக்கப் பெற்றேன். அதன் சார்பேபோலும் எனக்கும் அவ்வடிகள் மரபிற் சமய விசேட தீக்கைகள் கிடைக்கப்பெற்றன. இப்பரம்பரை சீகாழி, மாயூர மென்பனவாய சோணாட்டுத் திருப்பதிகளினின்றுந் திருத்தொண்டை நாட்டி லெம்மையாளுடைய அறப்பெருஞ் செல்வி எண்ணான் கறனும் புரிந்திறைவனை வளைச்சுவட்டானுந் தனச்சுவட்டானும் இறுகச் செய்த தவக்ஷேத்திரமும் சத்தபுரிகளி லொன்றுமா யிலகிய காஞ்சி நகரத்தில் ஞானப்பிரகாச ராதீனமென இற்றைஞான்று மிருக்கின்றது. அங்கு மகா குருபூசை சித்திரை மாதத் திருவோண நாளிற் பிரதிவருடமு நடந்தேறி வருகின்றது. அவ்வாதீனத்தின் முன்னிருந்த மகாசந்நிதானம் அடியேனை நோக்கிக் கடைக்கணித்து நம்முடைய ஆதீனப் பெருஞ் செல்வமாகிய இச்சிற்றம்பல நாடிகள் நூல்களனைத்தும் அடியேன்பாற்கொடுத்து அச்சிட்டுபகரித்த லுனக்குக் கடனுமெனக் கட்டளையிட் டிருந்தார்கள். கல்வியிலுஞ் செல்வத்திலும் வறிய[illegible] யான் இப்பெருங் காரிய மெவ்வாறு முடிப்பபெ[illegible]

கருதியிருக்கையிற் பிரதிகள் சில கிடைத்துத் திருத்த முஞ் செய்ய முயன்றேன். அகளறுபோத மொன்றே திருத்தஎனக்கு மிகச்சாலச் சிரமந் தந்தது. சென்னைக் கிறிஸ்தவ கலாசாலைத் தமிழ்ப் பண்டிதராகிய நாகை. வேதாசலம்பிள்ளை யவர்கள் சிற்றுரையொன்றெழுதிவிடுத்த ஒருபிரதி கிடைத்தது. அவ்வுரையோமிகச்சுருக்கி யெழுதி யிருக்கின்றது. இதுநிற்க; வடநூற் கடலையும் தமிழ்நூற் கடலையு நிலைகண்டுணர்ந்த திராவிடபாடிய காரராகிய திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சிவஞான யோகிகளே ஆங்காங்குக் காட்டாகக் காட்டிய இவ்வரிய பெரிய சாத்திரத்தை எவ்வாறு வெளிவிடுவதெனக் கருதியே யிருந்த எனக்குத் திருநெல்வேலி - வித்துவான் - பால்வண்ண முதலியா ரவர்கள் தென்னாட்டுப் பல பிரதிகளையுங்கொண்டு பரிசோதித் தச்சிட்டுதவிய பிரதியுங் கிடைத்து என் பிரதியோடு ஒத்திட்டு அச்சிட முயன்றேன்.

இதை யெவ்வா றச்சிடுவதென்று கருதியிருந்த எனக்குப்பரோபகாரசிந்தையுடன் சென்னைப்புரசையிற் பெண்களுக்கு இந்துமதபோதனை போதிக்கு நிமித்தந் தரும பாடசாலை வைத்துக் கற்பித்துஞ் செல்வராகிய

சைவப்பிரபு - நே. முனிசாமி முதலியா ரவர்கள் ஷெ பாடசாலைப் பரிபாலனத்திற் கென்றமைத்த தமது கணேச அச்சியந்திர சாலையிற் றமது சொந்தச் செலவிலேயே அச்சிட்டுத் தருவதாக வாக்களித் தவ்வாறே முடித்துங் கொடுத்தார்கள். அவர்கள் செய்தநன்றிக்கு யான் மழைக்கு மாறுதவிசெய்வா ரில்லதுபோற் கருதவேண்டுவதன்றி யான்செயற்பால தொன்றுமின்று. எனக்குப்பிரதியுதவினவர்கட்கு என்மனமாரவந்தனஞ் செலுத்துகின்றேன். யான் இச்சாத்திரக்கொத்தினை யச்சிடுகையில் என்னோடு பிரதிகளையொத்திட் டச்சிட வுதவியாயிருந்த - கவர்ன்மெண்டு பெண்கள் கல்விச் சாலைகளில் சென்றல் சர்க்கில் இன்ஸ்பெக்ட்ரஸ் தலைமை இலிகிதர் சே. சிவஞானம் பிள்ளைக்கும் என்ன கைம்மாறு செயற்பாலேன். இவ்வரிய பெரிய சாத்திரத்தை யானச்சிடக் கருணைசெய்த முழுமுதல்வன் றிருவருளை வணங்குகின்றேன்.

இங்ஙனம்:

தி. சண்முகம் பிள்ளை.

| | பிரதி எண். | |
|---|---|---|
| என்பாலிருந்த பிரதி | 1. | * |
| காஞ்சி. ஞானப்பிரகாச ராதீனம் | 1. | * |
| தி. கோதண்டசாமி பிள்ளை அவர்கள் | 1. | * |
| திரிசிரபுரம். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் தி. ஆறுமுக நயினுர் அவர்கள். | 1. | * |
| ஆகளூறு போதம்-திருநெல்வேலி வித்துவான், பால்வண்ண முதலியார் அவர்கள். | 1. | * |
| ஆகளூறு போதமும் சிற்றம்பல நாடிகள் வெண்பாவும். சென்னைக் கிறிஸ்தவ கலா சாலைத் தமிழ்ப்பண்டிதர் நாகை. வேதாசலம் பிள்ளை அவர்கள். | 1. | * |

இங்ஙனம்

தி.ச.



திருச்சிற்றம்பலம்.

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

அருளிச்செய்த

# சாத்திரக் கொத்து.

முதலாவது,

## செல்காலத்திரங்கல்.

சீரார் திருநீறுந் தீதிலருள் வேடமுமுன்
சேராம லையோ தெளியா திருந்தனமே. (1)

வந்து பிறந்ததிந்த மானிடராய் மண்ணின்மிசை
யெந்தைபணி செய்வதற்கென் றெண்ணா திருந்தனமே.

திருக்கோயில் சூழ்ந்து சிவனுருவங் கண்டு
மருட்கோல மாற்றுமன் மாண்டு திரிந்தனமே. (3)

மஞ்சனமு மாமலரு மாறாத் திருவிளக்குஞ்
செஞ்சடையோற்கென்றென்றுஞ்செய்யாதிருந்தனமே.

சமையவிசேட மவுத்திரிமுன் கொள்ளா
தமைவில் விடையத் தழிந்து திரிந்தனமே. (5)

அன்றே சிவனுரை யாதரவாய்ப் பூசித்த
லின்றே வினைப்பிறப்பி லீடழிந்து விட்டனமே. (6)

ஆதார யோக நிராதார யோகமெனுஞ்
சூதான மில்லாமற் சூழ்ந்து பிறந்தனமே. (7)

ஊனொழித்திட் டென்று மொழியாத வீடுதரு
ஞானகுரு வேணுமென்று நாடா திருந்தனமே. (8)

அருவாகி நின்ற வரனு ருலகிற்
குருவா யிருத்தல் குறியா திருந்தனமே. (9)

தேசுற்ற தேசிகரைச் சிந்தை மகிழ்ந்துருகிப்
பூசித்துப் போற்றுமற் போதவமே போக்கினமே. (10)

மாறுத மாக்கருணை மானிடர்போல் வந்திருக்கப்
பேறுகப் போற்றுமற் பேறிழந்து விட்டனமே. (11)

இன்றுபோ லன்றே யிறைவனூர் கண்மலரால்
நின்றுவினை போக்காமல் நிட்டூரஞ் செய்தனமே. (12)

அங்கமலத் தாளிரண்டு மன்றே தலைக்கொண்டு
பொங்குமலம் போக்காமற் புலன்வழியேபோக்கினமே.

பூத வுடம்பு பொருளல்ல வென்றுணர்ந்த
போதந் தனைமுன்னே பொருந்தியிடப் பெற்றிலமே.

மனாதிமுதல் வாயு மறந்திருந்த வாழ்வை
யனாதியே காணா தவமே யுழன்றனமே. (15)

ஒன்றும் பொறிபுலனை யோயா திருந்தவின்ப
மன்றருந்த வெல்லா மகன்றிருக்கப் பெற்றிலமே. (16)

ஆணவத்தை நீக்கி யறிவில் விழித்ததனைக்
காணவைத்த வன்றுமுதல் காணா தலந்தனமே. (17)

என்னறிவு கண்டிங் கிருடீர்த்த விவ்விழிப்பு
முன்னமறி யாதலந்தேன் மூர்க்கனே னல்லவோ. (18)

அறிவுக் கறிவாகி யாதார மாகிப்
பிறிகைக் கரிதாம்பே றிக்கெடுநாள் பெற்றிலமே. (19)

பார்க்க வரிதாம் பரவறிவின் றன்பெருமை
யேற்கவே கண்டுகண் டின்புற் றிருந்திலமே. (20)

எல்லா வறிவு மிழந்தவிடத் துள்ளவின்ப
மல்லாத பாவியே னன்றே யறிந்திலமே. (21)

வானுந்து தேவறியா மாமலர்த்தாள் வாழ்த்தியன்றே
யானந்தத் தேனை யருந்துதற்குப் பெற்றிலமே. (22)

உள்ளும் புறம்பு மொழியாத வானந்த
வெள்ளத் தழுந்தாமல் வீணெடுநாள் விட்டனமே. (23)

சீரார் சிவானந்தத் தேனருந்தி வாழ்வதற்குத்
தேராம லிந்நெடுநாள் தீவினையில் மூளுவதே. (24)

எண்ணரிய பேரின்ப மிப்போது போலமுன்னும்
நண்ணி யருந்தாமல் நாளவமே போக்கினமே. (25)

கண்டவிட மெல்லாங் கலந்த பரமசுகங்
கொண்டிருந்து வாழாநாள் கோன்னே கழிந்தனமே.

எல்லாமா முத்தியிளின் றென்னேமே விட்டசுக
நில்லாம லிந்நெடுநாள் நில்லாம னின்றனமே. (27)

சேரச் சிவமாந் தெளிவுந் தெளிந்தவிந்த
நேரம்போல் முன்னுநின் றுவிடப் பெற்றிலமே. (28)

நில்லாத தெல்லாம் நிலையென்று நெஞ்சில்வைத்துச்
சொல்லாத பேரறிவு சொல்லாடப் பெற்றிலமே. (29)

ஆகாப் பொருள்தேடி யாம்பொருளைக் கைவிட்டுப்
போகா வுடல்தோறும் புக்குழன்று விட்டனமே. (30)

முத்திநெறி நில்லாத மூர்க்க ருடன்கூடி
யத்தனடி யாரடியை யாதரிக்கப் பெற்றிலமே. (31)

ஈன்றாள் முதலாக வெவ்வுறவும் போற்றிசெய்து
சான்றோர் திருவடியைச் சார்வதற்குப் பெற்றிலமே.

நெஞ்சழுத்த மாகவே நிட்டூரம் பேசிமிக
வஞ்செழுத்தும் வெண்ணீறு மாதரிக்கப் பெற்றிலமே.

புரையுடைய சிந்தைப் புலைய ருடன்கூடி
யரனடியார் கூட்ட மணுகுதற்குப் பெற்றிலமே. (34)

போதமிலா ரோடே பொருந்தக் கலந்துமிக
வேதமுடி வாரை விளம்புதற்குப் பெற்றிலமே. (35)

பேயான பொய்ச்சமைய பேதந் தனிலுணர்ந்து
வாயார வாகமத்தை வாழ்த்துதற்குப் பெற்றிலமே. (36)

பொய்கண் டகலாத போதமிலோ மிந்நெடுநாள்
மெய்கண்டான் சந்தான மேவுதற்குப் பெற்றிலமே.

பொங்கும் பவத்தொடர்ச்சி போக்குதற்கு முன்னமே
கங்கைநகர் மெய்கண்டான் காற்கமலம் பெற்றிலமே.

தீரா மலமனைத்துந் தீர்ந்திருக்க விந்நெடுநாள்
சீராரு மெய்கண்டான் சேவடிகள் பெற்றிலமே. (39)

ஆத்த பிறப்பறுக்க வன்றே யருளுருவாய்க்
கூத்தனருள் மெய்கண்டான் கூருதற்குப் பெற்றிலமே.

ஒன்றே யெனவுரைத்த வொப்பிலருள் மெய்கண்டா
னன்றே யருளுருவா யாண்டருளப் பெற்றிலமே. (41)

நீதிலருள் மெய்கண்டான் செங்கமலத் தாளிரண்டு
மாதரவாய்ப் பூசிக்க வன்றே யறிந்திலமே. (42)

நல்லகுரு நாத னல்குதிரு மேனிதனைப்
புல்லறிவு தீரவன்றே பூசிக்கப் பெற்றிலமே. (43)

பருகத் தொலையாப் பரபோகந் தன்னில்
உருகிக் கலவாம லூனுகந்து விட்டனமே. (44)

தீராத பாதகங்கள் தீரக் குருபாத
மோரா வுணர்வென் றுணர வறிந்திலமே. (45)

எண்கொளா வின்ப வெழிற்குரவர் மேனிதனைக்
கண்கள்களி கூரவன்றே கண்டிருக்கப் பெற்றிலமே.

சொல்லாத சொல்லதனைச் சொல்லாலே சொன்னார்சொ
லெல்லாஞ் செவிகளினு லெப்பொழுதுங் கேட்டிலமே.

இதமகித மாற்று மெழிற்குரவர் தந்த
பதமிரண்டு மன்றே பரிசிக்கப் பெற்றிலமே. (48)

களித்த திருஞானங் கண்ணா லருந்தி
யளித்ததனை யன்றே யருந்துதற்குப் பெற்றிலமே. (49)

ஆக்காப் பதத்தி லருமணத்தை யாதரித்து
மூக்கான் முரலுதற்கு முன்னமே பெற்றிலமே. (50)

தாயா யருள்சுரந்த தம்பிரான் றாளிணையை
வாயார வன்றே வழுத்துதற்குப் பெற்றிலமே. (51)

போதநான் செய்துவந்த பொல்லா வினைதீர
நாதனு ரேவல் நடப்பதற்குப் பெற்றிலமே. (52)

மெய்யணைய வந்தருளு மெய்கண்டான் மேனியன்றே
கையிணைகள் கூப்பிக் கசிந்துருகப் பெற்றிலமே. (53)

நிலையாம் பொருளில் நிறுத்துங் குருவைத்
தலையால் வணங்காமற் றாழ்வுசெய்து விட்டனமே. (54)

சேல்காலத்திரங்கல் - முற்றும்.



## இரண்டாவது,

## நிகழ்காலத்திரங்கல்.



உன்னரிய ஞான முருவாக வந்தருள
வென்னதவஞ் செய்தேமுன் னியாமென் றறிந்திலமே.

ஆண்டருள வேணுமெனு மாசையோ நல்லறமோ
வேண்டி யெமையாள மெய்கண்டார் வந்ததுவே. (2)

கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டு
மீட்சி தரவெமக்கு மெய்கண்டார் வந்ததுவே. (3)

வாரீர் சிவனடியார் வாராமல் வந்தவரைப்
பாரீர் பரத்தின் பரிணமந் தன்னையுமே. (4)

இப்படியே யிப்படியி லென்போ லிருப்பதுவே
யப்படியே யந்த வகண்டபரி பூரணமே. (5)

போகாத வின்பப் பெருமா னுருக்கொண்டு
வாராமல் வந்துதிரு வார்த்தை யுரைப்பதுவே; (6)

கல்லா னிழலிருந்து கைம்மலரால் நால்வருக்குச்
சொல்லாத சொல்லதனைச் சொல்லுதற்கு வந்தவா. (7)

அறுபத்து மூவர்க்கு மன்றன்று வந்தா
ருறுமுத்தி சேர்வார்கட் கோருருவாய் வந்தவா. (8)

சீரார் மறையுஞ் சிவாகமமுஞ் செய் நூலு
மோரா வுணர்வு மொருமொழியாய்த் தந்தவா. (9)

அரிபிரமர் காணாத வானந்தத் தேனைப்
பருகிப்பரு காதருந்தப் பான்மொழியாய்த் தந்தவா.

தோன்றும்பொழுதெல்லாஞ்சுகவடிவேதோன்றுதற்குத்
தோன்றும் பெருமாள்தஞ் சொல்லாலே சொன்னவா.

பஞ்சமலந் தீர்ந்த பரம சுகந்தன்னைக்
கிஞ்சுகவா யாலே கேளென்று சொன்னவா. (12)

போதளவுங் காணமற் புல்குஞ் சுகந்தன்னைச்
சீதள வாயாலே தெளிவதற்குச் செப்பியவா. (13)

நாயின் கழுத்தினுக்கு நல்லாரம் வாய்த்ததுபோல்
தீயவினை யேனருந்தத் தெள்ளமுதந் தந்தவா. (14)

வேதன்மால் காணாத மெய்கண்ட நாதனார்
பாத நாங்காணப் படிமிசையே வந்தவா. (15)

மெய்கண்ட நாதனார் மேதினிமேல் வந்தருளக்
கைகண்டோம் வீட்டின்பங் காட்சி யறக்கலந்தே. (16)

தீராத பொய்யவித்தை திருமாந் தீர்ந்ததற்பின்
ஓரா வுணர்வுடம்பா யொன்றுபட நின்றவா. (17)

குருவொழிந்து தெய்வங் குவலயத்திற் கொள்ளார்
இருவ ரறியாத விறைநிறைவி லேய்ந்தவா. (18)

காணீர் திருமேனி கண்ணாரக் கண்குளிரப்
பேணீ ரவர்பதத்தைப் பேசீ ரவர்புகழே. (19)

அண்டங் கடந்த வறிவுருவைப் பாருங்கோள்
தொண்டர் புடைசூழ்ந்த சோதிதனைப் பாருங்கோள்.

ஆனந்த நாட னருள்மேனி பாருங்கோள்
தேனுந்து வாயாரச் செப்புதலைக் கேளுங்கோள். (21)

எண்ணாத வின்ப விறையுருவைப் பாருங்கோள்
கண்ணால் வினைதீர்த்த காரணரைப் பாருங்கோள். (22)

வாக்கிறந்த வின்ப வடிவதனைப் பாருங்கோள்
நோக்கரிய நோக்குடைய நுண்ணியரைப்பாருங்கோள்.

திருமா லயனறியாத் தேசிகரைப் பாருங்
கருமா லொழித்தாண்ட காற்கமலம் பாருமே. (24)

செய்தற் கரியதவஞ் செய்தாலுந் தேவர்கட்கு
மெய்தற் கரியபிரா னெய்தியவா பாருமே. (25)

திரா மலங்கெடுத்த சிற்பரரைக் காணுங்கோள்
வாரா வருளருள வந்தவரைக் காணுங்கோள். (26)

பிறவா நெறிகாட்டும் பிஞ்ஞகரைக் காணு
மறவாத பேரின்பம் வைத்தவரைக் காணுமே. (27)

மண்ணிற் பிறந்து வருந்தாமை வான்கருணை
கண்ணிற் பணிவித்த காரணரைக் காணுமே. (28)

வேறு.

அல்ல லறுத்தமை பாரீர் அண்ண லிருந்தமை பாரீர்
சொல்லை விடுத்தமை பாரீர் சோதி யெடுத்தமை பாரீர்.

மாயை கழன்றமை பாரீர் வல்வினை விட்டமை பாரீர்
தூய வறிவரைப் பாரீர் தோன்றாத் துணைவரைப்பாரீர்.

என்னை யளித்தமை பாரீ ரென்னுள் இருந்தமை பாரீர்
தன்னை யளித்தமை பாரீர் தகைவற நின்றமை பாரீர்.

பூதங் களைந்தமை பாரீர் பொய்யுரை மாண்டமைபாரீர்
நாத மொழிந்தமை பாரீர் நாமற நின்றமை பாரீர். (32)

ஆசை யகன்றமை பாரீ ராணவம் விட்டமை பாரீர்
தேசு நிறைந்தமை பாரீர் தேசிகர் தேசரைப் பாரீர்.

வாதனை போனமை பாரீர் வாழ்வுபொய்யானமை பாரீர்
பேதைமை பேர்ந்தமை பாரீர் பேதைமை போனது பாரீர்.

உருவ மிறந்தமை பாரீ ருணர்வுரு வானமை பாரீர்
அருவ மிறந்தமை பாரீ ரானந்த மானமை பாரீர். (35)

போத மிறந்தமை பாரீர் பூரண மானமை பாரீர்
வேத முடிவரைப் பாரீர் மெய்கண்ட நாதரைப் பாரீர்.

ஆகம சீலரைப் பாரீர் அம்பல வாணரைப் பாரீர்
ஏக னனேகனைப் பாரீர் இன்ப வுருவனைப் பாரீர். (37)

அறிவுக் கறிவனைப் பாரீ ரறிவுக் கதிதனைப் பாரீர்
செறிகைக் கினியனைப் பாரீர் தேசிக தேவனைப் பாரீர்.

சேரப் படைத்தமை பாரீர் சேர வளித்தமை பாரீர்
சேரத் துடைத்தமைபாரீர் செய்யாச்செயலனைப்பாரீர்.

உள்ளும் புறம்பனைப் பாரீ ரொருதன்மையாளனைப்பாரீர்
தெள்ளத் தெளிவனைப் பாரீர் தேறலிற்றேறனைப்பாரீர்.

சுட்ட விருந்தமை பாரீர் சுட்டற நின்றமை பாரீர்
கிட்ட வெளியனைப் பாரீர் கேளிரிற்கேளனைப்பாரீர் (41)

கருணை யுருவனைப் பாரீர் கண்ணரு ளாளனைப் பாரீர்
இருண்மல மற்றமை பாரீ ரின்புற் றிருந்தமை பாரீர்.

எல்லாம்பொய்யானமைபாரீ ரின்பமெய்யானமைபாரீர்
சொல்லாதசொல்லனைப்பாரீர்சொல்லற்றசோதியைப்பாரீர்
சிவமொளிந் தற்றமை பாரீர் சேர்ந்து கலந்தமை பாரீர்
நவமொழிந் துற்றமை பாரீர் நாமவ ரானமை பாரீர்.

வேறு.

இப்போது கண்ட விறையறிவு மென்னுயிருக்
கப்போது மாதார மாகியவா கண்டனமே. (45)

செப்பரிய வுண்மைச் சிவஞான தேசிகரா
யிப்படியே வந்திங் கிருந்த ததிசயமே. (46)

தேன்றரு மானந்தச் செங்கமலத் தாளருள
மானிடர்போன் மண்ணின்மிசை வந்த ததிசயமே. (47)

என்று மருவுருவா யெங்கு நிறைந்தவர் தாம்
இன்றெமக்குத் தேசிகரா யெய்ந்த ததிசயமே. (48)

போக்குவர வற்றிருக்கும் பூரணர்தா மண்ணின்மிசை
யாக்கையுடன் வந்த தறவு மதிசயமே. (49)

எங்கு நிறைந்தவர்தா மேக வுருவாகிச்
செங்கமலத் தாள்வழங்கச் சேர்ந்த ததிசயமே. (50)

நிகழ்காலத்திரங்கல் - முற்றும்.



## மூன்றாவது,

## வருகாலத்திரங்கல்.



தோன்றி மறையுமிந்தத் தொல்லுலகு தோன்றாம
லான்ற வறிவுநா மாய்விடுவ தெக்காலம். (1)

ஆரணன்மால் காணா வறிவா யகண்டமுமாம்
பூரணத்துக் குள்ளே புகுவதினி யெக்காலம். (2)

கனவு நனவென்று காணமல் மெய்யி
னினவு கனவற் றிருப்பதினி யெக்காலம். (3)

வேதன்மால் காணாத வேறற்ற வீட்டின்பம்
போதமால் கொண்டு புரையறுவ தெக்காலம். (4)

காண்கின்ற தெல்லாங் கலந்த சுகமாகப்
பூண்கின்ற போதப் புரையறுவ தெக்காலம். (5)

ஒன்றுபட நின்ற வுணர்வே யுணர்வாகி
நின்றபடி நின்று நினைவழிவ தெக்காலம். (6)

ஆரா வமுத மமையா தருந்தியதிற்
பேராம னிற்கப் பெறுவதினி யெக்காலம். (7)

ஒ ஒருகால் வாதனையி னுற்றழுந்தல் விட்டறிவிற்
பூரணமேல் கொண்டு பொருந்துவது மெக்காலம் (8)

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு மாய்நிற்கும்
வீண்பாவந் தீர விளைவதினி யெக்காலம். (9)

அருவு முருவு மருவுருவு மான
வுருமை யொழிந்திடத்தி லுறுவதுவு மெக்காலம். (10)

நீங்காத பேரறிவில் நீங்காம லொன்றுபட்டு
வாங்காரந் தீர வடங்குவது மெக்காலம். (11)

அந்த வறிவகன்றே யானந்த மாலேறித்
தொந்தப் பவத்திற் றுரிசறுவ தெக்காலம். (12)

கேட்டுரைத்த லன்றியே கேளாம லன்றியே
வீட்டிலொரு தன்மை விளைவதினி யெக்காலம். (13)

சொல்லரிய வின்பச் சுகமே சுகமாக
வெல்லையற வொன்று யிருப்பதினி யெக்காலம். (14)

தாயுதரம் புக்க தடுமாற்றந் தீருவதற்
காயு மறிவி லழுந்துவது மெக்காலம். (15)

இந்நாள் நிரையத் திருந்த துயர் தீர
உன்னு வொளியி லொளிப்பதினி யெக்காலம். (16)

ஆக்க மளவற்ற வறிவே யறிவாக
நீக்கமற நின்று நிலையழிவ தெக்காலம். (17)

அஞ்செழுத்தும்வெண்ணீறு மன்பர்திரு வேடமுமென்
னெஞ்சழுத்த மாக நிலைபெறுவ தெக்காலம். (18)

அண்ணல்திருக் கோயிற் கடிமைத் திறமல்லா
தெண்ணுங் கரும மிழிவதினி யெக்காலம். (19)

வேறு.

தூக்கற்ற சோதியினுள்ளே சொல்லற நின்று சுகித்தே
நீக்கற் றிருப்பதெந் நாளோ நித்தத் திருப்பதெந்நாளோ.

ஓருணர் வான வுணர்வுக் குள்ளுணர் வாக வுணர்ந்தே
பார்முதல்நாத மொழியப் பண்பற்றிருப்பதெந்நாளோ.

ஆரணன் வேத மறியா வண்ணல் நிறைவே நிறைவாய்ப்
பூரண னூர்நிறை வாயே போதத்தில் நிற்பதெந்நாளோ.

கண்டதுகண்டதுகண்டே விண்டதுவிண்டதுவிண்டே
கொண்டதுகொண்டதுகொண்டே கொள்கையிறப்பதெந்நாளோ.

கூடுதல் வாடுத லின்றே கூடுந ரொன்றென நின்றே
ஆடுதல் பாடுத லாயே யாய்விடு நாளினி யேதோ. (24)

வேறு.

என்று மெனைப்பிரியா வெம்பிரான் றன்னிறைவி
லொன்று படநின்றே யுண்டழிவ தில்லையோ. (25)

ஆண்ட குருபதத்துக் காட்செய்வ தல்லாது
பூண்ட புலன்வழியைப் போக்குநா ளில்லையோ. (26)

கண்ட வுடம்பெல்லாங் காணும லாருயிர்கள்
கண்டறிவைக் கண்டதனிற் கைகலக்கு நாளேதோ.

சற்றுந் தணவாத தம்பிரா னென்றறியாக்
குற்றந் தணிப்பதற்குக் கூறியிடு நாளேதோ. (28)

இன்றளவு மெந்தை யிணையடியிற் செல்லாமை
நின்றதுயர் தீர நின்றுவிடு நாளேதோ. (29)

பொல்லாத பூதப் புலாலுடம்பிற் கூடாமை
கல்லாத வன்பிற் கலந்திருக்கு நாளேதோ. (30)

பொய்த்தத் துவத்தின் றுவக்கறுத்துப் போற்றரிய
மெய்த்தத் துவத்தில் விழித்துவிடு நாளேதோ. (31)

ஐயோ விதியே யைவருந் தாந்தொலைய
மெய்யே விழித்து விரவியிடு நாளேதோ. (32)

கூறரிய மெய்ஞ்ஞானங் கொண்டபடி கொண்டதன்றி
யாறி யிருந்தங் கலப்பிக்கு நாளேதோ, (33)

மாயப் பிறப்பில் வருந்து மயக்கமறத்
தூய வருட்பரப்பில் தோய்ந்துவிடு நாளேதோ, (34)

பரிபூ ரணந்தன்னிற் பாலமுத முண்டே
இரவுபகல் தேசிகரை யேத்தியிடு நாளேதோ. (35)

குன்றாத ஞானக் குருபரனார் சொற்கேட்டுப்
பொன்றாத வாதனையைப் போக்கிவிடு நாளேதோ. (36)

ஊனமிலா வின்ப வுருவே யுருவாகி
யானெனது நீங்கி யிருந்துவிடு நாளேதோ. (37)

பேறாக வந்தருளுந் தேசிகற்குப் பின்வந்து
மாறா மனத்துயர மாற்றிவிடு நாளேதோ. (38)

என்றுங் குருநாத னிட்டபணி செய்துமிக
நின்றபடி நில்லாத நெஞ்சுவிடு நாளேதோ. (39)

ஆசையெலா மற்ற வறிவே யறிவாகி
யீசனெல்லா மாகி யிருந்துவிடு நாளேதோ. (40)

அவனை யவளை யதுவைக் கருதிச்
சிவனை மறந்திருக்குஞ் சிந்தைவிடு நாளேதோ. (41)

தீதிலா வின்பச் சிவமே சிவமான
போதெல்லாங் காணப் புலப்படுவ தெக்காலம். (42)
காணரிய ஞானக் கடலே யிடமாகத்
தாணுவே தேசிகனே தந்தருள வேணுமே. (43)

முன்புவினை யெப்போது முட்டா தருந்துவபோ
லன்புடனே யின்ப மருந்துதற்கு நாளேதோ. (44)
வேறு நினையாமல் வீட்டின்பத் தின்புற்றே
யாறி யிருந்தருந்த வண்ணலே தந்தருளே. (45)

ஒத்தொவ்வா விந்த வுலகை மறந்துணர்வி
னித்தமாய் நின்றுவிட நின்மலனே தந்தருளே. (46)
அவயோகந் தன்னி லாசையற வென்றுஞ்
சிவயோகத் தானந்தந் தேசிகனே தந்தருளே. (47)
சத்திய ஞானமனந் தானந்தந் தானாகி
நித்தமாய் நின்றுவிட நின்மலனே தந்தருளே. (48)

வருகாலத்திரங்கல் - முற்றும்.



## நான்காவது,
## அநுபூதிவிளக்கம்.



தேனிவரு மின்பச் சிவானுபவ முரைக்க
வானை முகவ னடிபணிந்து போற்றுவாம். (1)
சீராருங் கங்கைநகர்த் தேசிகர்கோன் மெய்கண்டான்
வாராதே வந்துரைத்த வார்த்தைவளங் கூறுவாம். (2)
திரப் பவந்துடைத்த தேசிகர்கோன் மெய்கண்டா
னூர வுரைத்த வநுபூதி கூறுவாம். (3)
குற்றமிலா மெய்கண்டான் கூறுஞ் சிவானுபவஞ்
சிற்றம் பலநாடி செப்பியவா செப்புவாம். (4)
தீதிலருட் காழிச் சிற்றம் பலநாடி
வேதத் தலையுரைத்த மெய்ப்பொருளைக் கூறுவாம். (5)
சீகரமாங் காழிநகர்ச் சிற்றம் பலநாடி
யாகமநூ லான வநுபூதி கூறுவாம். (6)
மாசார் பசுபாச மாசிலா வண்பதியென்
றாசான் விளக்கு மநுபூதி கூறுவாம். (7)
பதிபசு ப்ாசப் பரப்பறிந்து பார்க்கப்
பதிபசு பாசப் பரப்பா யிருந்ததே. (8)

சரியை முதனற்கிரியை சங்கற்ப யோகத்
தொருமைதனி னின்றருளு முற்றவநு பூதியிதே. (9)

கேட்ட லுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவு
தேட்டமறத் தேடுஞ் சிவானுபவஞ் செப்புவாம். (10)

அண்டபிண்டங் கண்டேன் அருங்கருவி கண்டாலென்
கண்டவுயிர் கண்டாலென் கரந்தவுயிர் காணுதார். (11)

மண்ணீ ரனல்கால்வான் வண்சுடர்கள் மன்னுயிர்க
ளெண்ணீர்மை யான சிவனுருவ மல்லவோ. (12)

எட்டுருவு மென்று மிறையுருவ மென்னுமது
சிட்டர் மறையுஞ் சிவாகமுஞ் செப்பியதே. (13)

ஆதலா லண்ண லறிவுநினை வொழிந்திங்
கேதுநாம் வேறென் றியலுமது கவியே. (14)

எல்லா மிறையுருவென் றிப்படியே காண்பதன்றி
நில்லா விடமிதென்று நீக்கநிலை கூடுமோ. (15)

சுருக்கம் விரித்தலறச் சோதி நிறைவிற்
பெருக்கவிழித் தாலலது பேரின்பங் கூடுமோ. (16)

எங்கே யிறையைநா மெட்டனையும் விட்டதுதா
னங்கே யழுந்தி லநுபூதி கூடுமே. (17)

இந்திரியத் தோடே யியைந்த விடயத்தி
லந்தரித்த போது மவனிடமே யல்லவோ. (18)

பற்று மறுதியுடன் பற்றிப் பயின்றுறு
முற்றவிட மெந்தை யுணர்வுருவே யல்லவோ. (19)

ஆசை யறிவிற்ற லானவிட மெல்லாநம்
மீசனிட மல்லா தெமக்கோரிட மில்லையே. (20)

சென்றவிட மெல்லாஞ் சிவமென்றல் மானதமோ
சென்றவுயிர் நின்ற சிவனிறைவி னல்லவோ. (21)

இன்றே விறையுயிருக் கிப்படியே நின்றநிலை
யொன்று வொழியா வொருவ னுறவெமக்கே. (22)

நினைப்பு மறப்புமிந்த நின்மலனே யல்லாமற்
றினைத்துணையு மில்லையென்று தெய்வமறை கூறியதே.

இனியகல்வ தெங்கே யிருவினையா லெங்குந்
தனியகல நின்றருளுந் தம்பிரான் றனலவோ. (24)

வெறுப்பு விருப்பென்று வேறுரைத்தா லெந்தை
யுறுப்பிற்குறையாதோவுணர்வுடையோர்சொல்லுவரே.

வேண்டலும்வேண் டாமலுமாம் வினையும் வினைப்பயனு
மாண்டகையோ டற்ற வநுபூதி யானதே. (26)

பாசப் பரப்பும் பசுவும் பராபரையு
மீசனலா தொன்று மினிப்பிறக்க வில்லையோ. (27)

ஈண்ட வளம்புக் கிலவணமே யானதுபோற்
பூண்ட வுயிரெல்லாம் பொருளா யிருந்ததே. (28)

எரிசுத்தங் கொண்ட விரும்புபோ லெங்கும்
பரிசுத்த மான பராபரமே யானதே. (29)

போதையார் தாளிணைகள் புன்றலைமேல் வைப்பளவில்
வேதையா யெங்கும் விமலனரு ளானதே. (30)

பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்ப்பளவிற்
பேய்த்தேர்போ லில்லையாய்ப் பேரறிவே கண்டனமே.

பொய்யெங்கே மெய்யெங்கே போதம் பொறியெங்கே
மையெங்கே யெங்கு மலர்ந்த சுகமொழிந்தே, (32)

மண்முதலாம் பூத வகுப்படைய வென்னறிவோ
வண்ண லருளே யடங்க விழுங்கியதே. (33)

எண்ணரிய பூதமெலா மென்னுடைய தம்பிரான்
கண்ணி லடங்கியிடக் காணவரி தானதே. (34)

வானடையத் துற்றவிருள் வானொளித்த நேரம்போ
லான பரமசுக மல்லா தடங்கியதே. (35)

அந்தகனுக் கிந்த வவனி யொளித்ததுபோல்
வந்தவருட் கேவலத்தில் வைய மொளித்ததுவே. (36)

என்றுங் குருட னிருடர்த் திரவி வர
நின்ற நிலைபோல நிறைவொழிந்து கண்டிலமே. (37)

அன்றே யிறைக்கடிமை யையமிலை யையமிலை
யென்றே மறைமொழிதற் கின்றே யிசைந்தனமே(38)

சேரச் சிவமாகிச் சிந்தித்தார் சிந்தித்தார்
பூரணத்தி னுள்ளே பொருந்தினவ ரல்லவோ. (39)

விட்டுவிடு மேதினியில் வேறு பொருள்கோடல்
கிட்டினவ ரானந்தக் கேள்வர் தமக் கல்லவோ. (40)

பத்துத் திசையும் பதினாலுலக மெங்குந்
தத்திக் கரைபுரளுஞ் சாகரமே யல்லவோ. (41)

இந்திர சால மிடுமௌவு மெய்யாகி
யந்தரப்பூ வானதுபோ லவனிநமக் கானதுவே. (42)

பொய்த்திரிவு மிந்தப் புவியென் றுணர்வளவின்
மெய்த்திரிவு தீர வெளியா யிருந்ததே. (43)

அச்சமறுத் தெல்லா மருளாகித் தந்தருளி
வைச்சவரு ளானந்த வாரிதியி லாழினமே. (44)

ஓதலுட னென்று முணர்த லினியமையு
மேதுங் கருதாமை யேகாந்த மாய்விடுமே. (45)

செய்தவங்க ளாலேநந் தேசிகனார் வந்தருள
வெய்துமின்பம்போது மினித்தவங்கள்வேணுமோ (46)

பருவங் குறித்துப் பரமவொளி வந்திவ்
வுருவந் தரித்தா லொருதவந்தான் வேணுமோ. (47)

செய்தற் கரிய தவஞ் செய்ததற்பி னல்லவோ
வெய்தற் கரியபிரா னென்போல வந்ததுவே. (48)

பார்த்தும் பரிசித்தும் பாதுகைகள் சூடியென்று
மேத்துகுரு நாதர் தம்மை யின்புருவ மீதென்றே. (49)

கச்சி நகரிலன்று கம்பர்தமைக் காரிகையா
ளிச்சித்துப் பூசித்தா ளெடுத்ததிரு மேனியன்றோ. (50)

அருளா வடுதுறையி லாவுருவா யம்மை
யிருடீரப் பூசித்தா ளெடுத்ததிரு மேனியன்றோ. (51)

கண்ணனிரு கண்ணிடந்துங் கண்ணப்பர் கண்ணிடந்து
மெண்ணமறப் பூசித்தா ரெடுத்ததிருமேனியன்றோ. 52

வேதனுட னிந்திரனு மேம்பட்ட தேவர்களு
மேதமறப் பூசித்தா ரெடுத்ததிரு மேனியன்றோ. (53)

கந்தன் கணபதியுங் கற்ற விருடிகளும்
எந்தையெனப் பூசித்தா ரெடுத்ததிரு மேனியன்றோ.

கொண்டவடி வெல்லாங் குருவடிவே யென்றென்று
தொண்டர்பலர் பூசித்தார் சொல்ல முடியாதே. (55)

எவ்வடிவு மிந்த விறைவடிவே யாதலினு
லிவ்வடிவு பூசிக்க யாமுரைக்க வேணுமே. (56)

சீருருவங் கொண்டருளுந் தேசிகன்செம் மேனிபோ
லோருருவி னின்றிங் குணரா துணர்த்தினனே. (57)

வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவானுபவந் தானருந்தப் பெற்றனமே. (58)

அருந்த வருந்த வமையா தமுதந்
தருந்தமியைப் பாவியேன் றனைக் கொள்ளுவதே (59)

ஆயவிய மில்லா வகண்டபரி பூரணத்தே
தூய குருவுருவந் தோன்றுமற் றோன்றியதே. (60)

தாய்முலைவாய்வைத்திரங்கத்தன்னியம்வந்தூறுவபோற்
றாயதுணைத் தாளமுந்தத் தூயசுகந் தோன்றுவதே.

தோன்றுமை தோன்றியதிற் சுகமே சுகமாகித்
தோன்றுமை தோன்றியதிற் றோய்ந்து துளைந்தனமே.

சைவப் பெருமான் றவராச ராசனூர்
பைய வருள் மெய்கண்டான் பாதமலர் வாழியதே (63)

கங்கைநகர் மெய்கண்டான் காற்கமலஞ் சென்னியின்மேற்
றங்கவிரு ணீங்கியரு டானுந் தபோதனரே. (64)

வாழி திருநீறு வாழிதிரு வஞ்செழுத்து
வாழி சிவாலயங்கள் வாழிதிரு வேடமே. (65)

அநுபூதிவிளக்கம் - முற்றும்.



## ஐந்தாவது,
## தாலாட்டு.

உலகுபுகழ் மெய்கண்டா னுண்மைஞா னகரத்தின்
பலனுணர்ந்த சிற்றம் பலநாடித் தேசிகனே. (1)

வாயே மனமே வரையற்ற வோருரையா
னீயேநா னென்று நிலைமை யளித்தானே. (2)

தெய்வநீ ராடிச் சிவாலயங்கள் கைதொழுது
மெய்வருந்தா தப்பாநீ நானென்ற வேதியனே. (3)

கையில்விரற் றேயாமல் கண்சிமிட்டி நோகாம
லையமுளத் தாக்காம லாண்டபரி பூரணனே. (4)

பட்டினி விட்டுப் பலநாள் வருந்தாமே
யிட்ட மெனக்கு முனக்குமென்ற வீசுரனே. (5)

கோயில்வலம் வந்துபத கோகனகம் வாடாதே
நேயவருள் வெள்ளம் நிறைவித்த வாண்டகையோ. (6)

பேராதர வாகப் பேரறிவு போதித்த
சீராசைச் சிற்றம் பலநாடித் தேசிகனே. (7)

நீயறிவா னந்தனு நாமிதனை நீக்கியதே
காயவறி வென்றருளாற் காட்டுங் கருணையனே. (8)

கண்ணொரு மூன்றுங் கனற்கரமு மைம்முகமு
மண்ணவர்க்குங் காணு வகையொளித்து வந்தானோ.(9)

தர்க்கம் படித்துத் தலைவெடித்துக் கொள்ளுவதைக்
கற்கவினை யாதருளைக் காட்டுங் கருணையனோ. (10)

கைம்மாறு போதமறக் காசினியோர் நூலைவிட்டு
நம்மாணை சும்மா விருவென்ற நாயகமோ. (11)

ஐம்மலமு மைந்தொழிலு மான்மாவு மையறிவும்
பொய்யலவே யென்றிதனைப் போதித்த புண்ணியனோ.

போன வழியெல்லாம் போகா தொடியெறிந்து
தானவனுக் கும்பெருமை தந்த தவப்பயனோ. (13)

பார்க்கிற் சுகமதுவாய்ப் பாரா விடினுலகா
யார்க்கு மளப்பரிய வானந்த வாரிதியோ. (14)

அஞ்சுமலத் தானு மழிவா யிருந்தவெனை
அஞ்சுமல நீக்கி யழியாமல் வைத்தானோ. (15)

பேதப் படுத்தல் பிராந்திதுவே மும்மலமும்
வேதப் பொருண்முடிவே நீயென்ற வேதியனோ. (16)

சீர்புறவ மேனைத் திகழு மெனதுள்ள
மூரதுவாய்க் கொண்டிருந்தே யென்னையொழித்தானோ.

சேர்வையாந் தொண்டரிடஞ் சேரும் பவக்கடலைப்
பார்வையான் மாற்றிப் பதியாக்கி வைத்தானே. (18)

பதிக்குப் பதியாய்ப் பரத்துக்கு மப்பாலாய்
விதிக்கும் விதியாய் விதிக்கும் பெருமானே. (19)

தேவர் முனிவர் சித்தாந்தத் தோர்மறையோர்
மூவரவர்க் கப்பாலு மூவா முழுமுதலோ. (20)

எங்கெங்குந் தானாகி யென்போ லுருக்கொண்டு
மங்கும் பிறவிதனை மாற்றவந்த வள்ளலோ. (21)

தாளை வணங்கத் தலையாம் பதங்கொடுக்கும்
வேளைநகர்ச் சிற்றம் பலநாடி வித்தகனே. (22)

காணற் கரியானே கண்மூன் றுடையானே
தாணுவோ சங்கரனே சச்சிதா னந்தனே. (23)

மேலுக்கு மேலாய் விருப்பாய் வெறுப்பாகி
நூலுக்குங் காண்பரிய நுண்ணியனே வையாநீ. (24)

சொன்ன கமத்துஞ் சுருதிக்கு மெட்டாத
தன்னை தனமெனக்குத் தந்த தனிச்சுடரோ. (25)

ஆலயங்கள் தேடி யலையாதே யுன்னிடத்தே
சாலவுநீங் காதிருப்போஞ் சத்தியமீ தென்றூரோ. (26)

மானங் குலைந்து மதியழிந்து நான்கெட்டால்
நானென்று நீயென் றிரண்டில்லை யென்றாரோ. (27)

பேறிழ வின்பம் பிணிமூப்புச் சாக்காடென்
றாறுங் கருவி லமைத்ததுனக் கென்றாரோ. (28)

சாதி மதத்தாலுஞ் சமய மதத்தாலுங்
கோதிலா ஞானத்தைக் கூடவரி தென்றாரோ. (29)

வேட்டுவன்வாய்ப்பட்டபுழு வேட்டுவனாந் தன்மைபோல்
நாட்டநம்மேல் வைக்கிலை நற்சிவமே யென்றாரோ. (30)

உரையு முயிரு முளமு முணர்வுங்
கரையிலன்றிப் போதத்தாற் காணவரி தென்றாரோ. 31

கண்டார்க்குக் கண்டதாய்க் காணார்க்குக் காணாதாய்க்
கொண்டார்க்குக் கொண்ட குறியாகி நின்றாரோ. (32)

அண்டாண்ட பூரணமா யப்பாலைக் கப்பாலாய்க்
கொண்டுமெதிற் கொண்டறியாக் கொற்றவனைச் சொன்னார்.

எல்லா வுயிரு மெனதுருவே யென்றுரைத்து
நல்லா ரினத்தில் நடித்தானைச் சொன்னார். (34)

கள்ள வழியெல்லாங் கமலவழித் தீமூட்டி
உள்ள மழுக்கறுத்த வொண்பொருளைச் சொன்னார்

முத்துயரு மூவுயிரு முப்பாழுங் காட்டியெனை
யத்துவித மாக்கு மருளுருவைச் சொன்னாரார். (36)
ஆணுகிப் பெண்ணு யலியா யதல்லவாய்த்
தோணுத் துணையான சோதியனைச் சொன்னாரார். (37)
ஒப்பிலா ஞான வுருவே யுருவாகி
முப்புரத்தைச் சுட்டழித்த முக்கணனைச் சொன்னாரார்.
உண்டி யுறக்க மொழியாப் பிணிமூப்புக்
கொண்டு மகிழ்ந்த குணக்கடலைச் சொன்னாரார். (39)
மேலாந் திணையிரண்டாய் மெய்யா யுயிர்க்குயிராய்
நாலாம் பராபரமாம் நாயகனைச் சொன்னாரார். (40)
உள்ளங்கண்ட வெல்லா மொன்றாகி நின்றவொளி
யுள்ளங் குதிகொண் டொருமுதலாய் நின்றாரோ. (41)
செய்வினைக ளெல்லாந் திருவினைகள் தாமாக்கி
யுய்யவெனை யாண்டருளு முத்தமனைச் சொன்னாரார்.
வன்னம் புவனம்வருந் தத்துவிதமாங் கலையென்
றுன்னுமிட மென்னிடமென் றுற்றாரைச் சொன்னாரார்.
அண்டபிண்டமுள்ள மருளுருவே கோயிலெனக்
கொண்டொருவ ரும்மறியாக் கொற்றவனைச் சொன்னாரார்.

இன்னவடி வின்னநிற மின்னபடி யென்றறியா
துன்னு மிடத்தி லுதித்தானைச் சொன்னாரார். (45)

பார்த்து நினைத்தும் பரிசித்தும் பாவமறுத்
தேத்துநினை வைக்கொடுத்த வெங்கோனைச் சொன்னாரார்.

சிந்தையிலுற் றார்க்குஞ் சிவலோக வீடளித்துப்
பந்த மகற்றும் பராபரனைச் சொன்னாரார். (47)

பேதாதி பேதமாய்ப் பேரறிவா மோருரையே
யாதார மாகுமென்ற வற்புதனைச் சொன்னாரார். (48)

மூன்றுவினை கண்டார்க்கு முற்றுங் கெடவகற்றித்
தோன்றுவினை மாற்றுஞ் சுகோதயமே கண்வளரீர். (49)

மெய்ஞ்ஞானக் கண்வளர மெய்கண்டான் மெய்வளர
வஞ்ஞானக் கண்ணகற்று மையர் திருக் கண்வளரீர்.

சுத்த மசுத்தஞ் சுகமசுக மானந்த
நித்த மநித்தமென நின்றோரே கண்வளரீர். (51)

முத்தொழிலாற் செய்த முறையுலகெ லாம்வளர
வத்தரே சீராசை யையரே கண்வளரீர். (52)

வையம் வளர மறையோர் தொழில்வளர
மெய்யும் வளர வருள் மேகமே கண்வளரீர். (53)

சொல்லுக் கடங்காச் சுகாதீத மெய்ப்பொருளே
யல்ல லறுத்தாண்ட வாதியே கண்வளரீர். (54)

இன்ப மிரண்டு மியற்றியதற் கின்பமுமா
யன்பு நிறைந்த வருட்கடலே கண்வளரீர். (55)

சமையத்தில் விழாமற் றற்பரத்தி லாழாம
லமையக் கருணைதந்த வாதியே கண்வளரீர். (56)

சத்திமல மைந்துந் தருவதுநாம் போக்குதல்நா
முத்தியுநா மென்ற முழுமுதலே கண்வளரீர். (57)

கீழுலகு முற்றுங் கிளரொளியாய் நின்றபதம்
வாழவடி யேன்முன்னே வருந்த நடந்தாரோ. (58)

வேதாவு மாலும் விளம்புதற்கு மெட்டாத
போதானந் தச்சொருபப் புண்ணியநீயென்றாரோ. (59)

கண்ணுலுங் காணுக் கருத்துக்கு மெட்டாதா
யுண்ணடி லுண்ணு முத்தமரே கண்வளரீர். (60)

ஓங்கா ரத் துள்ளொளியி னுள்ளே தனைக்காட்டி
நீங்காமற் றாங்கவைத்த நிட்களனார் வாழியரோ. (61)

சித்தாந்த சித்த விகற்பமது தீரவுடல்
முத்தனா மென்ற முழுமுதலே கண்வளரீர். (62)

ஒன்றிரண்டு மூன்றற் றொருநாலொ ரைந்தொன்பா
னின்றதெல்லாந் தானாகி நின்றாரே கண்வளரீர். (63)

தாலாட்டு - முற்றும்.



ஆறாவது,

வெண்பா.



செய்யபுகழ் மேனியனைத் தேவர்தொழுங் கோவை
மெய்யருளும் பொய்யா விநாயகனை—வையமெலாங்
காத்தானை யார்க்கு மிளையானைக் கந்தற்கு
மூத்தானை நாவே மொழி.

என்னை வினையறியா யானு மதுவறியேன்
முன்னைவினை கூடல் மொழிந்தருளா—யென்னத்
திருவார் பொழிற்காழிச் சிற்றம் பலவன்
றருவானு நானென்றான் றான். (1)

கண்ணுக்குக் கண்காட்டா காட்டுங் கதிரொளிகள்
பெண்ணுக்குப் பெண்விளையாப் பேரின்ப—மெண்ணெக்கச்
சொல்லா ருயிர்க்குயிராய்த் * தோய்ந்துணர்த்தி யின்பருத்த
வல்லான்சிற் றம்பலவன் வந்து. (2)

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
யொன்றுபட வேண்டாவே யுள்ளத்தே—நின்றநிலை
கண்டாயே யெங்குங் கதிரொளிகண் காயமெலா
முண்டான தன்மைபோ லுற்று. (3)

* தோய்ந்தருந்தி யென்றும் பாடம்.

உற்றுணர்வுக் குள்ளே யொழியா வுணர்வுணர்த்தப்
பெற்றனையே யெவ்வுயிர்க்கும் பேறதனை—மற்றதுதான்
மாண்டதே பார்ப்பளவின் மாளா நிறைவுநம்மைப்
பூண்டதே யென்றே புகல். (4)

தங்களைநா மின்பத் தடங்கடலின் மூழ்குவித்தோ
மங்குலகந் தீர மறைப்பித்தோ—மிங்குலகில்
வாராதே வாதனையால் வந்தாரே யாமாகிற்
பாராதே பாரீர் பரம். (5)

பக்கமொடு கீழ்மேலு மில்லாப் பராபரத்தை
யொக்க நிறுத்தியதி லொன்றாக்கி—மிக்க
சிவபோக நல்கினன் சிற்றம் பலவ
னவபோகஞ் செல்லா வணைத்து. (6)

கருவி கரணமுடன் கைகலந்து நின்று
மருவும் விடயமெலாம் வாங்கி—யருகாமற்
சீவிப்பாய் நீயென்றான் சிற்றம் பலநாடி
பாவித்தே பாராமற் பார்த்து. (7)

கருவி கரணங்கள் கண்டுணர மாட்டா
மருவியதி லான்மாவும் வாரா—குருபரன்றான்

சிற்றம் பலநாடி தென்கா ழியர்பெருமான்
உற்றுணர்த்தாப் போதென் றுணர். (8)

அட்ட வராகமுட னைந்துவச னாதிகளு
மொட்டு முயிர்ச்செயல்க ளோரிரண்டும்—விட்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (9)

வாக்காதி நான்கும் வருங்குணங்க ளொன்பானும்
போக்காமூன் றேடணையும் போனதே—நோக்கி
னிணங்கரிய சிற்றம் பலநாடி தாளை
வணங்கிநினைந் தெப்பொழுதும் வாழ்த்து. (10)

ஆசையங்க ளைந்துமூன் றுறும் வியாதிகளுந்
தேசமல மைந்துஞ் செயகோச—மோசைதருந்
தாதுக்க ளேழுந் தணத்தான்சிற் றம்பலவன்
மேதக்க காழிநகர் வேந்து. (11)

மண்டலங்கள் மூன்று மருவுமா றுதாரங்
கொண்டு திரியுடம்பின் கூறிரண்டும்—விண்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (12)

கரையிறந்த பேரறிவு கண்டது நீங்கி
யுரையிறந்த வானந்த முண்டு—திரையிறந்த
வாரிதிபோ னில்லென்று வைத்தான்சிற் றம்பலவ
ளுருதவு வாரிவன்போ லாங்கு. (13)

என்னை மறைத்தவிரு ளெங்கேனும் போனதோ
நின்னருளிற் கெட்டதோ நின்றதோ—முன்னைத்
தவகுருவே சிற்றம் பலவனே சண்பைச்
சிவகுருவே நாயேற்குச் செப்பு. (14)

அல்லார் பொழிற்காழி யம்பலவன் றன்வார்த்தை
யெல்லாஞ் சிவமா யிருந்ததே—தொல்லாழி
வெள்ளம் பரந்தக்கால் வேறுபுனல் தோன்றுபோ
லுள்ளஞ் சிவத்தே யொளித்து. (15)

குலாலன் றிகிரி சுழல்வண்டு கொள்ளி
யுலாவுங் கறங்குவரி யொத்தே—மலாதியா
லாரா வடியே னுலகி லலம்வருகை
பாராய் திருவேகம் பா. (16)

மாதாவா மாயை மரித்தாள் மரித்திடத்தே
பேதமிலாப் போதன் பிறந்தானே—யாதலா
லாசூசந் தானிரண்டு மானேனுன் பூசிக்கத்
தேசாசிற் றம்பலவா செப்பு. (17)

வேலையலை போலெனக்கு மேதினியில் வாதனைநோய்
வேலை யலையெறிந்து விட்டதே—வேலைபோல்
நித்திய கோசரத்தி னில்லென்றான் காழிநக
ரத்தன்சிற் றம்பலவ னாங்கு. (18)

பாசமுநீங் காமற் பதியிற் கலவாம
லாசறுநன் முத்தியெனக் காக்கினான்—தேசிகர்கோன்
செந்நெல் வயற்காழிச் சிற்றம் பலநாடி
தன்னருளாக் குண்டோ தரம். (19)

காய மவரவராய்க் காணுங் கருத்தொழிந்து
காயமொழிந் தான்மாவைக் காணேனே—நாயனே
தென்புகலித் தேசிகனே சிற்றம் பலவனே
யென்புகல்வே னென்செய்கே னியான். (20)

காயமொழிந் தான்மாவைக் கண்ட முறைமைபோற்
றாயவரு டோன்றவுயிர் தோன்றும—லேயதற்குத்
தந்தருள்வன் சிற்றம் பலநாடி சண்பையர்கோன்
வந்தருளப் போனவா மாண்டு. (21)

உற்றவுயிர் தோன்றும னுள்ளுணர்வு தோன்றுவபோற்
பெற்றவரு டோன்றுமற் பேரின்ப—முற்றுமிகக்
காட்டினான் சிற்றம் பலநாடி காழியர்கோன்
வாட்டினான் வாதியா மல். (22)

நானு விதத்தா லு நானினைந்து பார்ப்பளவி
லானு வறிவழி னல்லாது—வானுடுந்
தென்புகலிச் சிற்றம் பலநாடி சேர்த்தளித்த
வின்பருந்த வாரா தெமக்கு. (23)

சிற்றம் பலநாடி சீபாத வல்லபங்கள்
சொற்றிகழும் பைங்கிளியேசொல்லக்கேளுற்றவருங்
காணாது காட்டியது காணாது காட்டியது
காணாது காட்டியது காண். (24)

ஆணவம்போ மாயைபோ மான விருவினைபோம்
நாணவரு மாமாயை நாணமும்போம்—வேணுபுரத்
தேசிகர்கோன் சிற்றம் பலநாடி சேவடியைப்
பூசைசெய யாம்பூண்ட போது. (25)

ஆற்றவரி தாற்றவரி தையகோ வாணவநோய்
வேற்று விகார மிகக்கொடிது—மாற்றுதற்குத்
தேசிகர்கோ னென்பளவிற் சிற்றம் பலநாடி
மாசிதுவோ வென்றுரைத்தான் வந்து. (26)

தேனேயுங் கண்மலராற் சிற்றம் பலநாடி
தானேதன் பேரின்பந் தந்தானே—யூனே
நெருங்கியக்கா லல்லாது நீளமிழ்தந் தாரீர்
கரும்பினங்கா ளுங்களுக்கென் காண். (27)

அன்றிலே யின்ப வகண்டபரி பூரணத்தி
லொன்றிலே யென்னை யொழித்தவரார்—சென்றுமதித்
தேவாகுங் காழிநகர்ச் சிற்றம் பலநாடி
காவாமற் காத்தருள்வோன் காண். (28)

கான மயிலே கடல்சூழ்ந்த காழிநகர்த்
தேனவிழ்தார் சிற்றம் பலநாடி—மானிடரி
லென்றுட லாடாதே யின்பந் திகழ்மன்றி
லன்றாடி னென்றே யாடு. (29)

பலவின் சுளையருத்தும் பைங்கிளியே யென்றன்
மலவன் கிளையறுக்க வல்லான்—றலமுழுதுஞ்
சென்று தொழுங்காழிச் சிற்றம் பலநாடி
யென்றொருவன் காணு மிதற்கு. (30)

தேடும் பொருளுடனே சேமித்து விட்டனரோ
நாடுந்தம் மூர்பேரு நானிலத்தோர்—வீடறிஞர்
சேமமே பொற்காழிச் சிற்றம் பலநாடி
நாமமே கேட்பதல்லால் நாம். (31)

சர்க்கரையென் றுலிரதந் தானுமோ நெஞ்சமே
சிற்பரன்சிற் றம்பலவன் றேசிகர்கோன்—நற்பதத்து
ணில்லாயே யாகில் நெடுநாளே நீகற்ற
சொல்லாலே யாமோ சுகம். (32)

நூல்கொண் டுணர்வனவும் நண்ணுணர்வாற் சொல்வனவும்
பால்கொண்டு விற்பான் பயன்போலுங்—கால்கொண்
டறியாமை மாற்றுசிற் றம்பலவன் வைத்த
நெறியே நிலையாக நில். (33)

என்பிறவித் * துன்பறுப்ப தென்றோசிற் றம்பலவா
நன்பிறவி யென்போல நண்ணினு—யின்புறவே
பொய்யாத நால்வர்க்கும் போதித்த மோனவுரைக்
கையா கருணு கரா. (34)

விகற்பமிலா ஞானம் விமலனுர் ஞானம்
விகற்பமெலா மிக்கசடந் தானும்—விகற்பமெலாம்
என்னுலே யென்று னெழிலார்சிற் றம்பலவ
னுன்னுலே யென்றுரைத்தே னுற்று. (35)

போக்குவர வில்லைப் புனிதற்கு மாயைக்கும்
போக்குவரவாருயிர்க்கோபோற்றென்றேன்போக்குவர
வங்கங்கே யென்று னருளாற் சிற்றம்பலவ
னிங்கிங்கே யென்றுரைத்தே னியான்.  (36)

இன்றகன்று நின்றீ ரினிக்கூட வாரீரே
யன்றகலா மும்மலங்க ளல்லவோ—துன்றுபவந்

---

* துன்பகற்றல் என்றும் பாடம்.

தீர்த்தருளுஞ் சிற்றம் பலநாடி காழியர்கோன்
பார்த்தருளக் * கண்டுபெயப் பட்டு. (37)

யானெனது நீக்கி யிறைநிறைவி லொன்றாக்கி
யானெனது நீங்கா திருத்தினான்—யானென்று
தங்காதவர் போற்றுஞ் சண்பைச்சிற் றம்பலவன்
மங்காமற் காத்தாண்ட வாறு. (38)

உன்னுவது முன்னாலே யுன்னா தொழிந்துநிலை
மன்னுவது முன்னாலே மற்றில்லை—யென்னுமது
நானறியேன் சிற்றம் பலநாடி நானெனநீ
தானறிவை யாரறிவார் தான். (39)

இறந்துபிறந் தெய்த்த விளைப்பொழிக்க வென்றே
பிறந்துலகில் வந்தாய் பிரானே—யறந்திகழும்
போதா புராதனா பூரணா பூம்புகலி
நாதாசிற் றம்பலவா நான். (40)

மைந்தா வெனவழைத்து மாயா வுடம்பகற்ற
விந்தா வறிவென் றிசைவித்தா—யெந்தாயே
யாதார மேதென்றே னுங்கறிவே தானென்றான்
றாதார் மலர்த்தாள்க டந்து. (41)

---

* கண்டுய்யப்பண்டு என்றும் பாடம்.

ஆண்டகுரு சிற்றம் பலவா வடியேற்காய்
மீண்டு மெழுந்தருள வேண்டாவோ—நீண்டமால்
ஆரணனுங் காணுத வானந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது. (42)

யானே பிறந்தேனும் யானே விறந்தேனும்
யானே மறந்தேனு மென்வாழ்வே—யூனமிலா
வுன்னுள்ளே யானு முலாவவே நீநிறைந்திட்
டென்னுள்ளே நின்றமையா லே. (43)

பட்டதே மூலவினை பாறிற்றே யேறும்வினை
விட்டதே யிவ்வுடலின் மிக்கவினை—நட்டதே
சிற்றறிவிற் பேரறிவு சிற்றம் பலநாடி
பொற்கழல்வைத் தாட்கொண்ட போது. (44)

ஊட்டி யுறக்கி யுணர்த்தி நடத்தியெனைக்
காட்டி யறிவிற் கலப்பித்துத்—தேட்டமறத்
தந்தான்சிற் றம்பலவன் சண்பைத் தவராசன்
வந்தா னிதற்கோ மகிழ்ந்து. (45)

நின்றநிலை தானே நிலையிதற்கு நீபிரிந்திட்
டொன்றும் விகற்பித் துணராதே—யென்றுன்
திருமருவு காழிநகர்ச் சிற்றம் பலவன்
மருமருவு தாடலைக்கே வைத்து. (46)

நீங்காம லென்னறிவி னின்று நிறைந்தருளி
நீங்கா வுடலுலகாய் நின்றனையே—யாங்காண
வந்திருந்த சிற்றம் பலநாடி வாய்த்தசுகந்
தந்திருந்து மிப்படியோ தான். (47)

பார்த்தபொழு தெல்லாம் படுபிணமென் றிவ்வுடலைப்
பேர்த்தறிவில் வைத்த பெருமானே—சேர்த்தபுகழ்
மெய்கண்ட நாதனே வெங்குருச்சிற் றம்பலவா
கைகண்ட துன்வடிவே காண். (48)

தானே யெனைவிரும்பித் தானே சமைந்தருளித்
தானே யெனையாண்ட தம்பிரான்—தானே
தனக்கினிய சிற்றம் பலநாடி தாள்போல்
எனக்கினிமை யுண்டோ வினி. (49)

போதாதோ விப்பிறப்புப் போந்தக்காற் போந்தபய
னுதாந்தச் சிற்றம் பலநாடி—வேதாந்தத்
தந்தத்தே வைத்தருளி யப்போதே வந்தநிலை
சிந்தைத்தே யாகுஞ் சிவம். (50)

அறிவு சதுவிதங்க ளான்மாக்கண் மூன்றும்
வெறிமாயை நான்கன்விதம் விட்டுப்—பிறியாத
தீவினைக டானறியச் செப்புசிற் றம்பலவா
மேவுபுகழ் வெங்குருவாழ் வே. (51)

என்றவுடற் கன்மமா யின்னாத சஞ்சிதமா
யான்றுவரு மார்ச்சனையு மாருது—தோன்றியிடுந்
தீவினையார் நல்வினையார் சிற்றம் பலநாடி
தூவினையார் போனார் தொலைந்து. (52)

நாதாதி வாக்காதி நான்குதரு மக்கரங்கள்
தாதாரு மந்திரங்கள் சாத்திரங்கள்—போதவே
தந்தருளு மாமாயை சண்பைச்சிற் றம்பலவான்
வந்தருளப் போனவா மாண்டு. (53)

பார்க்கிற் பரமசுகம் பாரா விடினுலகா
நீர்க்கிரத நின்ற நிலைபோல—வேர்க்க
வுரைத்தான்சிற் றம்பலவ னெண்காழிக் கோமான்
கரைத்தான் கரையாக் கனம். (54)

மன்னு மழபாடி வாய்த்தவருண் மைந்தர்க்
கின்னமொரு போத மியம்புவோன்—றொல்லுலகைப்
பைம்மறியாப் பார்க்கிற் பரையாகு மப்பரையைப்
பைம்மறியாப் பார்க்கிற் பரம். (55)

சூதான வுள்ளுணர்வுந் தொல்லையிரு ளாணவமும்
வேதாவு மாலுமாய் விட்டதே—நாதாந்தச்
சிற்பரமாஞ் சிற்றம் பலநாடி தேசிகர்கோன்
றற்பரன்வந் தாண்டதற்பின் றுன். (56)

பாவி படுமனமே பாவிநீ பஞ்சமலந்
தாவி சடந்தவிராச் சண்டாளா—வோவாம
லன்றே யறிவா யகண்டபரி பூரணமாய்
நின்றே யழுந்திலையே நீ. (57)

நீயே பகையுனக்கு நில்லா வுடம்புலகப்
பேயே யுறவாகப் பேணினையே—தூய
வறிவுக் கறிவா யகண்டமாய் நீங்காச்
செறிவுக்கு ணில்லாமற் சென்று. (58)

தன்னைநான் காணிற் றனித்தமுத லல்லவே
யென்னையான் காணி லிரண்டாவேன்—பின்னமறச்
சும்மா விருக்கச் சுகமாவேன் றோணிபுரத்
தெம்மான்சிற் றம்பலவ னென்று. (59)

தன்னை யுணர்வென்னிற் றானாய் நின்றிடுவே
னென்னை யுணர்வென்னி லியானாவேன்—மன்னுபுகழ்
சைவாசிற் றம்பலவா சண்பை நகரதிபா
வெவ்வாறு காண்பே னியான். (60)

பிறவா ரிறவார் பெருந்துயர மெய்தார்
மறவார் நினையார் மருளார்—புறவாருந்
தேசிகன் சிற்றம் பலநாடி சேவடிக்கே
வாசமல ரிட்டிறைஞ்சு வார். (61)

போதத் திருக்கறுக்கப் பொற்சிந்தை நந்தியாய்
மேதினியில் வந்தருள வேண்டிற்றே—தீதிலா
வாரணங்க ளன்கு மயன்மாலுங் காணாத
பூரணமோ கெட்டேனிப் போது. (62)

மூலமல மொன்றுடனே முற்றிவருங் கேவலம்பின்
சாலுமதோ மாயை தருஞ்சகலந்—தூலமிலாச்
சுத்தவத்தை தோணிபுரத் தோன்றல்சிற் றம்பலவன்
வைத்தபடி காட்டினான் வந்து. (63)

கால்வாங்கி யேங்கியது கான்று நினைவுவரு
மேலாங் குணர்வோடு மீதழிய—மாலாய
சாக்கிரத்தி லந்தவத்தை சண்பைச்சிற் றம்பலவன்
போக்கியபின் றந்தான் பொருள். (64)

அதிரும் புலன்கரிக ளாயுமனந் திண்டேர்
கதியொன் றியகுணமாக் காலாள்—சதுரங்கம்
பூட்டினாற் போலிருக்கப் புக்கடிநிற்கும் புதுமை
காட்டினா னம்பலவன் காண். (65)

வெண்பா முற்றும்.



## ஏழாவது,
## கட்டளைக்கலித்துறை.



சீர்கொண்டகாழிச் சிற்றம்பநாடி நற்றேசிகனைப், பார்கொண்டுபோற்ற வோர்பாமாலை சொல்வனிப் பாவினுக்கிங், கேர்கொண்ட சீர்தளையெல்லா நிறைந்திட்டி லங்கியிடப், போர்கொண்டமும் மதக் கற்பகயானையைப் போற்றுதுமே.

தாதவிழ்தாமரைப் பொற்றுளிரண்டுமித் தாரணிமேற், போதநன்மாதவ மேதுசெய்தேன்றென் புகலிநகர்ச், சேதனஞானசிற் றம்பலநாடிநற் றேசிகனே, யீதெனதாவி யுடலாகிநின்றது மெத்தவமே. (1)

தூயவெண்ணீற்றுச் சிற்றம்பலநாடி தொடர்ந்தருளாற், றீயமலங்க ளறுத்துயிர்காட்டித் திருவருளி, லோயவிருத்தி யமுதூட்டுநல்லுப காரத்துக்குக், காயமுயிர் பொருள் கைம்மாறதாகக்கைக் கொண்டனனே. (2)

ஈதொருவாசகங் கேட்டிலரேயயன் மாலிருவர், தீதறவாண்டசிற் றம்பலநாடி திருமுன்சென்று, போத

மும்போதத் துயிரானபோதமும் போதத்தின்ப, சாத முஞ்சாதப்பின் சாகாமனத்தையுந் தந்ததுவே. (3)

காண்கின்றகண்கதிர் காட்டாதபோதில்லைக் காண வன்றே, பூண்கின்றவண்ணறன் போதமல்லா தில்லைப் பூம்பொழில்கள், சேண்சென்றகாழிச்சிற் றம்பலநாடி சிரபுரத்தோன், விண்சென்று போனதிக் காலமெல்லா மெய் விளைவின்றியே. (4)

ஒன்றுணவத்துட னொன்றுதல் போலு முடம்பிலு யிர், நின்றுலகுவென்ன நின்றதுபோலு நிமலனுடன், சென்றுடவைத்தசிற் றம்பலநாடி சிரபுரத்தோ, னென் றூர்கள்காணும் பவக்கடலேறி யிருப்பவரே. (5)

அறிவாவதென்று மவன்வார்த்தைகேட்ட லதனி ன்மிக்க, வறிவாவ தென்று மவன்மேனி காண்ட லதனி ன்மிக்க, வறிவாவ தென்று மவனுமஞ் செப்ப லதனின் மிக்க. வறிவாவ தென்று மவனுயிராக வறிகுவதே. (6)

என்னை யிருத்தி யறிவித்த போதினு மென்னறிவி ற், றன்னை யிருத்தி யறிவித்த போதினுந் தந்தகண்ணிற், பின்னை யிருத்தி யறிவித்த வாறின்பப்பேற்றினுக்கு, மு ன்னை யிருத்துசிற்றம்பலநாடி மொழியொன்றினே. (7)

படைத்தளித் தாரென்றன் பாசம் பறித்தில ரப்ப டைப்பைத், துடைத்தொழித் தாரென்ற னுண்மை சொன்னாரில்லைத் தொல்லையிரு, ளடர்த்தருட்டாடலை யைம்முகர்தந்தில ரைங்கலையு, முடைத்தொழித் தார் சண்பைச் சிற்றம்பலவ ரொருவருமே. (8)

உள்ளேவிழிக்கி னுணர்வாகிநிற்ப ருணர்வுதனக், குள்ளேவிழிக்கி னுணர்வல்லராகுவ ரூறிமெத்தும், கள்ளேயுந்தாமச்சிற் றம்பலநாடினர் வல்லகள்ளம், விள் ளேனொருவர்க்கு மானந்தபோகம் விளைந்ததுவே. (9)

அறிகின்ற தொன்றை யறியும் பொழுதறிந் தை ம்புலனின், பொறியின்றி யொன்றையும் புந்திசெய்யே ன்றென் புகலிநகர், செறிகின்ற சிற்றம் பலநாடிநின் று செலுத்துகையாற், குறிகொண் டறிவதுண் டோ பொறி யோடுங்குறித்து நின்றே. (10)

என்னறியாம லெனக்குத் தெளிவித் தெனதறிவி ற், றன்னறியாமலுந் தந்துவிட்டானச் சதுமுகன்மால், முன்னறியாதசிற் றம்பலநாடி முதலியெங்கோன், பின் னறியாத பிழையணுகாமற் பிழைத்தனனே. (11)

முத்தியும் பெத்தமு மொன்றாகக் காட்டி முழுதுநி றை, சத்தியுங்காட்டிச் சதாசிவங் காட்டிச் சதுவிரண்டு,

சித்தியுங் காட்டுசிற் றம்பல நாடி கிரபுரத்தோன், பத்
தியுஞானமு மில்லாத வென்னைப் பரிந்தெடுத்தே. (12)

அன்றள வின்றள வாதர வாகிய வண்ணலைச்செ
ன், றொன்றிய தில்லை யவனறி வாய்நிற்க வும்பர்தொ
ழச், சென்றரங் காடுசிற் றம்பல நாடி கிரபுரத்தோ, னி
ன்றநிலையி லவனுடன் வாழ நிறுத்தினனே. (13)

பாற்கடல் வாழும் பணிலங்க ளுவிலப் பானிறை
ய, வேற்கறி யாமற் பிறிதிரைதேருமற் றிம்முறைபோ,
னீக்கறி யாவுயி ரானந்தத் தோடு நிறைந்தைம்புலன்,கா
க்கறி யாமற்சிற் றம்பல நாடினர் காட்டினரே. (14)

அறிவுஞ் செயலுமென் ஞைசயு மந்தக் கரணங்க
ளும், பொறியும் புலனும் புலனுண போதமும் போக்கி
யின்பஞ், செறியநின் றுண்டசிற் றம்பல நாடி கிரபுர
னைப், பிறியும் படிநினைந் தாலிது போலும் பிழைப்பில்
லையே. (15)

அலைவற் றிருக்கைக் குபாயஞ்சொல் லென்றடி
யேன்விரும்ப, வலைவற் றிருக்கைக் கருளிச்செய் தான
ண்டம் வெள்ளங்கொள்ள, வலைவற்ற காழிச்சிற் றம்ப
லநாடி யடுத்ததுநீ, யலைவற்ற வான்பொரு ளாகிநில் லெ
ன்றடி வைத்தனனே. (16)

அறியாமை பாச மறிவாவ தண்ண லதுவதுவாய்ச்,
செறிவா னுயிரென்று தீரச்சொன்னான்றென் சிரபுரத்து,
நெறிநாளு நல்குசிற் றம்பல நாடிதன் னேர்களெல்லாங்,
குறிநாடிப் பார்க்கி லிறைவரல் லாத குணங்களின்றே.

மொழியா லுரைக்கிற் குறிக்கப் படுமென்று மூத றிவா, லொழியா நிறைவையு மாநந்த வாழ்வையு மொண்புகலி, யழியா விரதன்சிற் றம்பல நாடி யகமகிழ்ந்து, விழியா லெனக்களித் தான்விழித் தேனின்பமேலிட் டதே. (18)

ஒடுக்கம் விரித்த லிறைவற்கு மில்லை யுயிர்க்குமில் லை, யடுத்தது தானல்ல னாவா னிறைவ னதுவுயிராம், விடுத்தது பாசம் விடாதது மற்றின்ப நூலைமெய்யே, தொடுத்தருள் காழிச்சிற் றம்பல நாடினர் சொற்றனரே. (19)

வாக்கி லிருப்ப தவன்றிருநாம மனந்தனிலே, தாக்கி யிருப்ப தவன்றிரு மேனி தரணிதனிற், போக்கியிருப்ப தவனேவ லென்றும் புகழ்ந்துமறை, காக்குங் கருணைச்சிற் றம்பல நாடியைக் கண்டபின்னே. (20)

அன்பா லறம்பொரு ணூல்வர்க் குரைக்கவன் றாலகிழற், றென்பா லுகந்தசிற் றம்பல நாடிநின் சீரருளா,

லுன்பா லுருகிக் கலந்தடி யேற்கின்ப மூட்டியநீ, யெ
ன்பா லுனக்குப் பயனென் கொலோ வென்றறிகிலனே.

பொறிபுக் குழலுமென் போதத்தை மாற்றித்தம்
பூரணத்திற், குறிபுக்கு நின்று குறியா தவிழ்பவர் கூட்
டந்தன்னிற், செறிவுக்கு நல்குசிற் றம்பல நாடி சிரபுர
த்தோ, னறிவுக் கறிவு திருமேனி யான தறிந்திலனே.

பற்றறப் பற்றறவென்பதெல் லாம்பசு பாசம்விட
ல், மற்றொரு பற்றற லில்லையென் றன்மன் னும் வெங்க
லியைச், செற்றருள் சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுர
த்தோ, னுற்ற தபோதன ரேயொழிந் தேயிரு மும்
மையுமே.　　(23)

முன்புகண் டேனில்லைப் பாசம் பசுபதி மும்முத
லும், பின்புகண் டேனில்லை யென்னகண்மாயம் பிறங்
குதொண்ட, ரபுன்கண் டாண்டசிற் றம்பலநாடி யருட்
புறவோ, னின்புகண் டாலிலெதா லுற்ற வாறென்கொ
லெண்ணுவதே.　　(24)

பாசந்தந் தானில்லை வாங்கிய பின்பர மாநந்தத்தே,
பாசந்தந் தானது வாங்கிய தெப்படிப் பாலனுக்குப், பா

சந்தந் தானைப் பதத்தா லுதைத்தந்தப் பாலனுக்குப், பாசந்தந் தாண்டசிற் றம்பலநாடி பராபரனே. (25)

பூம்பொழிற் காழிச்சிற் றம்பல நாடியைப் பூசித்த பேர், தாம்புவி தன்னிற் றவங்கள்செய்யார்கள்சா ரூப்பியத்திற், போம்படி யோகத் தியானத் திரார்கள் புனிதனுயி, ராம்படி கண்டு பரபோகந் துய்த்திளைப் பாறுவரே. (26)

நில்லாவுடம்பும்பொருளுநிலையென நின்றுணரும், பொல்லாதபுன்மையர் புன்மையை நீத்துப் புலன்வழியே, செல்லாதொழித்தசிற் றம்பலநாடி சிரபுரத்தோன்; எல்லாம் பொய்யென்றிரு பாதம்வைத்தானின்ப மேலிட்டதே. (27)

துண்டத்துக்கண்வைத்துத் தூரமனம் வைத்துத் தோன்றுசுடர், கண்டத்தைக்கண்டு கருத்தழியாமற் கருதுசமன், தெண்டத்தைமாற்றுசிற் றம்பலநாடி சிவானந்தத்தேன், வண்டொத்தருந்தி நினைப்பு மறப்பற்று வாழுமினே. (28)

ஆபாசனுகி யணுவாயிருந்த வெனையழைத்து, நீ பாவிபாசத்தி னின்றிளைத்தா யென்று நீக்கியென்மேற்,

சிபாதம்வைத்தசிற் றம்பலநாடி திருவுருவை, யேபாவி
பாரென வென்றிசைத்தானென்க ணின்புறவே. (29)

முத்திதனைச்சிற்றம் பலநாடி ஞானமுழுமுதலை, ய
த்தனை யத்தனென் றுதரிப் போர்களா தாரமென்றே, பி
த்தினைநீக்கிப் பிறப்பிலியென்று பிறக்கணித்தி, ரித்தனை
யோமலங் காளிதுகால மிரங்கியதே. (30)

எல்லாமறிந்த வறிவாகிநின்றிடு மிச்சைதொழில்;
புல்லாமற் புல்கிடும் பூரணவின்பமப் பூரணமே, நில்லாநி
லைமை சுகாதீதவுண்மை நிகழுமப்பாற், செல்லார்பொ
ழிற்சண்பைச் சிற்றம்பலவர் திருவுருவே. (31)

தத்துவக்கத்துஞ் சமையவிரோதமுஞ் சாத்திரஞ்
சேர், புத்தகப்பித்தையும் புந்திமதத்தையும் / போட்
டிடென்று, வித்தகன்சிற்றம் பலநாடிவேணு புரத்திறை
வ, னுத்தமமான சிவானந்தபோகத்தை யூட்டினனே.

சண்பைக்கதிபதி சிற்றம்பலவனென் சஞ்சிதமாம்,
புண்பைக்குரம்பையும் போகாவிருளும்பொருந்திவரும்,
பண்பைக்கெடுத்துத்தன் பாதத்திலேபணிவித்தவன்றே,
யெண்பத்துநான்குநூ றுயிரந்தாயருமேங்கினரே. (33)

சங்காரகாலந் தனிலோர்மலத்தொடு சார்தலுமாந், தொங்காதுடல்விடுங் காலமுமாந்தொல் கருவியெலாம், பொங்காமன் மாற்றிய போகம்புகல்கின்ற காலமுமா, நங்காதல் காழிச்சிற் றம்பலநாடி நவின்றனனே. (34)

மலங்கா ரணமா யவத்தையுண் டானது மாயை யினூற், றுலங்கா துணர்த்து முறைமை யுண்டானது துய்ப்பதற்கு, நலங்காண வீச னடித்தலுண்டான தெ னநவின்றான், தலங்காண வந்தசிற் றம்பல நாடி தவத் தரசே. (35)

சாக்கிரச் சாக்கி ரவத்தை யவத்தை யுணர்த்துந்த ன்மை, நீக்கியநா லுக்கு மிப்படி யாகுமெனநிகழ்த்தித், தாக்கிவைத் தாண்டசிற் றம்பல நாடிதண் காழியண் ண, லாக்கிய போதமெய் யானந்த போதமு மாய்விட் டதே. (36)

சுத்தக்கருவிக ளைந்துங்கொண்டேசொல் லவத் தையைந்துஞ், சித்திக்கும்போதத்தி லொன்றொன்று சென்றிடுஞ் சென்றதெல்லாம், பத்திக்கு நல்குசிற் றம் பலநாடி பயின்றதெல்லா, முத்திக்கரையது வாய்ச்சிவ போகமு முன்னின்றதே. (37)

தருக்கியுருக்கொண்டு தான்பிறந்துய்த்தல் சகலம தாஞ், சுருக்கியுபாதியைத் தூநெறிக்கேவைத்த தோன் றல்சுத்த, மிருக்கிலிருக்குஞ் சிவபோகந்துய்த்த விறை கலத்தல், செருக்கியுணர்த்துசிற் றம்பலநாடினர் செப் பினரே. (38)

மூலக்கனலை முடுகிமுடுகி முழுமதியின், பாலைப்ப ருகிப் பரவெளிக்கே சென்று பற்றிநின்றார், ஞாலத்தில் வந்தசிற் றம்பலநாடி நறும்புறவோன், சீலத்திற்றந்த சிவானந்தம் போதுமெய்ச் சித்தியன்றே. (39)

சுற்றுநடுவொடு கீழ்மேலுமெங்குஞ் சுகவடிவாய்ச், சற்றுஞ் சலிப்பற்ற தன்மையுன்னார் சில சாத்திரங்கள், கற்றும் பிறருடன்கேட்டும் பலருடன் கத்தியும்போய், மற்றும் புவனத்தி லாசைவிடாமன் மயங்கினரே (40)

அந்தரங் காற்றங்கி நீர்மண்கொண் டேநின்ற வை யமெல்லா, மிந்திரசால மெனக்காட்டிமீட்டு மிறைநிறை விற், றந்தருள் சிற்றம் பலநாடிவண்மைத் தவப்பெரு மான், வந்தபின் காணுஞ் சிவலோகவாசல் வழங்குவ தே. (41)

சிற்றைக்கதிபதி நந்தியெங் கோன்றிரு வாக்குல கோர், பற்றைத் தவிர்த்துச்சன் மார்க்கத்தை நல்குமிப்

பண்புமன்றி, மற்றைச்சமையத்தை வாயடக்காநிற்கு மாயஞ்செய்யுந், தெற்றைப் பிடுங்கிச் சிவலோகவாசல் திறப்பிக்குமே. (42)

வனக்கே தகைபுடைசூழ்காழி காவலன் மன்னு மன்பர், சினக்கேண்மை செற்றசிற் றம்பல நாடி திரு வுருவை, யெனக்கே தெரியுமற் றென்னையு மாட்கொண் ட விவ்வருமை, யுனக்கே தெரியுந் தெரியாதுபின்னை யொருவர்க்குமே. (43)

ஆறுறுநீக்கி யருட்கரைக்கேயிளைப் பாற்றும்பின் னை, யேறாத வாரிதிக் குள்ளேயழுத்திடு மென்வினைக்கு, மாறான சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுரத்தோன், பே றாக நம்மைப் பிழைப்பிப்ப னென்றவன் பின்செல்லவே.

பூரண போத புரத்தே யிருந்தின்ப மேனிபுகக், காரணன் சிற்றம் பலநாடி யன்றியக் காழியிலே, யாரண மாமுடி மேலன்பர்க் கானந்த மேயளித்துக், கோரணி யான சமையோர்க் கெனக்கொடி கட்டினனே. (45)

எல்லையில் காலந் தவமுயன்றோமில்லை யேத்தியன் பர், சொல்லையிரங்கித் தொழுதுநின்றோமில்லைத் துய்ய வருட், டில்லையுளாடிசிற் றம்பலநாடி சிரபுரத்தோ, னொ ல்லையிலென்னை யொழித்தின்ப வானந்த மூட்டினனே.

தேன்பாயிதழிச்சிற் றம்பலநாடி சிரபுரத்தோன்,
தான்பாசந் தீர்த்தன்பர்க் கானந்த வாரி தனைவழங்க,
வான்பாலுமன்னை முலைப்பாலுமுண்டின் றளவுமையோ,
நான்பாவி யாய்த்திரிந் தேன்பரமானந்த நண்ணுதற்கே.

தீதற்றகாழிச்சிற்றம்பலநாடியைத்தெய்வமென்றே,
பாதத்துக்கேற்றபணிகள்செய்யாமற்பரந்துகெட்டேன்,
போதத்துக்கேற்ற புலன்வழியேசென்று பொய்பிதற்றி, வேதத்துக்கேற்ற சிவானந்தபோகத்தை விட்டனனே. (48)

ஆனந்தமேசெவி யம்புயத்தாளிணை யங்கைகளு,மானந்தமேதிருக் கண்ணுஞ்செவ்வாயருள் மேனியெல்லா,மானந்தமே யருட் சிற்றம்பலவ ரருட்பொருளு,மானந்தமேயவன் றில்லையுங்காழியு மானந்தமே. (49)

மானைப்பொருத விழியார் மயக்கின் மயங்கியஞ்சி,யானைக்கணைதறி யாயுழல் வேனைவந் தஞ்சலென்றான், ஞானத்தசிற்றம் பலநாடி வண்மைத்தவப்பெருமான், ஞானக்கொடைமுகில் நந்தாத சிற்றைக்கு நாயகமே. (50)

அறங்காட்டிய வடநீழலில் நால்வர்க் கறத்தினுண்மைத், திறங்காட்டிய வெண்ணை மெய்கண்டநாதன்

றிருமுன்சென்றேன், நிறங்காட்டி யென்னிறந்தன்னையு மாற்றிவெண் ணீற்றையுமிட், டுறங்காச்சமாதிதந் தான் பரமானந்த வுண்மையிலே. (51)

போதித்தருடரு சிற்றம்பலவர் புகலிநகர்ச், சோதித் திருவுருத் தோன்றிய போது தொடங்கியெனைப், பேதித்தறிவை யகலாத பாசப் பெருக்கமெல்லா, மாதித்தனைக்கண்ட புற்பனிபோல வகன்றிட்டதே. (52)

செழுமலர் மென்குழல் மாதருதரத்திற் சென்று சென்று, புழுமலவாக்கை யெடுக்கவொட்டேன் புனற் சேறுழவ, ருழுமலம் பட்டுவெண் சங்கஞ்சொரிமுத் தொதுங்கும்வயற், கழுமலமன்னுசிற் றம்பலநாடியைக் கண்டபின்னே. (53)

ஒன்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக வொன்றிரண்டா, மென்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக வேத்தியன்பர், சென்றங்கு நல்கு சிற் றம்பலநாடி சிரபுரத்தோ, னன்றென்றிதாமென்று சொல்லாதமுத்தி யளித்தனனே. (54)

சிற்றம்பலநாடிகள் கட்டளைக் கலித்துறை - முற்றும்.



எட்டாவது,

# துகளறுபோதம்



## பாயிரம்.

நேரிசைவெண்பா.

பதிபசு பாசந் தெரிந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறுங் - கதிவழங்கு
மெய்கண்டான் சந்தான மேவிற் சிவாநந்தங்
கைகண்டார் காணுர் கரு. (1)

உற்ற சரியை யொழியாத நற்கிரியை
குற்றமிலா யோகக் குறிநெறியு - முற்றிப்
பிறந்தார்க டாமறியப் பேசுகே னன்றிப்
பிறந்தா ரறியாத பேறு. (2)

எல்லாங் கழற்றி யிறைவ னுடுங்கலக்க
வல்லார்கள் கண்ட வழிபலவுஞ் - சொல்லரிய
தம்பிரான் றுள்க டணவாத வாதனையு
மெம்பிரான் றந்தா னெமக்கு. (3)

(நூல்)

## பஞ்சபூதப் பழிப்பு.

மண்ணுக் குயிராகி வந்துரத்தத் தான்றரிக்கு
மெண்ணுமுரோ மாதியிதன் காரியமாங் - கண்ணிற்
பிறவுங் கடினமாய்ப் பேசியது தானுந்
துறவுமுதற் பூதத் தொழில். (1)

நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கினீராதி ப்கர்கருமங் — கார்க்குரிய
வெள்ள முதலாகு மெய்யுணரி லப்புத்தா
னள்ள விடப்படா தாம். (2)

வன்னிக் குயிராகி வந்துசுட் டொன்றுவிக்கும்
பன்னுபசி யாதி பயில்கரும — மன்னும்
விளக்காகிப் பந்தமாய் வேறுகி நிற்குந்
துளக்கமிலாத் தேயுத் தொழில். (3)

தேடப் பிரித்துத் திரட்டுவிக்குஞ் செய்கரும
மோடன்முத லோவா வுயிர்மருத்து - நாடிலிவை
யல்லவாம் வாயு வருட்குருவாற் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து. (4)

இரந்தரமாய் நின்றே யிடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதற் பார்க்கின் — விரிந்த
கருமமாய் வேறுகுங் காணலா முண்மைக்
குரவனு லென்றே குறி. (5)

வட்ட மறுகோண மாயாத முக்கோண
மிட்ட பிறைசதுர மேவடிவ - மெட்டரிய
வேதன்மான் மிக்க விடையோன் மகேசனுட
ஞதி யதிதெய்வ மாம். (6)

இப்படியே பூதத் தியல்பு தனைத்தெளிந்தே
யப்படிநீ நில்லாம லாங்கறிந்திட் - டெப்படியுந்
தோன்றுமற் றேசிகன்முன் சொன்னபடி கண்டிருந்தா
லூன்று யதுவா முடம்பு. (7)

பொறியறவுணர்தல்.

பூத வுடம்பாய்ப் பொருந்தும் பொறிபுலன்க
ளதனரு ளாலேநீ நாடியவை — யேதமெனத்
தத்த முருவுணரத் தானகலு மப்போதே
சத்தமுத லாகிவிடுந் தான். (3)

சத்தாதி யைந்தினையுஞ் சந்தித்து நீயகல
வத்தால் வரும்பயன்க ளாங்ககலு — மெத்தாலுங்

காணும லவ்விடயங் கைகழலக் கைகழலு
நாணுப் பிறப்பி னவை. (9)

வாக் காதி யத்துடனே நீங்கவச ளுதிவிடு
நீக்காத வுட்கரண நீங்குமே - தாக்கி
மனதுமுதலாக வந்தவந்த போது
தனது செயலுணரத் தான். (10)

அந்தக்கரணசுத்தி.

மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை
யுன்னு முகார முபகரிக்கு - முன்னுகு
மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்தியிடு
நீங்காது சித்தம்விந்து நேர். (11)

அந்தக் கரண மகல வதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே - பந்திக்குஞ்
சித்த மயலறுத்துத் தீர வுனக்கேற
லொத்த படியே யுணர். (12)

கலாதி ஞான நிராகரணம்.

பொங்கு புலனருந்தப் போதந் தருமாயை
தங்குகலை யாதி தருஞான - மிங்கிதனை
நீங்குபடி மாணவக நின்போத மொன்றிரண்டு
தூங்குபடி நில்லாய்து ணிந்து. (13)

கால நியதி கலையாதி தத்துவங்கள்
சாலவறி விச்சைதொழி * ருன்பூத்தன் - மூலமா
மாயை மயக்கல் வனரத்தல் வினைக்கூட்ட
லாயவிட லாமென் றறி. (14)

சுத்த தத்துவ தூடணம்.

ஆன வதனு லழுந்தினு லாசறற்கே
னீன வயிந்தவத்தி னெல்லைகா - னுனமிலாப்
போகந் தருமானுற் பொல்லாதோ புண்ணியத்தி
னுகந் துணையானுர்க் காம். (15)

சுத்தவித்தை யாதிமுதற் சொன்னவேழ் தத்துவமு
மொத்து நடத்தியிடு மோவாமல் - வித்தைசெய
லேறிக் குறைந்தொத்த லெப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்தகலு மாறு. (16)

தத்துவாதீதம்.

மண்முதலா நாதாந்த மாய்வந்த தத்துவத்தி
னுண்மையறிந் தெல்லா மொழிந்தாயே-யெண்ணிலிவை
தத்துவா தீதமெனச் சாற்றுங்காண் சைவமறை
யத்துவா வெல்லா மற. (17)

---

* தானமுத்தல் என்றும் பாடம்

இப்பரிசே யைந்துசுத்தி யெய்தியதா லெப்போதுஞ்
செப்பரிய மாயாதி தீருமே - யப்பரிசே
யாங்கவற்றி ஞேடே யழியும் வினைமலந்தா
னீங்கலற்ருே நீங்கா நிலை. (18)

சகலதரிசனம்.

நின்றுநின்று வந்த நிலைதோறு நீயறிந்த
தன்றியவை தன்னை யகன்றுயே — யின்றிவைதான்
முத்தி படுஞ்சகல முன்னம் படுஞ்சகலம்
பெத்தமது வென்றுநீ பேசு. (19)

அஞ்சு வகையாக வாறுறு நீத்ததற்பின்
விஞ்சிவரு மாணவத்தின் மேலீடு - வஞ்சமறச்
சாற்றிலது கேவலமாந் தான்கழித்துப் போந்தநிலை
சாற்றி லதுசகலந் தான். (20)

கேவலம்.

அன்றிவந்த தத்துவங்க ளெல்லா மகன்றிடவே
யொன்றிநின்ற வாணவந்தா னென்றுமே-யென்றுந்தா
னிங்கா விருள்விழிபோ னிற்குமே யான்மாவும்
பாங்காக வாங்கே பதிந்து. (21)

பகலிழந்த வான்போற் பரவுமல நீயா
யிகலறவே நின்று யிழந்தா - யகலறிவு

வாடாத முத்தியினில் வாய்ந்தவருட் கேவலநீ
நாடாத கேவலமுன் னுள். (22)

### கேவலதரிசனம்.

ஒன்றுந் தெரியா வொழியா விருளாகி
யின்றளவு நின்ற திசைவோதா - னென்றுகிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற வாணவந்தா
னம்புநிழல் போலென் றறி (23)

கருவி கரணங் கழன்றுங் கழலா
விருளின் பெருமையிது வென்னே - விருடான்
விடிகைக் கிருண்ட மிகுதிபோன் மாசு
மடிகைக் கிருண்டதுகாண் மற்று. (24)

### கேவலாதீதம்.

வானி லிரவிவர வல்லிருள்போ மாறுபோ
லீன விருளகல்வ தெக்கால - மானே
யறிந்தா யிருளென் றறியாமை தன்னைப்
பிறிந்தாயோ வில்லையோ பேசு. (25)

இந்த விருளொழிய வேதுநான் காண்கிலே
னிந்த விருளகல்வ தெப்படியோ - விந்த
வறியாமை நின்று லதனைநீ காணு
யறியா தறிந்தனையோ வன்று. (26)

### தன்னுண்மை.

அந்த மலமா மறியாமை கண்டாயே
யந்த வறிவுநீ யையனே - தொந்தவிருள்
போனதே யுன்னைவிடப் போக்கித் திரோதையரு
ளானதே கண்டா யறி. (27)

வைத்த வவதரங்க ளெல்லா முடன்வந்து
மத்தகைமை கண்டு மறியாயான் — முத்தனாய்ப்
பாச வறிவும் பதியறிவு மன்றியே
யாசறவே நின்றவ னீயாம். (28)

### சைதன்ய தரிசனம்.

கண்ணிலிருள் போனாலுங் கண்டன்னைக் காணுபோ
லெண்ணுமிருள் போனா லெனையறிய-லொண்ணுதோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
வொண்போத நீயென் றுணர். (29)

இருட்கு மொளிக்கு மிடமாகும் வான்போ
லருட்கு மருட்கு மகமாய்ச் - சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
னாய்சத் ததுவசத்த தாம். (30)

அறியு மறிவுநீ யன்றோ வுனக்குச்
செறியுமல நின்றதோ செப்பா - யறிவுதனைப்

பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கமதில்
வாராத தன்றோ வழக்கு. (31)

ஞானதரிசனம்.

அறிந்தறிந்து வந்த வவதரங்க டோறுஞ்
செறிந்தறிந்து நின்றதெது தேரிற் — பிறிந்ததனை
நின்ற தறியாம ணிகழ்த்தியது நீக்கியுனை
யின்றறிய வைத்ததரு ளென். (32)

அந்த வருளுனக்கிங் காதாரமா யல்லி
னிந்து வென வெறித்திட் டேகமாய் - முந்தி
யுனையுனக்குத் தான்விளக்கி யோவா துணர்த்துந்
தனையுனக்குங் காட்டுமே தான். (33)

எல்லாம்பொய் யென்றிங் கிருந்தேனு நானன்றோ
நல்லா யெனையறிந்தே னன்றோ - சொல்லாடு
நான்பிரம மன்றி நடுவே யுணர்த்துதற்கு
வான்பிரம முள்ளதோ மற்று. (34)

அன்றுமுத லின்றளவு மண்ணலறி விப்பதன்றி
யின்றறிவே னென் றியம்புவதெ - னென்று
மவத்தை தனிலுணர்த்தி யாங்கருத்தி யின்றித்
தவத்தி லுணர்த்தினரர் தான். (35)

உன்னறிவு நீயே யுணர்வையே யாமாகி
லிங்கெடுநாட் பாசத் தியையாயே - யுன்னறிவை
நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ
லாங்கா ணரனு மருள். (36)

உன்னறிவுக் குள்ளே யுணர்வா யொழியாத
தன்னறிவு தானுனக்குத் தாரகமாய்ப் - பின்னமற
வொன்று யொழியாம லுள்ளடங்கி யுள்ளபடி
நின்று லதுவாவை நீ. (37)

இச்சை யுயிர்க்கிரங்கன் ஞான மிசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்த – னிச்சயமாஞ்
சத்தியிவை மூன்றனையுந் தந்ததொரு சத்திகாண்
முத்தனே பார்சீ முயன்று. (38)

பரைதரிசனம்.

கிரியையறி விச்சை கிளர்ந்தசத்தி யேதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய் – தெரியிலதிங்
காரு மறியா வகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பெற. (39)

அந்த வறிவு மறிவன்றே விப்போது
தந்த வறிவுமது தானன்றே - வந்த

வறிவிற் கிளைத்ததுகா ணவ்வறிவின் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர். (40)

அறிவார்க் கறிவித்தங் கல்லாத தாகா
வறிவாய் விகற்ப மறியா - வறிவேகாண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல். (41)

பரையில்வியாத்தி.

விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோற்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோ - னண்ணிப்
பரைநிறைவி னீயும் பதிவையே யாகி
லுரையிறந்திட் டொன்றாவை யுற்று. (42)

பரையில் யோகமும் போகமும்.

விண்ணில் விகற்பமற மேவியகா னின்றதுபோ
னண்ணும் பரையதனி னண்ணியே - யெண்ணிறந்து
நீருறங்குந் தன்மைபோ னிற்கைபரை யோகமதிற்
சீருறலே போகமெனச் செப்பு. (43)

சுத்தபரயோகம்.

நீங்காத பேரறிவு நீங்காமற் கண்டநீ
நீங்காம னின்றபடி நின்றதனி - னீங்காம

னின்றுவிட லன்றோதா னின்மலன்றன் பேரறிவி
லொன்றுபட லென்றறிநீ யுற்று. (44)

சுத்தபரயோகமும்,
முத்திச்சாக்கிரமும்.

எத்திசையு மொன்று யிறையறிவி லேயழுந்தல்
சுத்தபர போக மெனத்துணிநீ - சத்தியமே
யத்தன்மை கண்டா லதுமுத்திச் சாக்கிரமாஞ்
சித்த மயலறவே தேர். (45)

முத்திசொப்பனம்.
சாக்கிராதீதம்.

நின்ற வறிவறிகை நீங்காமை சாக்கிரமா
மன்றி யவிழ்த லதீதமாஞ் - சென்றறிவி
னீங்காம னின்று நெடிதுதுயில் கொள்ளவே
வாங்கா தறிவாய் வர. (46)

முத்திசுழுத்தி.
பரையிலதீதம்.

இவ்வறிவு கண்டா லிருடீருஞ் சாக்கிரமா
மவ்வறிவு காணு ததீதமா - மிவ்விரண்டும்
பாராம னிற்றல் பரையி லதீதமா
மாரா வறிவகன்ற தால். (47)

ஈசனறி வாகியெலா மின்று கழன்றகன்றுய்
பாசமிக வைத்ததனிற் பற்றுதே - கூசாம
னேராக நீங்கியதி னின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர. (48)

## முத்தி துரியம்.

### சுத்தாவத்தை.

அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டென்றுங் குறியா - நெறியேது
சுத்தவத்தை மைந்தாவுன் றெல்லைமல மில்லையில்லை
யத்துடனே செல்வதது வாம். (49)

### சுகரூபம் துரியம்.

பைய விருந்து பதைப்பற்ற பின்னுனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே - மையனே
கண்டாய் சிவபூமி காட்சியறக் கலந்து
கொண்டாள்வான் கண்டாய் குறித்து. (50)

விழுந்த வவதரத்தில் விஞ்சு சுகந்தா
னெழுந்ததிது வெங்கே யிறைவா - மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோ
லாமரன்றன் பாலே யது. (51)

துன்பற்ற வின்பச் சுகப்பிரபை தன்னையே
யின்பசத்தி யென்றறிநீ யெப்போது – மன்புறவே
நின்றதிலே யாறி நிலாவு நிலாவும்போன்
மன்ற றரமணந்து வாழ். (52)

தேனரு மின்பச் சிவவடிவு மிப்படியோ
வானடர் காணத மன்னவனே - ஞான
விந்துவு மொருசத்தி யிறைவர்க் கதன
லெதுமுத்தி சொல்லா யினி. (53)

முத்திதுரியாதீதம்.

சுகாதீதம்.

இந்தச் சுகத்தி லினிநீ விழியாம
லந்த வறிவி னயர்ந்ததுபோற் – றெந்தமறப்
போதா யிதுவே சுகாதீதம் பொய்யற்றோர்க்
காதார மான வருள். (54)

ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா
னன்றி யொருபொருளு மாகாதே - நின்றமுந்திச்
சொல்லரிய விந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்லவன்று ஞமே நிலை. (55)

## சுகப்பேறு.

எல்லாங் கழன்ற விடமே சிவமென்று
சொல்லா துவர்கழன்ற தூயோர்க - ணல்லாய்கே
ணின்றபடி தானே நிலையா நிலையதனி
னின்றுவிடு நேராக நீ. (56)

வானகத்தில் வானு மணத்தின் மணமும்போ
லானசுகப் பேற்றி லழுந்தியவா - தானுகு
மாண்ட குருநாதா வடியேன் பெருவாழ்வை
மீண்டு சொல வுண்டோ விதி. (57)

நீயுஞ் சிவமாகி நின்றுயோ நின்றிலேயோ
வாயவடி யேனே வதிகார - நாயனே
யொன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை. (58)

சாற்றி லதற்குவமை தாடலைபோற் சன்மார்க்க
வேற்றுவிதி பலவும் வேண்டாவே - போற்றரிய
நித்தனே சுத்தனே நித்தியா னந்தனே
யத்தனே முத்தனே யாங்கு. (59)

அந்தச் சுகத்துக் கதித வவத்தையென்ப
பந்தமற்ற முத்திப் பயனறியா - ரந்தோ

பிறியாத வின்பப் பெருமாளைப் பெற்று
மறியாத வாதனையா லாங்கு. (60)

பரமானந்ததரிசனம்.

நின்ற நிலைசிவமாய் நின்றேயே நின்மலனு
மென்றும் பயனு யிருந்தானே - யன்றே
யவனுக் கிதமே தவனாகி நின்ற
விவனுக் கிதமே தினி. (61)

அன்றே தொடங்கி யனைத்துயிருந் தானாகி
யொன்றாகி நின்றவருக் கின்பூட்டிக் - குன்றாமற்
கொண்டுவிட லன்றோநங் கோமாற் கிதமென்று
பண்டைமறை சொல்லும் பரிந்து. (62)

பார்க்கரிய விந்தப் பரம சுகந்தனையே
சேர்ப்பனுயிர்க் கென்றிறைவா செப்பினையே-மாற்றரிய
வானந்த மாருயிர்கட் கண்ண லருத்துவது
தானெங்குப் பெற்றவா சாற்று. (63)

பெற்றருந்தி யின்பம் பிறர்க்கு மருத்தினனோ
வுற்றபர மானந்த முள்ளதோ - மற்றிதுதா
னென்றுநீ கேட்கி லிறையுருவ மானந்த
மென்றுரைக்கு மாகமநூ லின்று. (64)

ஆனபர மானந்த மாகின்ற வெல்லையே
யூனமிலா வுண்மைதனி லொன்றுபட - லீனமறத்
தானான போது தணவா தெழுந்தசுக
மானே யதுவா மதி. (65)

பரமானந்தயோகம்.

விளங்குபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்துதுளைந் தாடியதிற் றோன்று-வளைந்துன்னை
நீர்போ லமிழ்த்தியதி னீர்நிழல்போற் றன்கரந்து
பார்போற் றரிப்பாகும் பார். (66)

பாராதே யந்தப் பரமசுகந் தன்னை
நேராகத் தானு நிழல்போலத் - தீராச்
சுபாவ மதுவாகித் தோன்றி மறையாதே
யபாவமாய் நில்லா யதில். (67)

பரமானந்தபோகம்.

நின்றபர மானந்த நேரே யனுபவித்தங்
கொன்றுபட வுள்ளுருகி யோவாம - லென்று
மதுவுண்ட வண்டுபோன் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடிப் போது. (68)

பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
யுருகியடி யேனருந்த வூட்டுங் - குருவே

யழியாத வின்ப மரனருந்தா னென்னும்
வழியேயூறு சொல்லீர் மகிழ்ந்து. (69)

சர்க்கரைதா ஞர்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்காற் - சர்க்கரை
யின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ [க்கின்
வின்புருவ மேயிறைக்கு மென். (70)

நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத மறியுமோ — வோவாப்
பரமசுக முன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன். (71)

இந்தச் சுகமான்ம லாப மெனவறிநீ
யந்தச் சுகமொழிந்திங் காராதே — யிந்தச்
சுகமெலா மந்தச் சுகமாக்கி னுன்ற
வகமெலா மானந்த மாம். (72)

பரமானந்தமேலீடு.

அண்ணலுமா னந்த மருளுமா னந்தமுயி
ரெண்ணிலா வானந்த மெவ்வுலகும் - பண்ணி
யளித்தழிப்பா ராகு மவர்களுமா னந்தங்
களித்ததுவே யெப்போதுங் காண். (73)

எங்குநிறைந் தானந்த மெல்லா மமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமா - யெங்கும்
வளைத்த வுலகுயிரும் வாய்த்த சுகமா
மளத்திற் புகுந்ததுபோ லாங்கு. (74)

கண்டவிட மெல்லாங் கருணைக் கடலமுத
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப் — பண்டே
திருமா லயனறியாத் தேசிகனார் பாதந்
தருமா மடியேற்குந் தான். (75)

பரமானந்த அவசம்.

பரமபர மானந்தம் பார்கிழ்மேன் மற்று
மரவம்வா ராதே யகலும் - புரணமா
யாங்கே யமிழ்ந்தி யவசமா மானந்த
நீங்கா ததுவாகி நில். (76)

உற்றபர மானந்தத் தொன்று யதிலுறங்கி
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்குங் - குற்றமிலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூ லெல்லாந் தெளி. (77)

அணுவகை.

ஆன்மாக்களின் கூறுபாடு.

ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளவுயிர் மூவருக்குஞ்
சென்றிவன்போ னேரே சிவமாகி - நின்றநிலை

யிவ்வகையே யாளு மெழிற்குருவா மீசனே
யவ்வகையை நீயிங் கறி. (78)

பஞ்சாக்கரதரிசனம்.

அஞ்செழுத்து மண்ணலரு ளான்மா திரோதமலம்
விஞ்சி நமத்துரந்து மெய்யருள்வாத் — தஞ்சச்
சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதிலா வின்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய். (79)

குருஸ்துதி.

பற்றிநின்ற பாசம் பறித்தகல வேவிழித்திட்
டுற்றவுயிர் காட்டி யுணர்வுணர்த்தி - மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பே றளித்தவரைப் போற்று. (80)

சீடனிலக்கணம்.

இரவு பகனிழல்போ லிட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித் - திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர். (81)

முத்தனுக்குமுத்தியின்பங்கூறல்.

ஆகமுத னீங்கி யருளிற் கலந்து சிவ
போகம் விளையப் புணர்ந்தாலும் - வேகத்

தெரிவாய் நிரயத் திருப்பர் குருசொற்
பிரிவா ருலகிற் பிறந்து. (82)

### குருவழிபாடேபொருளெனக்கூறல்.

ஆகமுயிர் பொருள்கொண் டன்றே யருளளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னாரைத் - தாகத்தோர்
வேண்டுபொழுதெல்லாம்வேண்டுபொருள்வந்ததுபோற்
பூண்டுதொழ லன்றோ பொருள். (83)

அன்றுமுத லாகவே யாருயிர்கட் காருயிராய்
நின்றருளுந் தம்பிரா னீங்காம - லென்றுங்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவா யருளாமற் கூறு. (84)

### குருவே சிவமெனல்.

பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
யாசி லகலறிவா யாங்கசுன்று - பேசரிய
வானந்தம் பெற்றா ரருட்குருவே யீசனென்பர்
மோனமே முற்று முயன்று. (85)

### குருபணிசெய்வாரை வழிபடல்.

கருவேலை தன்னைக் கடப்ப ருலகின்
மருவாத வின்பத்துள் வைத்த - குருவி

னடியா ரடியா ரடியா ரடியா
ரடியாரைச் சார்ந்த வவர். (86)

யோகம்.

சன்மார்க்க மீதாஞ் சகமார்க்கஞ் சாற்றுங்காற்
பன்மார்க்கம் வாயுப் பகர்கருவி — தன்மார்க்கஞ்
சால வொடுக்கித் தடுத்து வளியிரண்டு
மாலறவே நிற்கை மகிழ்ந்து, (87)

அந்த மனத்தாலே யாதார மாறினையுஞ்
சந்தித் ததிற்பொருள்க டாமறிந்திட் — டிந்துவிலே
யோவா வொளிவைத் துருகுமமு துண்ணிறைக்கி
லோவா வொளியா முரு. (88)

நின்ற வொளியுருவி னீங்காம னிற்கவே
யென்று மழியாம லின்புற்றுக் — கொன்றையந்தார்த்
தாணுவுருப் போலேபின் சாரூப்பி யத்திலே
மாணவக வாழ்வார்காண் மற்று. (89)

கிரியை.

புத்திர மார்க்கம் புகையொளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூல மற்றெவையு — முத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
காட்டவத்திற் செல்லாம ளுள். (90)

சுத்தியைந்துஞ் செய்து துகடீரு மந்திரத்தா
லத்தமதுப் பத்துமுக மைந்தாக - வைத்துவைத்து
வித்தியா தேகம் விதிப்படி யிற்றுபித்துப்
பத்தியான் மேனிதனைப் யார். (91)

பார்த்ததிரு மேனிப் படிகந் தனிற்பரனைக்
கோத்ததிரு மந்திரத்தாற் கொண்டுவந்து-பார்த்தருளச்
சொல்லிப் பராக்கறுத்துச் சோதிச் சிவாகமத்திற்
சொல்லிற் படியே தொடங்கு. (92)

சோராமற் பூசித்துச் சொன்னபடி நல்விதழித்
தாரார் சமீபத்திற் றனிருந்து - வாராமற்
றனே பரனளிக்குஞ் சங்கரனு ரிம்முத்தி
தானே தரினுந் தரும். (93)

சரியை.

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரனு ரின்புற்ற
பூதி திருவேடம் போற்றியே-நீதியினாற்
பூங்காவனஞ் சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காகச் செய்கை பரிந்து. (94)

அலகு திருமெழுக்கிட் டாலயத்தி லன்பா
லிலகு திருவிளக்கு மேற்றிப் - பலகாலுஞ்

சென்று வணங்கித் திருவடிவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர். (95)

கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து – நின்று [துப்
ரவலோகந் தன்னி லடையா ரடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து. (96)

வாழ்த்து.

அந்த மலமறுத்தங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை யறிவித்திங் – கந்தறிவை
மாறுமன் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறுமற் கூறக் கொடி. (97)

துகளறுபோத முற்றியது.



ஒன்பதாவது,

## திருப்புன்முறுவல்.



அந்தோவின்னே படும்பாட்டுக் களவோவில்லை யவைக்கிடாய், நொந்தான்கொடிய பிறப்பிறப்பி னோ வாதிரங்கி யெதிர்நோக்கத், தந்தாங்கெமது திருவரு டான் சாரும்பரிசா லெமைக்காண, வந்தானோகோ வெ னுங்குணியோ வானோன்றிருப்புன் முறுவலே. (1)

திரிந்தேவென்பின் பணியாளாய்த் திரும்பிச்சிறி தும் பாராதே, இருந்தானேய்வில் பல்லூழி யெண்ணி னிரைய சுவர்க்கங்கள், பரிந்தான்யோனிப் படுகடல்கள் பறியவிங்நா ளெமைக்காண, இருந்தானோகோ வெனுங் குணியோ வெம்மான்றிருப்புன் முறுவலே. (2)

நான்றன்னுடனு யிருக்கையினு நாடானுனன்றிலை யெனத்தா, னூன்றனுடனுய்க் கடலுந்தா னெனவுமு ழன்றுன்சார்போதன், என்றங்கிவனோ டெதிராடி யிடி த்திட்டிடித்திட் டெடுத்துணர்த்தத், தான்றங்கினன்கா ணெனுங்குணியோ தக்கோன்றிருப்புன் முறுவலே (3)

நினையாமுனங் கேவலமானு னினையப்பெறினே மாயையுடன், றனையேசார்ந்தான் சார்வினையாற் சரித் தான்வான் மண்ணிரையமெலாந், றனையாங்காட்டும் படி கண்டான் றனையாம்பார்க்க மலம்போக, எனைநோக்கி னன்கா ணெனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறு வலே. (4)

கடைப்பட்டேனைப் பிறப்பிறப்பிற் கலங்கிக்குய வன் றிகிரிபோன், மிடைப்பட்டேயே னுழல்கின்றாய் வேண்டாமெய்யுண் டென்றாலுந், திடப்பட்டறியா னு தலினுற் றிகழுமருட்பா லெடுத்தேற்ற, இடைப்பட்ட னன்கா ணெனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறு வலே. (5)

உனக்கிங்குயிர்நா மென்றாலு மோராரேனுரென் றுரைத்தாலும், எனக்கிங்குயிர்நீ ரெப்பரிசென் றெதி ராளெதிரப் பெறுங்காலே, தனக்குள்ளறிவாமெனைக் காட்டச் சார்ந்துகூட லுனையல்லால், எனைக்கண்டிலன் கா ணெனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறுவலே.

சாகாவிடனு மிலையிவன்றான்சாரா யோனியிலை மாய்ந்து, வேகாவிடனு மிலையிற்றைவரையு முழன்றான்

வேசற்றும், காகாவழியாய் காம்வலியத் தடுத்தாட்கொ ளனு மெனமுனிவன், வாகாநின்ற னெனுங்குணியோ வானேன்றிருப்புன் முறுவலே. (7)

அங்கங்கடுத்த வியாபியாயகப்பட் டதுவாமி வனந் தோ, பொங்குமலங்க ளுடனுகப்போந்தும் கிடந்தான் பல்லூழி, தங்குமருளா லறிவாகிச் சார்ந்துகலந்தின் றேகோகோ, எங்கும்பரந்தா னெனுங்குணியோ வெம் மான்றிருப்புன் முறுவலே. (8)

மட்டாமலங்கட்குட்புறம்பாய் வதிந்து மலமே ஆரகமா, யொட்டாநின்ற னமதருளங்கூடா டிடவங்க வை யெல்லாம், விட்டானருளே தாரகமாய் மேவிக் கொண்டா னினிமலங்கட், கெட்டானிவனென் றிடுங் குணியோ வெம்மான்றிருப்புன் முறுவலே. (9)

ஆறுனந்தோ தீவினைக ளந்தக்கரணஞ் சுத்தியி லான், தேறுன்றேற வுரைத்தாலுஞ் செய்மாறென்கொ றிருநாமங், கூறுன்கூறு மவரிடத்தும் குறுகானிவனு நமைக்காண, வாறுனே கோவெனுங்குணியோ வானே ன்றிருப்புன் முறுவலே. (10)

எள்ளத்தனையு மிரக்கமிலா னிவனேகொடிய மா பாவி, யுள்ளத்துயர மொருக்காலு மொழியானிவனுந் தனையாளக், கொள்ளச்சொலியுந் திரிகின்றான்கொடி யோனென்றன்முக நோக்கி, விள்ளப்பெரிதா யிடெங்கு ணியோ விண்ணோன்றிருப்புன் முறுவலே. (11)

திருப்புன்முறுவல் முற்றிற்று.



சிற்றம்பலநாடிகள் சாத்திரக்கோத்து முடிந்தது.

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் றிருவடிவாழ்க.

ஸ்ரீ சிவஞான யோகிகள் சேவடிவாழ்க.



உ

திருச்சிற்றம்பலம்.

திருக்கயிலாயபரம்பரை

ஸ்ரீநகரம் காஞ்சி-மெய்கண்டசிவாசாரியராதீனம்

ஸ்ரீலஸ்ரீ

# ஞானப்பிரகாசதேசிகசுவாமிகள்மீது

திருமயிலை - வித்வான்

## சண்முகம்பிள்ளைபாடிய

கட்டளைக்கலித்துறை.

திருவேயருட்செல்வமேயன்பருன்னுஞ்செழுங்கருணை
யுருவேயென்னுருயிர்க்கோருயிரேயொழியாதபவத்
தொருவேன்புகுந்துநின்றெய்த்தேற்கிரங்கிடெம்முத்தமனே
தெரிவேயெழிற்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (1)

உள்ளன்பிலாருனையெய்தாரரந்தையுறுவரெனிற்
கள்ளம்பயின்றமனச்சிறியேனின்கருணைநெடு
வெள்ளம்படிந்துனமாமலர்ச்சேவடிமேவுவனோ
தெள்ளுணர்வோர்தொழுஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (2)

எல்லாப்பிறப்பும்பிறந்திளைத்தேனென்றினிதுரைத்த
நல்லான்மொழிக்கொருகாட்டென்பதேழையிஞ்ஞான்றலதிங்
கொல்லார்சில்லோர்நின்னருட்பார்வையென்னுழையுற்றிடினே
செல்லாதிராவினைஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (3)

ஆகமமாகிநின்றண்ணிப்பவனெம்மனாதிமுத்தன்
ஏகனனேகனெனமெய்ச்சுருதியெடுத்தியம்பப்
பாகமிலாப்பரிசாலலமந்தனன்பாசமலச்
சேகரெய்தாக்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (4)

மேதாவியருமுணர்வருநன்றனைமேவியிறைஞ்
சோதாப்பிறப்பினிலுய்ப்பிறப்பேநல்லதுறனிரு
பாதாரவிந்தம்பணியவிரங்குபரிவினெடுஞ்
சேதாவெனநனிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (5)

கல்லேன்கலதிமுழுமூடனேனுமிக்காசினியில்
வல்லேயடைந்தனனின்னிருதாண்மலர்வஞ்சநெஞ்சப்
பொல்லேனினதடியாரடித்தொண்டுபுரிவதென்றோ
செல்லேய்மதிற்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (6)

பொய்கண்டகன்றதிருவெண்ணைமேவுபுனிதசுக
மெய்கண்டநாதன்மரபோங்கவந்தவியன்செல்வமே
கைகண்டநன்மருந்தென்பிறவிக்கடுநோய்க்குநுரை
செய்கண்டதென்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (7)

தோலாநன்றுவினரேத்தும்பரமகின்சூழலடைந்
தேலாதவெம்பிறப்பெய்திகின்றேனுக்கிரங்குகண்டாய்
நாலாமறையொருமாவெனவோங்கநயந்தமருஞ்
சேலார்வயற்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (8)

தாவடியோட்டுமெயிற்பரியானைத்தருமுமையாள்
மாவடிக்கீழ்நினையேத்துறுங்கச்சியில்வந்தெனக்கு
மூவடிகேட்டன்றுலகளந்தானுமுன்னிப்புணராச்
சேவடிசூட்டுதிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (9)

எள்ளினெய்பாலிற்சுவைகனிமாட்டினிரதமென
வள்ளிநிற்கும்பரிசாம்பிரிவற்றவவ்வுண்மைநெறி
கொள்ளியவென்றனுளத்திற்கொளுத்தெண்குணமலையே
தெள்ளியவன்பர்சொன்ஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (10

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.
ஸ்ரீசிவஞானயோகிகள் சேவடிவாழ்க.

---

உ

திருச்சிற்றம்பலம்.

சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

# சாத்திரக்கொத்து



இஃது

தமிழ்ப் பண்டிதர்

சே. வெள்ளியம்பலம்பிள்ளையவர்கள் குமாரர்

சே. சிவஞானம்பிள்ளையவர்கள்

விருப்பத்தின்படி,

திருமயிலை - வித்வான்

சண்முகம்பிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு,

நே. முருகேச முதலியாரவர்களால்

தமது

சென்னைப் புரசை

“கணேச” அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

சிவமயம்.

# அட்டவணை.




| நம்பர். | விஷயம். | பக்கம். | பாட்டு. |
|---|---|---|---|
| 1 | செல்காலத்திரங்கல் ... ... | 1 | 54 |
| 2 | நிகழ்காலத்திரங்கல் ... ... | 8 | 50 |
| 3 | வருகாலத்திரங்கல் ... ... ... | 14 | 48 |
| 4 | அநுபூதிவிளக்கம் ... ... ... | 20 | 64 |
| 5 | தாலாட்டு ... ... ... ... | 28 | 63 |
| 6 | வெண்பா ... ... ... ... | 36 | 65 |
| 7 | கட்டளைக்கலித்துறை ... ... | 50 | 54 |
| 8 | துகளறுபோதம் ... ... ... | 63 | 79 |
| 9 | திருப்புன்முறுவல் ... ... | 87 | 11 |

உ

திருச்சிற்றம்பலம்.

# நூலாசிரியர் வரலாறு.



தெய்வப்புலமை ஔவையாரால் 'சோழவளநாடு சோறுடைத்து' என்னும் பூவிரிபுனல்சூழ் காவிரி வளஞ்செறிந் தின்னறீர்த் தோங்குறூஉம் சென்னி நன்னாட்டகத்துப்,

"பிரமபுரம் வேணுபுரம் பெரும்புகலி வெங்குருநீர்ப்
பொருவிறிருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்
வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்
பரவுதிருக் கழுமலமாம்பன் னிரண்டுதிருப் பெயர்த்தால்."

என்னும் பன்னிரு திருப்பெயருடைப்பழம்பதியின் கண் 'ஓரும் வேதாந்தத் துச்சியிற் பழுத்த சாரங்கொண்ட சைவசித்தாந்த' சந்தானகுரவரு ளொருவராகிய கொற்றவன்குடி உமாபதி சிவனாற் சிறப்பித்தெடுத் தோதப்பட்ட வேளாண்குடிவாழ்க்கை யுடையார் மரபின்கண் சிற்றம்பலநாடிக ளென்பாரொருவர் தோன்றி

னர். இவர் தம்மைப் பெற்றோர் சுக்கில பக்கத்துச் சந்தி ரன்போல் வளர்க்க வளர்ந்து தக்கவயதுநிரம்புதற்குள் நிகண்டு கற்று இலக்கியம் இலக்கணம் தருக்க முதலிய கருவிநூல்கள் பயின்று சிற்சபையி லற்புத நடஞ்செயு மாண்டகை நீண்ட பூங்கழற்க ணன்புடைமை முற்பிறப் பிலுடைமையாற் பதி பசு பாச மென்னு முப்பொரு ளுணர்ச்சியுடைய ராயினர்.

இவ ரிருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாத முடையராக விளங்கலாற் சுத்தாத்துவித வைதிக சைவ பரமாசாரிய சிகாமணியாகிய பொய்கண் டகன்ற மெய்கண்ட தேசிகர் மரபிடை யருளுபதேசம் பெற் றுச் சிறந்து சிவாநுபூதிச் செல்வராய் வீற்றிருந்தனர். இவர்பா லருளுபதேசம் பெற்றுச் சிறந்தா ரனேப்ப லர். இவருளொரு திருக்கூட்டமாகச் சேர்ந்து அடிக ளடிகட்குழுவ லன்புடைய ராகிச் சிவாநுபூதிமான்க ளெனச் சிறந்தார் அறுபான் மூவர்; அவர் தத்துவப் பிரகாசர், ஞானப் பிரகாசர், கண்ணப்பர் முதலாயினோர். இவரனைவரு மொருங் கெய்திக் கவுரிமாயூரத் தண் மையாய தொரு மடாலயத் தெழுந்தருளிச் சிவபூசை, குருபூசை முதலியன நடத்தி வந்தனர்.

இவ்வாறிருக்கையி லொருஞான்று அடிகளும் அடியரும் வழக்கம்போற் றிருவமுது மிசைந்தனர். அது போழ்து பரிசாரகன் வேப்பெண்ணெயை ஆனெயென் றுணராமே யெடுத்தவருண்ணு மன்னத்திற்பெய்தனன். அடிகள் முதலானோரும் ஒரு விகற்பமு மில்லாது விழைந்து அமுது கொண்டனர். அவருளொருவராகிய கண்ணப்பர் சற்றே விகற்பமெய்திப் பரிசாரகன் அன்னத்திற் பெய்தது வேப்பெண்ணெயென் றுணர்ந்து எண்ணெயினை விட்டுப் பிசைந்த பருப்பன்னமுண்ணாது கவன்று 'வே'யென்றோக்காளித்தனர். அதனையுணர்ந்த அடிகளும் 'நமது திருக்கூட்டத்தே பக்குவ மில்லாதாரு மிருப்பது தகுதியோ' எனக் கட்டளை யிட்டனர். அதனைக் கேட்ட கண்ணப்பரும் உடனே இம்மென் றெழுந்து அப்பந்தியினின்று நீங்கிப் போந்து தமதடிக ளடிகளைச் சிந்தனையி லிடைவிடாது சிந்தித்துக் கொண்டே வடக்கனோக்கிச் சென்றனர்.

இவர் சென்ற சின்னாட்பின்னர் அடிகளும் தம்மடியரோடுஞ் சித்திரை மதியிற் றிருவோணநாளிற் சமாதியி லிறங்குவதாக அந்நாளிற் பொன்னி நதிசூழ்ந்த சென்னிநன்னாட்டினை யரசாண்டுவரும் அரசனைக் கூயறிவித்து,

அதற்குத் தக்கஇடம் அமைக்க வெனக்கட்டளை யிட்டனர். அரசனே கழிபேருவகையெய்தி அக்கௌரி மாயூரத்திற் கண்மையாகிய பூம்பொழி லொன்றில் அவ்வடிகள் கட்டளையிட்டாங்கு அடிகட்கொரு சமாதியும் அடியர்அறுபானிருவருக்குமத்துணைச்சமாதியுமமைத்து அடிகட்கு விண்ணப் பித்ததன்றி இச்சிறந்த செய்தியை உலகமெங்கும் அறியப் பறை சாற்றுவித்தனன்.

இவ்வதிசயங் கேட்டாங் கனைவரும் குறித்த நாளில் அப்பூம்பொழிலையடைந்து யாது விநோத நடக்குமோ காண்பேமென் றெதிர்பார்த் திருந்தனர். அரசனே அப்பூம்பொழிலை யொப்பனை புனைந் தடிகளடிகளை வணங்கி விண்ணப்பித்தனன். இறைவனோடு புக்கொடுங்குங்கால நேர்ந்தமையான் அடிகளும் தம்மடியருடன் அப்பூம்பொழிலை யெய்திக் காணவந்தார் யாரையும் திருவருட் கண்ணானோக்கி யாசீர்வதித்து யாவருங்கேட்பத் திருவெண்பாக்கள் மூன்றனை யருளிச்செய்து தமக்கென்றமைத்த சமாதியி லிறங்கிச் சிவத்தியானத்தோடு சின்முத்திரையாகிய மோனமுத்திரை தாங்கி நிலவினர். பின்னர் அடியரறுபா னிருவருந் தனித்தனி யொவ்வொருதிருவெண்பாப்பாடிக் கொண்டே தம்மடிக ளடிகளைத்

தியானஞ் செய்துகொண்டு மும்முறை வலம் வந்தெட்டுறுப்பு நிலமுறப்பணிந்து தத்தமக் கமைத்த சமாதியி லிறங்கிச் சித்திபெற்றனர்.

இவ்வாறு நிகழு மதிசயம் அரசனும் பலரும் வியப்புற்று இப்பெற லருஞ்செல்வம் இக்கூட்டத்திற் சேர்ந்தவடியவ ரொருவரெய்தப் பெற்றிலரே! அவரெங்குற்றனரோ! யாண்டுள்ளாரோ! அவரிச்செய்தி யுணர்வரோ! எனப்பலபடப் பேசிக் கவல் கொண்டனர். அவ்வமையத்தில் வடக்கட் சென்ற அடியர் தற்செயலா யாண்டுத் தோன்றித் தமக்கென்றொரு சமாதியமைக்கப் படாமையா லாங்குள்ள வெல்லாச் சமாதிகளையுமும்முறைவலம்வந்துவணங்கித்தம்மடிகள் சமாதியை நாடி யாராவன்பு மீதூர்ந்து கண்ணீருங் கம்பலையுமாய் நெஞ்சநெக்கு நெக்குக் கசிந்துருகி நின்று; 'ஆண்டகுரு சிற்றம் பலவாவடியேற்கா - மீண்டும் பிறக்க நீ வேண்டாவோ' எனக் கூறி நின்றனர். உடனே அச்சமாதி பிளவுபட அடிகள் விழித்து நோக்கி எதிரிற் கூப்பிய கையராய்க் கவல்கொண்ட கண்ணப்பரை யிருகையா ரத்தழீஇக்கொண்டு தமது மடிமீதிருத்தி ஐக்கியஞ்செய்து கொண்டனர். இவர் பெற்றபேறேபேறு.

இவர் பெற்றது யாரினுஞ் சிறப்புற்றதெனக் கண்டார் யாவருங்கழறித் தத்தமிருக்கையை யடைந்தனர். அரச னே அச்சமாதிக் கட்டடங்களை யெல்லா மேலே விதா னித்துத் திருத்திப் பூசனை நடத்த வமைத்துச் சிவப் பேறுற்றுச் சிறந்தனன். இதனுண்மை பின்வருமபியுத் தர் செய்யுளா னறியலாம். அது "முத்தாறுபத்து மூவர் பணிந் தேத்தும், சித்தர் வனந்தில்லைச் சிற்றம்பலவா- பத்தர், பவவிருளை நீக்கியருள் பானுவேதுய்ய, தவ வடிவே நின்றுள் சரண்." இக்கவுரிமா யூரத்திற் கடுத்த இவர் சமாதி யமைந்த பூம்பொழிலைச் சித்தர்வனமென் றும், சித்தக் காடென்றும் இன்னும் வழங்குகின்றனர்.

இச்சாத்திரக் கொத்து ளடங்கிய நூல்கள் செல்கா லத்திரங்கல், நிகழ் காலத்திரங்கல், வருகாலத்திரங்கல், அநுபூதிவிளக்கம், தாலாட்டு, கலித்துறை, முறுவல் துகளறுபோத மென்பன. இவ்வடிகளும் அடியவரும் சமாதியடையும்போது சிற்றம்பலநாடிகள் மூன்று வெண்பாவும் ஏனையோர் ஒவ்வொரு வெண்பாவும் பாடி யதாகத் தோன்றுகின்றது. திருச்செந்தூர் அகவலையும் இவர் செய்ததாகச் சிலர் கூறுப. இப்பெயரினர் வேறிரு வருளர். அவர் பெரியபழுதைச் சிற்றம்பல நாடிகளும், சிறுபழுதைச் சிற்றம்பலநாடிகளு மெனப்படுவர்.

# முகவுரை.



யான் சிற்றம்பல நாடிகளும் அவரடியரும் பாடிய இவ்வரிய பெரிய நூல்களடங்கிய திரட்டொன்று வெகு காலத்திற்குமுன் கிடைக்கப் பெற்றேன். அதன் சார்பேபோலும் எனக்கும் அவ்வடிகள் மரபிற் சமய விசேட தீக்கைகள் கிடைக்கப்பெற்றன. இப்பரம்பரை சீகாழி, மாயூர மென்பனவாய சோணாட்டுத் திருப்பதிகளினின்றுந் திருத்தொண்டை நாட்டி லெம்மையாளுடைய அறப்பெருஞ் செல்வி எண்ணான் கறனும் புரிந்திறைவனை வளைச்சுவட்டாலுந் தனச்சுவட்டாலும் இறுகச் செய்த தவக்ஷேத்திரமும் சத்தபுரிகளி லொன்றுயா யிலகிய காஞ்சி நகரத்தில் ஞானப்பிரகாச ராதீனமென இற்றைஞான்று மிருக்கின்றது. அங்கு மகா குருபூசை சித்திரை மாதத் திருவோண நாளிற் பிரதிவருடமு நடந்தேறி வருகின்றது. அவ்வாதீனத்தின் முன்னிருந்த மகாசந்நிதானம் அடியேனை நோக்கிக் கடைக்கணித்து நம்முடைய ஆதீனப் பெருஞ் செல்வமாகிய இச்சிற்றம்பல நாடிகள் நூல்களனைத்தும் அடியேன்பாற்கொடுத்து அச்சிட்டுபகரித்த லுனக்குக் கடனெனக் கட்டளையிட் டிருந்தார்கள். கல்வியிலுஞ் செல்வத்திலும் வறியனாகிய யான் இப்பெருங் காரிய மெவ்வாறு முடிப்பலெனக்

கருதியிருக்கையிற் பிரதிகள் சில கிடைத்துத் திருத்த முஞ் செய்ய முயன்றேன். துகளறுபோத மொன்றே திருத்தவெனக்கு மிகச்சாலச் சிரமந் தந்தது. சென்னைக் கிறிஸ்தவ கலாசாலைத் தமிழ்ப் பண்டிதராகிய நாகை. வேதாசலம்பிள்ளை யவர்கள் சிற்றுரையொன்றெழுதிவி டுத்த ஒருபிரதி கிடைத்தது. அவ்வுரையோமிகச்சுருக்கி யெழுதி யிருக்கின்றது. இதுநிற்க ; வடநூற் கடலையும் தமிழ்நூற் கடலையு நிலைகண்டுணர்ந்த திராவிடபாடிய காரராகிய திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சிவஞான யோகிகளே ஆங்காங்குக் காட்டாகக் காட்டிய இவ்வரிய பெரிய சாத்திரத்தை எவ்வாறு வெளிவிடுவதெனக் கருதியே யிருந்த எனக்குத் திருநெல்வேலி - வித்து வான் — பால்வண்ண முதலியா ரவர்கள் தென் னாட்டுப் பல பிரதிகளையுங்கொண்டு பரிசோதித் தச்சிட் டுதவிய பிரதியுங் கிடைத்து என் பிரதியோடு ஒத்திட்டு அச்சிட முயன்றேன்.

இதை யெவ்வா றச்சிடுவதென்று கருதியிருந்த எனக்குப்பரோபகாரசிந்தையுடன்சென்னைப்புரசையிற் பெண்களுக்கு இந்துமதபோதனை போதிக்கு நிமித்தந் தரும பாடசாலை வைத்துக் கற்பிக்குஞ் செல்வராகிய

# முகவுரை.

சைவப்பிரபு - நே. முனிசாமி முதலியா ரவர்கள் ஷை பாடசாலைப் பரிபாலனத்திற் கென்றமைத்த தமது கணேச அச்சியந்திர சாலையிற் றமது சொந்தச் செலவிலேயே அச்சிட்டுத் தருவதாக வாக்களித் தவ்வாறே முடித்துங் கொடுத்தார்கள். அவர்கள் செய்தநன்றிக்கு யான் மழைக்கு மாறுதவிசெய்வா ரில்லதுபோற் கருத வேண்டுவதன்றி யான்செயற்பால தொன்றுமின்று. எனக்குப்பிரதியுதவினவர்கட்கு என்மனமாரவந்தனஞ் செலுத்துகின்றேன். யான் இச்சாத்திரக்கொத்தினை யச்சிடுகையில் என்னோடு பிரதிகளையொத்திட் டச்சிட வுதவியாயிருந்த - கவர்ண்மெண்டு பெண்கள் கல்விச் சாலைகளில் சென்றல் சர்க்கில் இன்ஸ்பெக்ட்ரஸ் தலைமை இலிகிதர் சே. சிவஞானம் பிள்ளைக்கும் என்ன கைம்மாறு செயற்பாலேன். இவ்வரிய பெரிய சாத்திரத்தை யானச்சிடக் கருணைசெய்த முழுமுதல்வன் றிருவருளை வணங்குகின்றேன்.

இங்ஙனம்:

தி. சண்முகம் பிள்ளை.



# பிரதிகள் கொடுத்தோர் பெயர்.

| | பிரதி எண். | |
|---|---|---|
| என்பாலிருந்த பிரதி | 1. | * |
| காஞ்சி. ஞானப்பிரகாச ராதீனம் | 1. | * |
| தி. கோதண்டசாமி பிள்ளை அவர்கள் | 1. | * |
| திரிசிரபுரம். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் தி. ஆறுமுக நயினர் அவர்கள். | 1. | * |
| துகளறு போதம்-திருநெல்வேலி வித்துவான், பால்வண்ண முதலியார் அவர்கள். | 1. | * |
| துகளறு போதமும் சிற்றம்பல நாடிகள் வெண்பாவும். சென்னைக் கிறிஸ்தவ கலா சாலைத் தமிழ்ப்பண்டிதர் நாகை. வேதா சலம் பிள்ளை அவர்கள். | 1. | * |

இங்ஙனம்

தி. ச.



உ

திருச்சிற்றம்பலம்.

# சீகாழிச் சிற்றம்பலநாடிகள்

அருளிச்செய்த

# சாத்திரக் கொத்து.

முதலாவது,

## செல்காலத்திரங்கல்.

சீரார் திருநீறுந் தீதிலருள் வேடமுமுன்
சேராம லேயோ தெளியா திருந்தனமே. (1)

வந்து பிறந்ததிந்த மானிடராய் மண்ணின்மிசை
யெந்தைபணி செய்வதற்கென் றெண்ணா திருந்தனமே.

திருக்கோயில் சூழ்ந்து சிவனுருவங் கண்டு
மருட்கோல மாற்றாமன் மாண்டு திரிந்தனமே. (3)

மஞ்சனமு மாமலரு மாருத் திருவிளக்குஞ்
செஞ்சடையோற்கென்றென்றுஞ்செய்யாதிருந்தனமே.

சமையவி சேட மவுத்திரிமுன் கொள்ளா
தமைவில் விடையத் தழிந்து திரிந்தனமே. (5)

அன்றே சிவனுரை யாதரவாய்ப் பூசித்த
லின்றே விணைப்பிறப்பி லீடழிந்து விட்டனமே. (6)

ஆதார யோக நிராதர்ர யோகமெனுஞ்
சூதான மில்லாமற் சூழ்ந்து பிறந்தனமே. (7)

ஊனொழித்திட் டென்று மொழியாத வீடுதரு
ஞானகுரு வேணுமென்று நாடா திருந்தனமே. (8)

அருவாகி நின்ற வரனு ருலகிற்
குருவா யிருத்தல் குறியா திருந்தனமே. (9)

மாசற்ற தேசிகரைச் சிந்தை மகிழ்ந்துருகிப்
பூசித்துப் போற்றுமற் போதவமே போக்கினமே. (10)

மாறுத மாக்கருணை மானிடர்போல் வந்திருக்கப்
பேறுகப் போற்றுமற் பேறிழந்து விட்டனமே. (11)

இன்றுபோ லன்றே யிறைவனுர் கண்மலரால்
நின்றுவினை போக்காமல் நிட்டூரஞ் செய்தனமே. (12)

அங்கமலத் தாளிரண்டு மன்றே தலைக்கொண்டு
பொங்குமலம் போக்காமற் புலன்வழியேபோக்கினமே.

பூத வுடம்பு பொருளல்ல வென்றுணர்ந்த
போதந் தனைமுன்னே பொருந்தியிடப் பெற்றிலமே.

மனுதிமுதல் வாயு மறந்திருந்த வாழ்வை
யனுதியே காணு தவமே யுழன்றனமே. (15)

ஒன்றும் பொறிபுலனை யோயா திருந்தவின்ப
மன்றருந்த வெல்லா மகன்றிருக்கப் பெற்றிலமே. (16)

ஆணவத்தை நீக்கி யறிவில் விழித்ததனைக்
காணவைத்த வன்றுமுதல் காணு தலந்தனமே. (17)

என்னறிவு கண்டிங் கிருட்டீர்த்த விவ்விழிப்பு
முன்னமறி யாதலந்தேன் மூர்க்கனே னல்லவோ. (18)

அறிவுக் கறிவாகி யாதார மாகிப்
பிறிகைக் கரிதாம்பே றிந்நெடுநாள் பெற்றிலமே. (19)

பார்க்க வரிதாம் பரவறிவின் றன்பெருமை
யேற்கவே கண்டுகண் டின்புற் றிருந்திலமே. (20)

எல்லா வறிவு மிழந்தவிடத் துள்ளவின்ப
மல்லாத பாவியே னன்றே யறிந்திலமே. (21)

வானுந்து தேவறியா மாமலர்த்தாள் வாழ்த்தியன்றே
யானந்தத் தேனை யருந்துதற்குப் பெற்றிலமே. (22)

உள்ளும் புறம்பு மொழியாத வானந்த
வெள்ளத் தழுந்தாமல் வீணெடுநாள் விட்டனமே. (23)

சீரார் சிவானந்தத் தேனருந்தி வாழ்வதற்குத்
தேராம லிங்நெடுநாள் தீவினையில் மூளுவதே. (24)

எண்ணரிய பேரின்ப மிப்போது போலமுன்னும்
நண்ணி யருந்தாமல் நாளவமே போக்கினமே. (25)

கண்டவிட மெல்லாங் கலந்த பரமசுகங்
கொண்டிருந்து வாழாநாள் கொன்னே கழிந்தனமே.

எல்லாமா முத்தியினின் றென்னேமே விட்டசுக
நில்லாம லிங்நெடுநாள் நில்லாம னின்றனமே. (27)

சேரச் சிவமாந் தெளிவுந் தெளிந்தவிந்த
நேரம்போல் முன்னுநின் றுவிடப் பெற்றிலமே. (28)

நில்லாத தெல்லாம் நிலையென்று நெஞ்சில்வைத்துச்
சொல்லாத பேரறிவு சொல்லாடப் பெற்றிலமே. (29)

ஆகாப் பொருள்தேடி யாம்பொருளைக் கைவிட்டுப்
போகா வுடல்தோறும் புக்குழன்று விட்டனமே. (30)

முத்திநெறி நில்லாத மூர்க்க ருடன்கூடி
யத்தனடி யாரடியை யாதரிக்கப் பெற்றிலமே. (31)

ஈன்றாள் முதலாக வெவ்வுறவும் போற்றிசெய்து
சான்றோர் திருவடியைச் சார்வதற்குப் பெற்றிலமே.

நெஞ்சழுத்த மாகவே நிட்டூரம் பேசிமிக
வஞ்செழுத்தும் வெண்ணீறு மாதரிக்கப் பெற்றிலமே.

புரையுடைய சிந்தைப் புலைய ருடன்கூடி
யரனடியார் கூட்ட மணுகுதற்குப் பெற்றிலமே. (34)

போதமிலா ரோடே பொருந்தக் கலந்துமிக
வேதமுடி வாரை விளம்புதற்குப் பெற்றிலமே. (35)

பேயான பொய்ச்சமைய பேதந் தனிலுணர்ந்து
வாயார வாகமத்தை வாழ்த்துதற்குப் பெற்றிலமே.(36)

பொய்கண் டகலாத போதமிலோ மிந்நெடுநாள்
மெய்கண்டான் சந்தான மேவுதற்குப் பெற்றிலமே.

பொங்கும் பவத்தொடர்ச்சி போக்குதற்கு முன்னமே
கங்கைநகர் மெய்கண்டான் காற்கமலம் பெற்றிலமே.

தீரா மலமனைத்துந் தீர்ந்திருக்க விந்நெடுநாள்
சீராரு மெய்கண்டான் சேவடிகள் பெற்றிலமே. (39)

ஆத்த பிறப்பறுக்க வன்றே யருளுருவாய்க்
கூத்தனருள் மெய்கண்டான் கூருதற்குப் பெற்றிலமே.

ஒன்றே யெனவுரைத்த வொப்பிலருள் மெய்கண்டா
னன்றே யருளுருவா யாண்டருளப் பெற்றிலமே. (41)

தீதிலருள் மெய்கண்டான் செங்கமலத் தாளிரண்டு
மாதரவாய்ப் பூசிக்க வன்றே யறிந்திலமே. (42)

நல்லகுரு நாத னல்குதிரு மேனிதனைப்
புல்லறிவு தீரவன்றே பூசிக்கப் பெற்றிலமே. (43)

பருகத் தொலையாப் பரபோகந் தன்னில்
உருகிக் கலவாம லூனுகந்து விட்டனமே. (44)

தீராத பாதகங்கள் தீரக் குருபாத
மோரா வுணர்வென் றுணர வறிந்திலமே. (45)

எண்கொளா வின்ப வெழிற்குரவர் மேனிதனைக்
கண்கள்களி கூரவன்றே கண்டிருக்கப் பெற்றிலமே.

சொல்லாத சொல்லதனைச் சொல்லாலே சொன்னார்சொ
லெல்லாஞ் செவிகளினு லெப்பொழுதுங் கேட்டிலமே.

இதமகித மாற்று மெழிற்குரவர் தந்த
பதமிரண்டு மன்றே பரிசிக்கப் பெற்றிலமே. (48)

களித்த திருஞானங் கண்ணு லருந்தி
யளித்ததனை யன்றே யருந்துதற்குப் பெற்றிலமே. (49)

ஆக்காப் பதத்தி லருமணத்தை யாதரித்து
மூக்கான் முரலுதற்கு முன்னமே பெற்றிலமே. (50)

தாயா யருள்சுரந்த தம்பிரான் றாளிணையை
வாயார வன்றே வழுத்துதற்குப் பெற்றிலமே. (51)

போதநான் செய்துவந்த பொல்லா வினைதீர
நாதனு ரேவல் நடப்பதற்குப் பெற்றிலமே. (52)

மெய்யணைய வந்தருளு மெய்கண்டான் மேனியன்றே
கையிணைகள் கூப்பிக் கசிந்துருகப் பெற்றிலமே. (53)

நிலையாம் பொருளில் நிறுத்துங் குருவைத்
தலையால் வணங்காமற் றாழ்வுசெய்து விட்டனமே. (54)

செல்காலத்திரங்கல் - முற்றும்.



## இரண்டாவது,

## நிகழ்காலத்திரங்கல்.



உன்னரிய ஞான முருவாக வந்தருள
வென்னதவஞ் செய்தேமுன் னியாமென் றறிந்திலமே.

ஆண்டருள வேணுமெனு மாசையோ நல்லறமோ
வேண்டி யெமையாள மெய்கண்டார் வந்ததுவே. (2)

கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டு
மீட்சி தரவெமக்கு மெய்கண்டார் வந்ததுவே. (3)

வாரீர் சிவனடியார் வாராமல் வந்தவரைப்
பாரீர் பரத்தின் பரிணமந் தன்னையுமே. (4)

இப்படியே யிப்படியி லென்போ லிருப்பதுவே
யப்படியே யந்த வகண்டபரி பூரணமே. (5)

போதத வின்பப் பெருமா னுருக்கொண்டு
வாராமல் வந்துதிரு வார்த்தை யுரைப்பதுவே. (6)

கல்லா னிழலிருந்து கைம்மலரால் நால்வருக்குச்
சொல்லாத சொல்லதனைச் சொல்லுதற்கு வந்தவா. (7)

அறுபத்து மூவர்க்கு மன்றன்று வந்தா
ருறுமுத்தி சேர்வார்கட் கோருருவாய் வந்தவா. (8)

சீரார் மறையுஞ் சிவாகமமுஞ் செய் நூலு
மோரா வுணர்வு மொருமொழியாய்த் தந்தவா. (9)

அரிபிரமர் காணுத வாநந்தத் தேனைப்
பருகிப்பரு காதருந்தப் பான்மொழியாய்த் தந்தவா.

தோன்றும்பொழுதெல்லாஞ்சுகவடிவேதோன்றுதற்குத்
தோன்றும் பெருமாள்தஞ் சொல்லாலே சொன்னவா.

பஞ்சமலந் தீர்ந்த பரம சுகந்தன்னைக்
கிஞ்சுகவா யாலே கேளென்று சொன்னவா. (12)

போதளவுங் காணுமற் புல்குஞ் சுகந்தன்னைச்
சீதள வாயாலே தெளிவதற்குச் செப்பியவா. (13)

நாயின் கழுத்தினுக்கு நல்லாரம் வாய்த்ததுபோல்
தீயவினை யேனருந்தத் தெள்ளமுதந் தந்தவா. (14)

வேதன்மால் காணுத மெய்கண்ட நாதனர்
பாத நாங்காணப் படிமிசையே வந்தவா. (15)

மெய்கண்ட நாதனர் மேதினிமேல் வந்தருளக்
கைகண்டோம் வீட்டின்பங் காட்சி யறக்கலந்தே. (16)

தீராத பொய்யவித்தை திருமாந் தீர்ந்ததற்பின்
ஓரா வுணர்வுடம்பா யொன்றுபட நின்றவா. (17)

குருவொழிந்து தெய்வங் குவலயத்திற் கொள்ளார்
இருவ ரறியாத விறைநிறைவி லேய்ந்தவா. (18)

காணீர் திருமேனி கண்ணாரக் கண்குளிரப்
பேணீ ரவர்பதத்தைப் பேசீ ரவர்புகழே. (19)

அண்டங் கடந்த வறிவுருவைப் பாருங்கோள்
தொண்டர் புடைசூழ்ந்த சோதிதனைப் பாருங்கோள்.

ஆனந்த நாட னருள்மேனி பாருங்கோள்
தேனுந்து வாயாரச் செப்புதலைக் கேளுங்கோள். (21)

எண்ணாத வின்ப விறையுருவைப் பாருங்கோள்
கண்ணால் வினைதீர்த்த காரணரைப் பாருங்கோள். (22)

வாக்கிறந்த வின்ப வடிவதனைப் பாருங்கோள்
நோக்கரிய நோக்குடைய நுண்ணியரைப்பாருங்கோள்.

திருமா லயனறியாத் தேசிகரைப் பாரும்
கருமா லொழித்தாண்ட காற்கமலம் பாருமே. (24)

செய்தற் கரியதவஞ் செய்தாலுந் தேவர்கட்கு
மெய்தற் கரியபிரா னெய்தியவா பாருமே. (25)

தீரா மலங்கெடுத்த சிற்பரரைக் காணுங்கோள்
வாரா வருளருள வந்தவரைக் காணுங்கோள். (26)

பிறவா நெறிகாட்டும் பிஞ்ஞகரைக் காணு
மறவாத பேரின்பம் வைத்தவரைக் காணுமே. (27)

மண்ணிற் பிறந்து வருந்தாமை வான்கருணை
கண்ணிற் பணிவித்த காரணரைக் காணுமே. (28)

வேறு.

அல்ல லறுத்தமை பாரீர் அண்ண லிருந்தமை பாரீர்
சொல்லை விடுத்தமை பாரீர் சோதி யெடுத்தமை பாரீர்.

மாயை கழன்றமை பாரீர் வல்வினை விட்டமை பாரீர்
தூய வறிவரைப் பாரீர் தோன்றாத் துணைவரைப்பாரீர்.

என்னை யளித்தமை பாரீ ரென்னுள் இருந்தமை பாரீர்
தன்னை யளித்தமை பாரீர் தகைவற நின்றமை பாரீர்.

பூதங் களைந்தமை பாரீர் பொய்யுரை மாண்டமைபாரீர்
நாத மொழிந்தமை பாரீர் நாமற நின்றமை பாரீர். (32)

ஆசை யகன்றமை பாரீ ராணவம் விட்டமை பாரீர்
தேசு நிறைந்தமை பாரீர் தேசிகர் தேசரைப் பாரீர்.

வா தனை போனமை பாரீர் வாழ்வுபொய்யானமை பாரீர்
பேதைமை பேர்ந்தமை பாரீர் பேதைமை போனது பாரீர்.

உருவ மிறந்தமை பாரீ ருணர்வுரு வானமை பாரீர்
அருவ மிறந்தமை பாரீ ரானந்த மானமை பாரீர். (35)

போத மிறந்தமை பாரீர் பூரண மானமை பாரீர்
வேத முடிவரைப் பாரீர் மெய்கண்ட நாதரைப் பாரீர்.

ஆகம சீலரைப் பாரீர் அம்பல வாணரைப் பாரீர்
ஏக னனேகனைப் பாரீர் இன்ப வுருவனைப் பாரீர். (37)

அறிவுக் கறிவனைப் பாரீ ரறிவுக் கதிதனைப் பாரீர்
செறிகைக் கினியனைப் பாரீர் தேசிக தேவனைப் பாரீர்.

சேரப் படைத்தமை பாரீர் சேர வளித்தமை பாரீர்
சேரத் துடைத்தமைபாரீர் செய்யாச்செயலனைப்பாரீர்.

உள்ளும் புறம்பனைப் பாரீ ரொருதன்மையாளனைப்பாரீர்
தெள்ளத் தெளிவனைப் பாரீர் தேறலிற்றேறனைப்பாரீர்.

சுட்ட விருந்தமை பாரீர் சுட்டற நின்றமை பாரீர்
கிட்ட வெளியனைப் பாரீர் கேளிரிற்கேளனைப்பாரீர் (41)

கருணை யுருவனைப் பாரீர் கண்ணரு ளாளனைப் பாரீர்
இருண்மல மற்றமை பாரீ ரின்புற் றிருந்தமை பாரீர்.

எல்லாம்பொய்யானமைபாரீ ரின்பமெய்யானமைபாரீர்
சொல்லாதசொல்லைப்பாரீர்சொல்லற்றசோதியைப்பாரீர்
சிவமொளிந் தற்றமை பாரீர் சேர்ந்து கலந்தமை பாரீர்
நவமொழிந் துற்றமை பாரீர் நாமவ ரானமை பாரீர்.

வேறு.

இப்போது கண்ட விறையறிவு மென்னுயிருக்
கப்போது மாதார மாகியவா கண்டனமே. (45)

செப்பரிய வுண்மைச் சிவஞான தேசிகரா
யிப்படியே வந்திங் கிருந்த ததிசயமே. (46)

தேன்றரு மானந்தச் செங்கமலத் தாளருள
மானிடர்போன் மண்ணின்மிசை வந்த ததிசயமே.(47)

என்று மருவுருவா யெங்கு நிறைந்தவர் தாம்
இன்றெமக்குத் தேசிகரா யெய்ந்த ததிசயமே. (48)

போக்குவர வற்றிருக்கும் பூரணர்தா மண்ணின்மிசை
யாக்கையுடன் வந்த தறவு மதிசயமே. (49)

எங்கு நிறைந்தவர்தா மேக வுருவாகிச்
செங்கமலத் தாள்வழங்கச் சேர்ந்த ததிசயமே. (50)

நிகழ்காலத்திரங்கல் - முற்றும்.



## மூன்றுவது,

## வருகாலத்திரங்கல்.



தோன்றி மறையுமிந்தத் தொல்லுலகு தோன்றும
லான்ற வறிவுநா மாய்விடுவ தெக்காலம். (1)

ஆரணன்மால் காணு வறிவா யகண்டமுமாம்
பூரணத்துக் குள்ளே புகுவதினி யெக்காலம். (2)

கனவு நனவென்று காணுமல் மெய்யி
லினவு கனவற் றிருப்பதினி யெக்காலம். (3)

வேதன்மால் காணுத வேறற்ற வீட்டின்பம்
போதமால் கொண்டு புரையறுவ தெக்காலம். (4)

காண்கின்ற தெல்லாங் கலந்த சுகமாகப்
பூண்கின்ற போதப் புரையறுவ தெக்காலம். (5)

ஒன்றுபட நின்ற வுணர்வே யுணர்வாகி
நின்றபடி நின்று நினைவழிவ தெக்காலம். (6)

ஆரா வமுத மமையா தருந்தியதிற்
பேராம னிற்கப் பெறுவதினி யெக்காலம். (7)

ஓரொருகால் வாதனையி லுற்றழுந்தல் விட்டறிவிற்
பூரணமேல் கொண்டு பொருந்துவது மெக்காலம் (8)

காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு மாய்நிற்கும்
வீண்பாவந் தீர விளைவதினி யெக்காலம். (9)

அருவு முருவு மருவுருவு மான
வுருமை யொழிந்திடத்தி லுறுவதுவு மெக்காலம். (10)

நீங்காத பேரறிவில் நீங்காம லொன்றுபட்டு
வாங்காரந் தீர வடங்குவது மெக்காலம். (11)

அந்த வறிவகன்றே யானந்த மாலேறித்
தொந்தப் பவத்திற் றுரிசறுவ தெக்காலம். (12)

கேட்டுரைத்த லன்றியே கேளாம லன்றியே
வீட்டிலொரு தன்மை விளைவதினி யெக்காலம். (13)

சொல்லரிய வின்பச் சுகமே சுகமாக
வெல்லையற வொன்று யிருப்பதினி யெக்காலம். (14)

தாயுதரம் புக்க தடுமாற்றந் தீருவதற்
காயு மறிவி லழுந்துவது மெக்காலம். (15)

இந்நாள் நிரையத் திருந்த துயர் தீர
உன்னு வொளியி லொளிப்பதினி யெக்காலம். (16)

ஆக்க மளவற்ற வறிவே யறிவாக
நீக்கமற நின்று நிலையழிவ தெக்காலம். (17)

அஞ்செழுத்தும்வெண்ணீறு மன்பர்திரு வேடமுமென்
னெஞ்சமுழுத்த மாக நிலைபெறுவ தெக்காலம். (18)

அண்ணல்திருக் கோயிற் கடிமைத் திறமல்லா
தெண்ணுங் கரும மிழிவதினி யெக்காலம். (19)

வேறு.

தூக்கற்ற சோதியினுள்ளே சொல்லற நின்று சுகித்தே
நீக்கற் றிருப்பதெந் நாளே நித்தத் திருப்பதெந்நாளே.

ஓருணர் வான வுணர்வுக் குள்ளுணர் வாக வுணர்ந்தே
பார்முதல்நாத மொழியப் பண்பற் றிருப்பதெந்நாளே.

ஆரணன் வேத மறியா வண்ணல் நிறைவே நிறைவாய்ப்
பூரண னோர்நிறை வாயே போதத்தில் நிற்பதெந்நாளே.

கண்டதுகண்டதுகண்டே விண்டதுவிண்டதுவிண்டே
கொண்டதுகொண்டதுகொண்டே கொள்கையிறப்பதெந்நாளே.

கூடுதல் வாடுத லின்றே கூடுந ரொன்றென நின்றே
ஆடுதல் பாடுத லாயே யாய்விடு நாளினி யேதோ. (24)

வேறு.

என்று மெனைப்பிரியா வெம்பிரான் றன்னிறைவி
லொன்று படநின்றே யுண்டழிவ தில்லையோ. (25)

ஆண்ட குருபதத்துக் காட்செய்வ தல்லாது
பூண்ட புலன்வழியைப் போக்குநா ளில்லையோ. (26)

கண்ட வுடம்பெல்லாங் காணும லாருயிர்கள்
கண்டறிவைக் கண்டதனிற் கைகலக்கு நாளேதோ.

சற்றுந் தணவாத தம்பிரா னென்றறியாக்
குற்றந் தணிப்பதற்குக் கூறியிடு நாளேதோ. (28)

இன்றளவு மெந்தை யிணையடியிற் செல்லாமை
நின்றதுயர் தீர நின்றுவிடு நாளேதோ. (29)

பொல்லாத பூதப் புலானுடம்பிற் கூடாமை
கல்லாத வன்பிற் கலந்திருக்கு நாளேதோ. (30)

பொய்த்தத் துவத்தின் றுவக்கறுத்துப் போற்றரிய
மெய்த்தத் துவத்தில் விழித்துவிடு நாளேதோ. (31)

ஐயோ விதியே யைவருந் தாந்தொலைய
மெய்யே விழித்து விரவியிடு நாளேதோ. (32)

கூறரிய மெய்ஞ்ஞானங் கொண்டபடி கொண்டதன்றி
யாறி யிருந்தங் கலப்பிக்கு நாளேதோ. (33)

மாயப் பிறப்பில் வருந்து மயக்கமறத்
தூய வருட்பரப்பில் தோய்ந்துவிடு நாளேதோ. (34)

பரிபூ ரணந்தன்னிற் பாலமுத முண்டே
இரவுபகல் தேசிகரை யேத்தியிடு நாளேதோ. (35)

குன்றாத ஞானக் குருபரனார் சொற்கேட்டுப்
பொன்றாத வாதனையைப் போக்கிவிடு நாளேதோ. (36)

ஊனமிலா வின்ப வுருவே யுருவாகி
யானெனது நீங்கி யிருந்துவிடு நாளேதோ. (37)

பேறாக வந்தருளுந் தேசிகற்குப் பின்வந்து
மாறா மனத்துயர மாற்றிவிடு நாளேதோ. (38)

என்றுங் குருநாத னிட்டபணி செய்துமிக
நின்றபடி நில்லாத நெஞ்சுவிடு நாளேதோ. (39)

ஆசையெலா மற்ற வறிவே யறிவாகி
பேசனெல்லா மாகி யிருந்துவிடு நாளேதோ. (40)

அவனை யவளை யதுவைக் கருதிச்
சிவனை மறந்திருக்குஞ் சிந்தைவிடு நாளேதோ. (41)

தீதிலா வின்பச் சிவமே சிவமான
போதெல்லாங் காணப் புலப்படுவ தெக்காலம். (42)

காணரிய ஞானக் கடலே யிடமாகத்
தாணுவே தேசிகனே தந்தருள வேணுமே. (43)

முன்புவினை யெப்போது முட்டா தருந்துவபோ
லன்புடனே யின்ப மருந்துதற்கு நாளேதோ. (44)

வேறு நினையாமல் வீட்டின்பத் தின்புற்றே
யாறி யிருந்தருந்த வண்ணலே தந்தருளே. (45)

ஒத்தொவ்வா விந்த வுலகை மறந்துணர்வி
னித்தமாய் நின்றுவிட நின்மலனே தந்தருளே. (46)

அவயோகந் தன்னி லாசையற வென்றுஞ்
சிவயோகத் தானந்தந் தேசிகனே தந்தருளே. (47)

சத்திய ஞானமனந் தானந்தந் தானாகி
நித்தமாய் நின்றுவிட நின்மலனே தந்தருளே. (48)

வருகாலத்திரங்கல் - முற்றும்.



## நான்காவது,

## அநுபூதிவிளக்கம்.



தேனிவரு மின்பச் சிவானுபவ முரைக்க
வானை முகவ னடிபணிந்து போற்றுவாம். (1)
சீராருங் கங்கைநகர்த் தேசிகர்கோன் மெய்கண்டான்
வாராதே வந்துரைத்த வார்த்தைவளங் கூறுவாம். (2)
தீரப் பவந்துடைத்த தேசிகர்கோன் மெய்கண்டா
னோர வுரைத்த வநுபூதி கூறுவாம். (3)
குற்றமிலா மெய்கண்டான் கூறுஞ் சிவானுபவஞ்
சிற்றம் பலநாடி செப்பியவா செப்புவாம். (4)
தீதிலருட் காழிச் சிற்றம் பலநாடி
வேதத் தலையுரைத்த மெய்ப்பொருளைக் கூறுவாம். (5)
சீகரமாங் காழிநகர்ச் சிற்றம் பலநாடி
யாகமநூ லான வநுபூதி கூறுவாம். (6)
மாசார் பசுபாச மாசிலா வண்பதியென்
றோசான் விளக்கு மநுபூதி கூறுவாம். (7)
பதிபசு பாசப் பரப்பறிந்து பார்க்கப்
பதிபசு பாசப் பரப்பா யிருந்ததே. (8)

சரியை முதனற்கிரியை சங்கற்ப யோகத்
தொருமைதனி னின்றருளு முற்றவநு பூதியிதே. (9)

கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவு
தேட்டமறத் தேடுஞ் சிவானுபவஞ் செப்புவாம். (10)

அண்டபிண்டங் கண்டேன் அருங்கருவி கண்டாலென்
கண்டவுயிர் கண்டாலென் கரந்தவுயிர் காணுதார். (11)

மண்ணீ ரனல்கால்வான் வண்சுடர்கள் மன்னுயிர்க
ளெண்ணீர்மை யான சிவனுருவ மல்லவோ. (12)

எட்டுருவு மென்று மிறையுருவ மென்னுமது
சிட்டர் மறையுஞ் சிவாகமுஞ் செப்பியதே. (13)

ஆதலா லண்ண லறிவுநினை வொழிந்திங்
கேதுநாம் வேறென் றியலுமது கவியே. (14)

எல்லா மிறையுருவென் றிப்படியே காண்பதன்றி
நில்லா விடமிதென்று நீக்கநிலை கூடுமோ. (15)

சுருக்கம் விரித்தலறச் சோதி நிறைவிற்
பெருக்கவிழித் தாலலது பேரின்பங் கூடுமோ. (16)

எங்கே யிறையைநா மெட்டனையும் விட்டதுதா
னங்கே யழுந்தி லநுபூதி கூடுமே. (17)

இந்திரியத் தோடே யியைந்த விடயத்தி
லந்தரித்த போது மவனிடமே யல்லவோ. (18)

பற்று மறுதியுடன் பற்றிப் பயின்றுனு
முற்றவிட மெந்தை யுணர்வுருவே யல்லவோ. (19)

ஆசை யறிவியற்ற லானவிட மெல்லாநம்
மீசனிட மல்லா தெமக்கோரிட மிலையே. (20)

சென்றவிட மெல்லாஞ் சிவமென்றல் மானதமோ
சென்றவுயிர் நின்ற சிவனிறைவி னல்லவோ. (21)

இன்றே விறையுயிருக் கிப்படியே நின்றநிலை
யொன்று வொழியா வொருவ னுறவெமக்கே. (22)

நினைப்பு மறப்புமிந்த நின்மலனே யல்லாமற்
றினைத்துணையு மில்லையென்று தெய்வமறை கூறியதே.

இனியகல்வ தெங்கே யிருவினையா லெங்குந்
தனியகல நின்றருளுந் தம்பிரான் றனலவோ. (24)

வெறுப்பு விருப்பென்று வேறுரைத்தா லெந்தை
யுறுப்பிற்குறையாதோவுணர்வுடையோர்சொல்லுவரே.

வேண்டலும்வேண் டாமலுமாம் வினையும் வினைப்பயனு
மாண்டகையோ டுற்ற வநுபூதி யானதே. (26)

'பாசப் பரப்பும் பசுவும் பராபரையு
மீசனலா தொன்று மினிப்பிறக்க வில்லையோ. (27)

ஈண்ட வளம்புக் கிலவணமே யானதுபோற்
பூண்ட வுயிரெல்லாம் பொருளா யிருந்ததே. (28)

எரிசுத்தங் கொண்ட விரும்புபோ லெங்கும்
பரிசுத்த மான பராபரமே யானதே. (29)

போதையார் தாளிணைகள் புன்றலைமேல் வைப்பளவில்
வேதையா யெங்கும் விமலனரு ளானதே. (30)

பார்த்தே னுலகப் பரப்பெல்லாம் பார்ப்பளவிற்
பேய்த்தேர்போ லில்லையாய்ப் பேரறிவே கண்டனமே.

பொய்யெங்கே மெய்யெங்கே போதம் பொறியெங்கே
மையெங்கே யெங்கு மலர்ந்த சுகமொழிந்தே. (32)

மண்முதலாம் பூத வகுப்படைய வென்னறிவோ
வண்ண லருளே யடங்க விழுங்கியதே. (33)

எண்ணரிய பூதமெலா மென்னுடைய தம்பிரான்
கண்ணி லடங்கியிடக் காணவரி தானதே. (34)

வானடையத் துற்றவிருள் வாவெளித்த நேரம்போ
லான பரமசுக மல்லா தடங்கியதே. (35)

அந்தகனுக் கிந்த வவனி யொளித்ததுபோல்
வந்தவருட் கேவலத்தில் வைய மொளித்ததுவே. (36)

என்றுங் குருட னிருடீர்த் திரவி வர
நின்ற நிலைபோல நிறைவொழிந்து கண்டிலமே. (37)

அன்றே யிறைக்கடிமை யையமிலை யையமிலை
யென்றே மறைமொழிதற் கின்றே யிசைந்தனமே (38)

சேரச் சிவமாகிச் சிந்தித்தார் சிந்தித்தார்
பூரணத்தி னுள்ளே பொருந்தினவ ரல்லவோ. (39)

விட்டுவிடு மேதினியில் வேறு பொருள்கோடல்
கிட்டினவ ரானந்தக் கேள்வர் தமக் கல்லவோ. (40)

பத்துத் திசையும் பதினுலக மெங்குந்
தத்திக் கரைபுரளுஞ் சாகரமே யல்லவோ. (41)

இந்திர சால மிடுமளவு மெய்யாகி
யந்தரப்பூ வானதுபோ லவனிநமக் கானதுவே. (42)

பொய்த்திரிவு மிந்தப் புவியென் றுணர்வளவின்
மெய்த்திரிவு தீர வெளியா யிருந்ததே. (43)

அச்சமறுத் தெல்லா மருளாகித் தந்தருளி
வைச்சவரு ளானந்த வாரிதியி லாறினமே. (44)

ஓதலுட னென்று முணர்த லினியமையு
மேதுங் கருதாமை யேகாந்த மாய்விடுமே. (45)

செய்தவங்க ளாலேநந் தேசிகனார் வந்தருள
வெய்துமின்பம்போது மினித்தவங்கள்வேணுமோ (46)

பருவங் குறித்திப் பரமவொளி வந்திவ்
வுருவந் தரித்தா லொருதவந்தான் வேணுமோ. (47)

செய்தற் கரிய தவஞ் செய்ததற்பி னல்லவோ
வெய்தற் கரியபிரா னென்போல வந்ததுவே. (48)

பார்த்தும் பரிசித்தும் பாதுகைகள் சூடியென்று
மேத்துகுரு நாதர் தம்மை யின்புருவ மீதென்றே. (49)

கச்சி நகரிலன்று கம்பர் தமைக் காரிகையா
ளிச்சித்துப் பூசித்தா ளெடுத்ததிரு மேனியன்றோ. (50)

அருளா வடுதுறையி லாவுருவா யம்மை
யிருடீரப் பூசித்தா ளெடுத்ததிரு மேனியன்றோ. (51)

கண்ணனிரு கண்ணிடந்துங் கண்ணப்பர் கண்ணிடந்து
மெண்ணமறப் பூசித்தா ரெடுத்ததிருமேனியன்றோ. 52

வேதனுட னிந்திரனு மேம்பட்ட தேவர்களு
மேதமறப் பூசித்தா ரெடுத்ததிரு மேனியன்றோ. (53)

கந்தன் கணபதியுங் கற்ற விருடிகளும்
எந்தையெனப் பூசித்தா ரெடுத்ததிரு மேனியன்றோ.

கொண்டவடி வெல்லாங் குருவடிவே யென்றென்று
தொண்டர்பலர் பூசித்தார் சொல்ல முடியாதே. (55)

எவ்வடிவு மிந்த விறைவடிவே யாதலினு
லிவ்வடிவு பூசிக்க யாமுரைக்க வேணுமே. (56)

சீருருவங் கொண்டருளுந் தேசிகன்செம் மேனிபோ
லோருருவி னின்றிங் குணரா துணர்த்தினனே. (57)

வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவானுபவந் தானருந்தப் பெற்றனமே. (58)

அருந்த வருந்த வமையா தமுதந்
தருந்தமியைப் பாவியேன் றுனைக் கொள்ளுவதே(59)

ஆயவிய மில்லா வகண்டபரி பூரணத்தே
தூய குருவுருவந் தோன்றுமற் றேன்றியதே. (60)

தாய்முலைவாய்வைத்திரங்கத்தன்னியம்வந்தூறுவபோற்
றாயதுணைத் தாளமுந்தத் தூயசுகந் தோன்றுவதே.

தோன்றுமை தோன்றியதிற் சுகமே சுகமாகித்
தோன்றுமை தோன்றியதிற் றேய்ந்து துளைந்தனமே.

சைவப் பெருமான் றவராச ராசனார்
பைய வருள் மெய்கண்டான் பாதமலர் வாழியதே (63)

கங்கைநகர் மெய்கண்டான் காற்கமலஞ் சென்னியின்மேற்
றங்கவிரு ணீங்கியரு டானுந் தபோதனரே. (64)

வாழி திருநீறு வாழிதிரு வஞ்செழுத்து
வாழி சிவாலயங்கள் வாழிதிரு வேடமே. (65)

அநுபூதிவிளக்கம் - முற்றும்.



## ஐந்தாவது,
## தாலாட்டு.

உலகுபுகழ் மெய்கண்டா னுண்மைஞா னாகரத்தின்
பலனுணர்ந்த சிற்றம் பலநாடித் தேசிகனே. (1)

வாயே மனமே வரையற்ற வோருரையா
னீயேநா னென்று நிலைமை யளித்தானே. (2)

தெய்வநீ ராடிச் சிவாலயங்கள் கைதொழுது
மெய்வருந்தா தப்பாநீ நானென்ற வேதியனே. (3)

கையில்விரற் றேயாமல் கண்சிமிட்டி நோகாம
லையமுளத் தாக்காம லாண்டபரி பூரணனே. (4)

பட்டினி விட்டுப்பலநாள் வருந்தாமே
யிட்ட மெனக்கு முனக்குமென்ற வீசரனே. (5)

கோயில்வலம் வந்துபத கோகனகம் வாடாதே
நேயவருள் வெள்ளம் நிறைவித்த வாண்டகையோ. (6)

பேராதர வாகப் பேரறிவு போதித்த
சீராசைச் சிற்றம் பலநாடித் தேசிகனே. (7)

நீயறிவா னந்தனு நாமிதனை நீக்கியதே
காயவறி வென்றருளாற் காட்டுங் கருணையனே. (8)

கண்ணொரு மூன்றுங் கனற்கரமு மைம்முகமு
மண்ணவர்க்குங் காணா வகையொளித்து வந்தானோ. (9)

தர்க்கம் படித்துத் தலைவெடித்துக் கொள்ளுவனைக்
கற்கவிணை யாதருளைக் காட்டுங் கருணையனோ. (10)

கைம்மாறு போதமறக் காசினியோர் நூலைவிட்டு
நம்மாணை சும்மா விருவென்ற நாயகமோ. (11)

ஐம்மலமு மைந்தொழிலு மான்மாவு மையறிவும்
பொய்யலவே யென்றிதனைப் போதித்த புண்ணியனோ.

போன வழியெல்லாம் போகா தொடியெறிந்து
தானவனுக்கும்பெருமை தந்த தவப்பயனோ. (13)

பார்க்கிற் சுகமதுவாய்ப் பாரா விடிலுலகா
யார்க்கு மளப்பரிய வானந்த வாரிதியோ. (14)

அஞ்சுமலத் தாலு மழிவா யிருந்தவெனை
அஞ்சுமல நீக்கி யழியாமல் வைத்தானோ. (15)

பேதப் படுத்தல் பிராந்திதுவே மும்மலமும்
வேதப் பொருண்முடிவே நீயென்ற வேதியனோ. (16)

சீர்புறவ மோனத் திகழு மௌனதுள்ள
மூர துவாய்க் கொண்டிருந்தே யென்னை யொழித்தானோ.

சேர்வையாந் தொண்டரிடஞ் சேரும் பவக்கடலைப்
பார்வையான் மாற்றிப் பதியாக்கி வைத்தானே. (18)

பதிக்குப் பதியாய்ப் பரத்துக்கு மப்பாலாய்
விதிக்கும் விதியாய் விதிக்கும் பெருமானே. (19)

தேவர் முனிவர் சித்தாந்தத் தோர்மறையோர்
மூவரவர்க் கப்பாலு மூவா முழுமுதலோ. (20)

எங்கெங்குந் தானாகி யென்போ லுருக்கொண்டு
மங்கும் பிறவிதனை மாற்றவந்த வள்ளலோ. (21)

தாளை வணங்கத் தலையாம் பதங்கொடுக்கும்
வேளைநகர்ச் சிற்றம் பலநாடி வித்தகனே. (22)

காணற் கரியானே கண்மூன் றுடையானே
தாணுவே சங்கரனே சச்சிதா னந்தனே. (23)

மேலுக்கு மேலாய் விருப்பாய் வெறுப்பாகி
நாலுக்குங் காண்பரிய நுண்ணியனே வையாநீ. (24)

சொன்ன கமத்துஞ் சுருதிக்கு மெட்டாத
தன்ன தனமெனக்குத் தந்த தனிச்சுடரோ. (25)

ஆலயங்கள் தேடி யலையாதே யுன்னிடத்தே
சாலவுநீங் காதிருப்போஞ் சத்தியமீ தென்றுரோ. (26)

மானங் குலைந்து மதியழிந்து நான்கெட்டால்
நானென்று நீயென் றிரண்டில்லை யென்றாரோ. (27)

பேறிழ வின்பம் பிணிமூப்புச் சாக்காடென்
றாறுங் கருவி லமைத்ததுனக் கென்றாரோ. (28)

சாதி மதத்தாலுஞ் சமய மதத்தாலுங்
கோதிலா ஞானத்தைக் கூடவரி தென்றாரோ. (29)

வேட்டுவன்வாய்ப்பட்டபுழு வேட்டுவனாந் தன்மைபோல்
நாட்டநம்மேல் வைக்கிலை நற்சிவமே யென்றாரோ. (30)

உரையு முயிரு முளமு முணர்வுங்
கரையிலன்றிப் போதத்தாற் காணவரி தென்றாரோ. 31

கண்டார்க்குக் கண்டதாய்க் காணார்க்குக் காணாதாய்க்
கொண்டார்க்குக் கொண்ட குறியாகி நின்றாரோ. (32)

அண்டாண்ட பூரணமா யப்பாலைக் கப்பாலாய்க்
கொண்டுமெதிற் கொண்டறியாக் கொற்றவனைச் சொன்னார்.

எல்லா வுயிரு மெனதுருவே யென்றுரைத்து
நல்லா ரினத்தில் நடித்தானைச் சொன்னார். (34)

கள்ள வழியெல்லாங் கமலவழித் தீமூட்டி
யுள்ள மழுக்கறுத்த வொண்பொருளைச் சொன்னார்

முத்துயரு மூவுயிரு முப்பாழுங் காட்டியெனை
யத்துவித மாக்கு மருளுருவைச் சொன்னாரார். (36)
ஆணாகிப் பெண்ணா யலியா யதல்லவாய்த்
தோணாத் துணையான சோதியனைச் சொன்னாரார். (37)
ஒப்பிலா ஞான வுருவே யுருவாகி
முப்புரத்தைச் சுட்டழித்த முக்கணனைச் சொன்னாரார்.
உண்டி யுறக்க மொழியாப் பிணிமூப்புக்
கொண்டு மகிழ்ந்த குணக்கடலைச் சொன்னாரார். (39)
மேலாந் திணையிரண்டாய் மெய்யா யுயிர்க்குயிராய்
நாலாம் பராபரமாம் நாயகனைச் சொன்னாரார். (40)
உள்ளங்கண்ட வெல்லா மொன்றாகி நின்றவொளி
யுள்ளங் குதிகொண் டொருமுதலாய் நின்றாரோ. (41)
செய்வினைக ளெல்லாந் திருவினைகள் தாமாக்கி
யுய்யவெனை யாண்டருளு முத்தமனைச் சொன்னாரார்.
வன்னம் புவனம்வருந் தத்துவிதமாங் கலையென்
றுன்னுமிட மென்னிடமென் றுற்றாரைச் சொன்னாரார்.
அண்டபிண்டமுள்ள மருளுருவே கோயிலெனக்
கொண்டொருவ ரும்மறியாக் கொற்றவனைச் சொன்னாரார்.

இன்னவடி வின்னநிற மின்னபடி யென்றறியா
துன்னு மிடத்தி லுதித்தானைச் சொன்னாரார். (45)

பார்த்து நினைத்தும் பரிசித்தும் பாவமறுத்
தேத்துநினை வைக்கொடுத்த வெங்கோனைச் சொன்னாரார்.

சிந்தையினுற் றார்க்குஞ் சிவலோக வீடளித்துப்
பந்த மகற்றும் பராபரனைச் சொன்னாரார். (47)

பேதாதி பேதமாய்ப் பேரறிவா மோருரையே
யாதார மாகுமென்ற வற்புதனைச் சொன்னாரார். (48)

மூன்றுவினை கண்டார்க்கு முற்றுங் கெடவகற்றித்
தோன்றுவினை மாற்றுஞ் சுகோதயமே கண்வளரீர். (49)

மெய்ஞ்ஞானக் கண்வளர மெய்கண்டான் மெய்வளர
வஞ்ஞானக் கண்ணகற்று மையர்திருக் கண்வளரீர்.

சுத்த மசுத்தஞ் சுகமசுக மானந்த
நித்த மநித்தமென நின்றோரே கண்வளரீர். (51)

முத்தொழிலாற் செய்த முறையுலகெ லாம்வளர
வத்தரே சீராசை யையரே கண்வளரீர். (52)

வையம் வளர மறையோர் தொழில்வளர
மெய்யும் வளர வருள் மேகமே கண்வளரீர். (53)

சொல்லுக் கடங்காச் சுகாதீத மெய்ப்பொருளே
பல்ல லறுத்தாண்ட வாதியே கண்வளரீர். (54)

இன்ப மிரண்டு மியற்றியதற் கின்பமுமா
யன்பு நிறைந்த வருட்கடலே கண்வளரீர். (55)

சமையத்தில் விழாமற் றற்பரத்தி லாழாம
லமையக் கருணைதந்த வாதியே கண்வளரீர். (56)

சத்திமல மைந்துந் தருவதுநாம் போக்குதல்நா
முத்தியுநா மென்ற முழுமுதலே கண்வளரீர். (57)

கிழலகு முற்றுங் கிளரொளியாய் நின்றபதம்
வாழவடி யேன்முன்னே வருந்த நடந்தாரோ. (58)

வேதாவு மாலும் விளம்புதற்கு மெட்டாத
போதானந் தச்சொருபப் புண்ணியனீயென்றுரோ. (59)

கண்ணுலுங் காணுக் கருத்துக்கு மெட்டாதா
புண்ணுடி லுண்ணுடு முத்தமரே கண்வளரீர். (60)

ஓங்காரத் துள்ளொளியி னுள்ளே தனைக்காட்டி
நீங்காமற் றாங்கவைத்த நிட்களனார் வாழியரோ. (61)

சித்தாந்த சித்த விகற்பமது தீரவுடல்
முத்தனு மென்ற முழுமுதலே கண்வளரீர். (62)

ஒன்றிரண்டு மூன்றற் றொருநாலோ ரைந்தொன்பா
னின்றதெல்லாந் தானாகி நின்றோரே கண்வளரீர். (63)

தாலாட்டு - முற்றும்.



ஆறுவது,

வெண்பா.



செய்யபுகழ் மேனியனைத் தேவர்தொழுங் கோவை
மெய்யருளும் பொய்யா விநாயகனை—வையமெலாங்
காத்தானை யார்க்கு மிளையானைக் கந்தற்கு
மூத்தானை நாவே மொழி.

என்னை வினையறியா யானு மதுவறியேன்
முன்னைவினை கூடல் மொழிந்தருளா—யென்னத்
திருவார் பொழிற்காழிச் சிற்றம் பலவன்
றருவானு நானென்றான் றான். (1)

கண்ணுக்குக் கண்காட்டா காட்டுங் கதிரொளிகள்
பெண்ணுக்குப் பெண்விளையாப் பேரின்ப—மெண்ணெச்சச்
சொல்லா ருயிர்க்குயிராய்த் * தோய்ந்துணர்த்தி யின்பருத்த
வல்லான்சிற் றம்பலவன் வந்து. (2)

சென்றறிய வேண்டாவே சேராமை வேண்டாவே
யொன்றுபட வேண்டாவே யுள்ளத்தே—நின்றநிலை
கண்டாயே யெங்குங் கதிரொளிகண் காயமெலா
முண்டான தன்மைபோ லுற்று. (3)

* தோய்ந்தருந்தி யென்றும் பாடம்.

உற்றுணர்வுக் குள்ளே யொழியா வுணர்வுணர்த்தப்
பெற்றனையே யெவ்வுயிர்க்கும் பேறதனை—மற்றதுதான்
மாண்டதே பார்ப்பளவின் மாளா நிறைவுநம்மைப்
பூண்டதே யென்றே புகல். (4)

தங்களைநா மின்பத் தடங்கடலின் மூழ்குவித்தோ
மங்குலகந் தீர மறைப்பித்தோ—மிங்குலகில்
வாராதே வாதனையால் வந்தாரே யாமாகிற்
பாராதே பாரீர் பரம். (5)

பக்கமொடு கீழ்மேலு மில்லாப் பராபரத்தை
யொக்க நிறுத்தியதி லொன்றாக்கி—மிக்க
சிவபோக நல்கினான் சிற்றம் பலவ
னவபோகஞ் செல்லா வணைத்து. (6)

கருவி கரணமுடன் கைகலந்து நின்று
மருவும் விடயமெலாம் வாங்கி—யருகாமற்
சீவிப்பாய் நீயென்றான் சிற்றம் பலநாடி
பாவித்தே பாராமற் பார்த்து. (7)

கருவி கரணங்கள் கண்டுணர மாட்டா
மருவியதி லான்மாவும் வாரா—குருபரன்றான்

சிற்றம் பலநாடி தென்கா ழியர்பெருமான்
உற்றுணர்த்தாப் போதென் றுணர். (8)

அட்ட வராகமுட னைந்துவச னாதிகளு
மொட்டு முயிர்ச்செயல்க ளோரிரண்டும்—விட்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (9)

வாக்காதி நான்கும் வருங்குணங்க ளொன்பானும்
போக்காமூன் றேடணையும் போனதே—நோக்கி
னிணங்கரிய சிற்றம் பலநாடி தானை
வணங்கினைந் தெப்பொழுதும் வாழ்த்து. (10)

ஆசையங்க ளைந்துமூன் றுறும் வியாதிகளுந்
தேசுமல மைந்துஞ் செயகோச—மோசைதருந்
தாதுக்க ளேழுந் தணத்தான்சிற் றம்பலவன்
மேதக்க காழிநகர் வேந்து. (11)

மண்டலங்கள் மூன்று மருவுமா றாதாரங்
கொண்டு திரியுடம்பின் கூறிரண்டும்—விண்டகலச்
சிந்தா மணியான சிற்றம் பலநாடி
தந்தான்பொற் செங்கமலத் தாள். (12)

கரையிறந்த பேரறிவு கண்டது நீங்கி
யுரையிறந்த வானந்த முண்டு—திரையிறந்த
வாரிதிபோ னில்லென்று வைத்தான்சிற் றம்பலவ
னொருதவு வாரிவன்போ லாங்கு. (13)

என்னை மன்றத்தவிரு ளெங்கேனும் போனதோ
நின்னருளிற் கெட்டதோ நின்றதோ—முன்னைத்
தவகுருவே சிற்றம் பலவனே சண்பைச்
சிவகுருவே நாயேற்குச் செப்பு. (14)

அல்லார் பொழிற்காழி யம்பலவன் றன்வார்த்தை
யெல்லாஞ் சிவமா யிருந்ததே—தொல்லாழி
வெள்ளம் பரந்தக்கால் வேறுபுனல் தோன்றுமோ
வுள்ளஞ் சிவத்தே யொளித்து. (15)

குலாலன் றிகிரி சுழல்வண்டு கொள்ளி
யுலாவுங் கறங்குவரி யொத்தே—மலாதியா
லாரா வடியே னுலகி லலம்வருகை
பாராய் திருவேகம் பா. (16)

மாதாவா மாயை மரித்தாள் மரித்திடத்தே
பேதமிலாப் போதன் பிறந்தானே—யாதலா
லாசூசந் தானிரண்டு மானேனான் பூசிக்கத்
தேசாசிற் றம்பலவா செப்பு. (17)

வேலையலை போலெனக்கு மேதினியில் வாதனைநோய்
வேலை யலையெறிந்து விட்டதே—வேலைபோல்
நித்திய கோசரத்தி னில்லென்றான் காழிநக
ரத்தன்சிற் றம்பலவ னங்கு. (18)

பாசமுநீங் காமற் பதியிற் கலவாம
லாசறுநன் முத்தியெனக் காக்கினான்—தேசிகர்கோன்
செந்நெல் வயற்காழிச் சிற்றம் பலநாடி
தன்னருளுக் குண்டோ தரம். (19)

காய மவரவராய்க் காணுங் கருத்தொழிந்து
காயமொழிந் தான்மாவைக் காணேனே—நாயனே
தென்புகலித் தேசிகனே சிற்றம் பலவனே
யென்புகல்வே னென்செய்கே னியான். (20)

காயமொழிந் தான்மாவைக் கண்ட முறைமைபோற்
றூயவரு டோன்றவுயிர் தோன்றும—லேயதற்குத்
தந்தருள்வன் சிற்றம் பலநாடி சண்பையர்கோன்
வந்தருளப் போனவா மாண்டு. (21)

உற்றவுயிர் தோன்றும லுள்ளுணர்வு தோன்றுவபோற்
பெற்றவரு டோன்றுமற் பேரின்ப—முற்றுமிகக்
காட்டினான் சிற்றம் பலநாடி காழியர்கோன்
வாட்டினான் வாதியா மல். (22)

நாளு விதத்தா லு நானிணைந்து பார்ப்பளவி
லாளு வறிவளிழி னல்லாது—வாளுடுந்
தென்புகலிச் சிற்றம் பலநாடி சேர்த்தளித்த
வின்பருந்த வாரா தெமக்கு. (23)

சிற்றம் பலநாடி சீபாத வல்லபங்கள்
சொற்றிகழும் பைங்கிளியேசொல்லக்கேளுற்றவருங்
காணுது காட்டியது காணுது காட்டியது
காணுது காட்டியது காண். (24)

ஆணவம்போ மாயைபோ மான விருவினைபோம்
நாணவரு மாமாயை நாணமும்போம்—சீவணுபுரத்
தேசிகர்கோன் சிற்றம் பலநாடி சேவடியைப்
பூசைசெய யாம்பூண்ட போது. (25)

ஆற்றவரி தாற்றவரி தையகோ வாணவநோய்
வேற்று விகார மிகக்கொடிது—மாற்றுதற்குத்
தேசிகர்கோ னென்பளவிற் சிற்றம் பலநாடி
மாசிதுவோ வென்றுரைத்தான் வந்து. (26)

தேனேயுங் கண்மலராற் சிற்றம் பலநாடி
தானேதன் பேரின்பந் தந்தானே—யூனே
நெருங்கியக்கா லல்லாது நீளமிழ்தந் தாரீர்
கரும்பினங்கா ளுங்களுக்கென் காண். (27)

அன்றிலே யின்ப வகண்டபரி பூரணத்தி
லொன்றிலே யென்னை யொழித்தவரார்—சென்றுமதித்
தேவாகுங் காழிநகர்ச் சிற்றம் பலநாடி
காவாமற் காத்தருள்வோன் காண். (28)

கான மயிலே கடல்சூழ்ந்த காழிநகர்த்
தேனவிழ்தார் சிற்றம் பலநாடி—மாணிடரி
லென்றுட லாடாதே யின்பந் திகழ்மன்றி
லன்றுடி னென்றே யாடு. (29)

பலவின் சுளையருத்தும் பைங்கிளியே யென்றன்
மலவன் கிளையறுக்க வல்லான்—றலமுழுதுஞ்
சென்று தொழுங்காழிச் சிற்றம் பலநாடி
யென்றொருவன் காணு மிதற்கு. (30)

தேடும் பொருளுடனே சேமித்து விட்டனரோ
நாடுந்தம் மூர்பேரு நானிலத்தோர்—வீடறிஞர்
சேமமே பொற்காழிச் சிற்றம் பலநாடி
நாமமே கேட்பதல்லால் நாம். (31)

சர்க்கரையென் றுலிரதந் தானுமோ நெஞ்சமே
சிற்பரன்சிற் றம்பலவன் றேசிகர்கோன்—நற்பதத்து
ணில்லாயே யாகில் நெடுநாளே நீகற்ற
சொல்லாலே யாமோ சுகம். (32)

நூல்கொண் டுணர்வனவும் நண்ணுணர்வாற் சொல்வனவும்
பால்கொண்டு விற்பான் பயன்போலுங்—கால்கொண்
டறியாமை மாற்றுசிற் றம்பலவன் வைத்த
நெறியே நிலையாக நில். (33)

என்பிறவித் * துன்பறுப்ப தென்றேசிற் றம்பலவா
நன்பிறவி யென்போல நண்ணினு—யின்புறவே
பொய்யாத நால்வர்க்கும் போதித்த மோனவுரைக்
கையா கருணு கரா. (34)

விகற்பமிலா ஞானம் விமலனுர் ஞானம்
விகற்பமெலா மிக்கசடங் தானும்—விகற்பமெலாம்
என்னுலே யென்று னெழிலார்சிற் றம்பலவ
னுன்னுலே யென்றுரைத்தே னுற்று. (35)

போக்குவர வில்லைப் புனிதற்கு மாயைக்கும்
போக்குவரவாருயிர்க்கோபோற்றென்றேன்போக்குவர
வங்கங்கே யென்று னருளாற் சிற்றம்பலவ
னிங்கிங்கே யென்றுரைத்தே னியான். (36)

இன்றகன்று நின்றீ ரினிக்கூட வாரீரே
யன்றகலா மும்மலங்க ளல்லவோ—துன்றுபவங்

* துன்பகற்றல் என்றும் பாடம்.

தீர்த்தருளுஞ் சிற்றம் பலநாடி காழியர்கோன்
பார்த்தருளக் * கண்டுபெயப் பட்டு. (37)

யானெனது நீக்கி யிறைநிறைவி லொன்றாக்கி
யானெனது நீங்கா திருத்தினன்—யானென்று
தங்காதவர் போற்றுஞ் சண்பைச்சிற் றம்பலவன்
மங்காமற் காத்தாண்ட வாறு. (38)

உன்னுவது முன்னாலே யுன்னா தொழிந்துநிலை
மன்னுவது முன்னாலே மற்றில்லை—யென்னுமது
நானறியேன் சிற்றம் பலநாடி நானெனநீ
தானறிவை யாரறிவார் தான். (39)

இறந்துபிறந் தெய்த்த விளைப்பொழிக்க வென்றே
பிறந்துலகில் வந்தாய் பிரானே—யறந்திகழும்
போதா புராதனா பூரணா பூம்புகலி
நாதாசிற் றம்பலவா நான். (40)

மைந்தா வெனவழைத்து மாயா வுடம்பகற்ற
விந்தா வறிவென் றிசைவித்தா—யெந்தாயே
யாதார மேதென்றே னங்கறிவே தானென்றான்
றாதார் மலர்த்தாள்க டந்து. (41)

---

* கண்டுய்யப்பண்டு என்றும் பாடம்.

ஆண்டகுரு சிற்றம் பலவா வடியேற்காய்
மீண்டு மெழுந்தருள வேண்டாவோ—நீண்டமால்
ஆரணனுங் காணாத வானந்த வாரிதியைப்
பூரணமாய் வையாத போது. (42)

யானே பிறந்தேனும் யானே யிறந்தேனும்
யானே மறந்தேனு மென்வாழ்வே—யூனமிலா
வுன்னுள்ளே யானு முலாவவே நீநிறைந்திட்
டென்னுள்ளே நின்றமையா லே. (43)

பட்டதே மூலவினை பாறிற்றே யேறும்வினை
விட்டதே யிவ்வுடலின் மிக்கவினை—நட்டதே
சிற்றறிவிற் பேரறிவு சிற்றம் பலநாடி
பொற்கழல்வைத் தாட்கொண்ட போது. (44)

ஊட்டி யுறக்கி யுணர்த்தி நடத்தியெனைக்
காட்டி யறிவிற் கலப்பித்துத்—தேட்டமறத்
தந்தான்சிற் றம்பலவன் சண்பைத் தவராசன்
வந்தா னிதற்கோ மகிழ்ந்து. (45)

நின்றநிலை தானே நிலையிதற்கு நீபிரிந்திட்
டொன்றும் விகற்பித் துணராதே—யென்றான்
திருமருவு காழிநகர்ச் சிற்றம் பலவன்
மருமருவு தாடலைக்கே வைத்து. (46)

நீங்காம லென்னறிவி னின்று நிறைந்தருளி
நீங்கா வுடலுலகாய் நின்றனையே—யாங்காண
வந்திருந்த சிற்றம் பலநாடி வாய்த்தசுகந்
தந்திருந்து மிப்படியோ தான். (47)

பார்த்தபொழு தெல்லாம் படுபிணமென் றிவ்வுடலைப்
பேர்த்தறிவில் வைத்த பெருமானே—சேர்த்தபுகழ்
மெய்கண்ட நாதனே வெங்குருச்சிற் றம்பலவா
கைகண்ட துன்வடிவே காண். (48)

தானே யெனைவிரும்பித் தானே சமைந்தருளித்
தானே யெனையாண்ட தம்பிரான்—தானே
தனக்கினிய சிற்றம் பலநாடி தாள்போல்
எனக்கினிமை யுண்டோ வினி. (49)

போதாதோ விப்பிறப்புப் போந்தக்காற் போந்தபய
னோதாந்தச் சிற்றம் பலநாடி—வேதாந்தத்
தந்தத்தே வைத்தருளி யப்போதே வந்தநிலை
சிந்தைத்தே யாகுஞ் சிவம். (50)

அறிவு சதுவிதங்க ளான்மாக்கண் மூன்றும்
வெறிமாயை நான்கன்விதம் விட்டுப்—பிறியாத
தீவினைக டானறியச் செப்புசிற் றம்பலவா
மேவுபுகழ் வெங் குருவாழ் வே. (51)

என்றவுடற் கன்மமா யின்னாத சஞ்சிதமா
யான்றுவரு மார்ச்சனையு மாறுது—தோன்றியிடுந்
தீவினையார் நல்வினையார் சிற்றம் பலநாடி
தூவினையார் போனார் தொலைந்து. (52)

நாதாதி வாக்காதி நான்குதரு மக்கரங்கள்
தாதாரு மந்திரங்கள் சாத்திரங்கள்—போதவே
தந்தருளு மாமாயை சண்பைச்சிற் றம்பலவான்
வந்தருளப் போனவா மாண்டு. (53)

பார்க்கிற் பரமசுகம் பாரா விடினுலகா
நீர்க்கிரத நின்ற நிலைபோல—வேர்க்க
வுரைத்தான்சிற் றம்பலவ ணெண்காழிக் கோமான்
கரைத்தான் கரையாக் கனம். (54)

மன்னு மழபாடி வாய்த்தவருண் மைந்தர்க்
கின்னமொரு போத மியம்புவோன்—றெல்லுலகைப்
பைம்மறியாப் பார்க்கிற் பரையாகு மப்பரையைப்
பைம்மறியாப் பார்க்கிற் பரம். (55)

சூதான வுள்ளுணர்வுந் தொல்லையிரு ளாணவமும்
வேதாவு மானுமாய் விட்டதே—நாதாந்தச்
சிற்பரமாஞ் சிற்றம் பலநாடி தேசிகர்கோன்
தற்பரன்வந் தாண்டதற்பின் றுன். (56)

பாவி படுமனமே பாவிநீ பஞ்சமலந்
தாவி நடந்தவிராச் சண்டாளா—வோவாம
லன்றே யறிவா யகண்டபரி பூரணமாய்
நின்றே யழுந்திலையே நீ. (57)

நீயே பகையுனக்கு நில்லா வுடம்புலகப்
பேயே யுறவாகப் பேணினையே—தூய
வறிவுக் கறிவா யகண்டமாய் நீங்காச்
செறிவுக்கு ணில்லாமற் சென்று. (58)

தன்னைநான் காணிற் றனித்தமுத லல்லவே
யென்னையான் காணி லிரண்டாவேன்—பின்னமறச்
சும்மா விருக்கச் சுகமாவேன் றோணிபுரத்
தெம்மான்சிற் றம்பலவ னென்று. (59)

தன்னை யுணர்வென்னிற் றானாய் நின்றிடுவே
னென்னை யுணர்வென்னி லியானாவேன்—மன்னுபுகழ்
சைவாசிற் றம்பலவா சண்பை நகரதிபா
வெவ்வாறு காண்பே னியான். (60)

பிறவா ரிறவார் பெருந்துயர மெய்தார்
மறவார் நினையார் மருளார்—புறவாருந்
தேசிகன் சிற்றம் பலநாடி சேவடிக்கே
வாசமல ரிட்டிறைஞ்சு வார். (61)

போதத் திருக்கறுக்கப் பொற்சிந்தை நந்தியாய்
மேதினியில் வந்தருள வேண்டிற்றே—தீதிலா
வாரணங்க ளான்கு மயன்மாலுங் காணாத
பூரணமோ கெட்டேனிப் போது. (62)

மூலமல மொன்றுடனே முற்றிவருங் கேவலம்பின்
சாலுமதோ மாயை தருஞ்சகலந்—தூலமிலாச்
சுத்தவத்தை தோணிபுரத் தோன்றல்சிற் றம்பலவன்
வைத்தபடி காட்டினான் வந்து. (63)

கால்வாங்கி யேங்கியது கான்று நினைவுவரு
மேலாங் குணர்வோடு மீதழியு—மாலாய
சாக்கிரத்தி லைந்தவத்தை சண்பைச்சிற் றம்பலவன்
போக்கியபின் றந்தான் பொருள். (64)

அதிரும் புலன்கரிக ளாயுமனந் திண்டேர்
கதியொன் றியகுணமாக் காலாள்—சதுரங்கம்
பூட்டினாற் போலிருக்கப் புக்கடிநிற்கும் புதுமை
காட்டினா னம்பலவன் காண். (65)

வேண்பா முற்றும்.



ஏழாவது,

## கட்டளைக்கலித்துறை.



சீர்கொண்டகாழிச் சிற்றம்பநாடி நற்றேசிகனைப், பார்கொண்டுபோற்ற வோர்பாமாலை சொல்வனிப் பாவினுக்கிங், கேர்கொண்ட சீர்தளையெல்லா நிறைந்திட்டிலங்கியிடப், போர்கொண்டமும் மதக் கற்பகயானையைப் போற்றுதுமே.

தாதவிழ்தாமரைப் பொற்றாளிரண்டுமித் தாரணிமேற், போதநன்மாதவ மேதுசெய்தேன்றென் புகலிநகர்ச், சேதனஞானசிற் றம்பலநாடிநற் றேசிகனே, யீதெனதாவி யுடலாகிநின்றது மெத்தவமே. (1)

தூயவெண்ணீற்றுச் சிற்றம்பலநாடி தொடர்ந்தருளாற், றீயமலங்க ளறுத்துயிர்காட்டித் திருவருளி, லோயவிருத்தி யமுதூட்டுநல்லுப காரத்துக்குக், காயமுயிர் பொருள் கைம்மாறதாகக்கைக் கொண்டனனே. (2)

ஈதொருவாசகங் கேட்டிலரேயயன் மாலிருவர், தீதறவாண்டசிற் றம்பலநாடி திருமுன்சென்று, போத

மும்போதத் துயிரானபோதமும் போதத்தின்ப, சாத
முஞ்சாதப்பின் சாகாமனத்தையுந் தந்ததுவே. (3)

காண்கின்றகண்கதிர் காட்டாதபோதில்லைக் காண
வன்றே, பூண்கின்றவண்ணறன் போதமல்லா தில்லைப்
பூம்பொழில்கள், சேண்சென்றகாழிச்சிற் றம்பலநாடி
சிரபுரத்தோன், விண்சென்று போனதிக் காலமெல்லா
மெய் விளைவின்றியே. (4)

ஒன்றுணவத்துட னொன்றுதல் போலு முடம்பினு
யிர், நின்றுலதுவென்ன நின்றதுபோலு நிமலனுடன்,
சென்றுடைத்தசிற் றம்பலநாடி சிரபுரத்தோ, னென்
றூர்கள்காணும் பவக்கடலேறி யிருப்பவரே. (5)

அறிவாவதென்று மவன்வார்த்தைகேட்ட லதனி
ன்மிக்க, வறிவாவ தென்று மவன்மேனி காண்ட லதனி
ன்மிக்க, வறிவாவ தென்று மவனுமஞ் செப்ப லதனின்
மிக்க. வறிவாவ தென்று மவனுயிராக வறிருவதே. (6)

என்னை யிருத்தி யறிவித்த போதினு மென்னறிவி
ற், றன்னை யிருத்தி யறிவித்த போதினுந் தந்தகண்ணிற்,
பின்னை யிருத்தி யறிவித்த வாறின்பப்பேற்றினுக்கு, மு
ன்னை யிருத்துசிற்றம்பலநாடி மொழியொன்றினே. (7)

படைத்தளித் தாரென்றன் பாசம் பறித்தில ரப்ப டைப்பைத், துடைத்தொழித் தாரென்ற னுண்மை சொன்னாரில்லைத் தொல்லையிரு, ளடர்த்தருட்டாடலை யைம்முகர்தந்தில ரைங்கலையு, முடைத்தொழித் தார் சண்பைச் சிற்றம்பலவ ரொருவருமே. (8)

உள்ளேவிழிக்கி னுணர்வாகிநிற்ப ருணர்வுதனக், குள்ளேவிழிக்கி னுணர்வல்லராகுவ ரூறிமெத்துங், கள்ளேயுந்தாமச்சிற் றம்பலநாடினர் வல்லகள்ளம், விள் ளேனொருவர்க்கு மானந்தபோகம் விளைந்ததுவே. (9)

அறிகின்ற தொன்றை யறியும் பொழுதறிந் தை ம்புலனின், பொறியின்றி யொன்றையும் புந்திசெய்யே ன்றென் புகலிநகர், செறிகின்ற சிற்றம் பலநாடிநின் று செலுத்துகையாற், குறிகொண் டறிவதுண் டோ பொறி யோடுங்குறித்து நின்றே. (10)

என்னறியாம லெனக்குத் தெளிவித் தெனதறிவி ற், றன்னறியாமலுந் தந்துவிட்டானச் சதுமுகன்மால், முன்னறியாதசிற் றம்பலநாடி முதலியெங்கோன், பின் னறியாத பிழையணுகாமற் பிழைத்தனனே. (11)

முத்தியும் பெத்தமு மொன்றாகக் காட்டி முழுதுநி றை, சத்தியுங்காட்டிச் சதாசிவங் காட்டிச் சதுவிரண்டு,

சித்தியுங் காட்டுசிற் றம்பல நாடி சிரபுரத்தோன், பத்
தியுஞானமு மில்லாத வென்னைப் பரிந்தெடுத்தே. (12)

அன்றள வின்றள வாதர வாகிய வண்ணலைச்செ
ன்,றொன்றிய் தில்லை யவனறி வாய்நிற்க வும்பர்தொ
ழச், சென்றரங் காடுசிற் றம்பல நாடி சிரபுரத்தோ,னி
ன்றநிலையி லவனுடன் வாழ நிறுத்தினனே. (13)

பாற்கடல் வாழும் பணிலங்க ளுவிலப் பானிறை
ய, வேற்கறி யாமற் பிறிதிரைதேருமற் றிம்முறைபோ,
னீக்கறி யாவுயி ராநந்தத் தோடு நிறைந்தைம்புலன்,கா
க்கறி யாமற்சிற் றம்பல நாடினர் காட்டினரே. (14)

அறிவுஞ் செயலுமென் னுசையு மந்தக் கரணங்க
ளும், பொறியும் புலனும் புலனான போதமும் போக்கி
யின்பஞ், செறியநின் றுண்டசிற் றம்பல நாடி சிரபுர
னைப், பிறியும் படிநினைந் தாலிது போலும் பிழைப்பில்
லையே. (15)

அலைவற் றிருக்கைக் குபாயஞ்சொல் லென்றடி
யேன்விரும்ப, வலைவற் றிருக்கைக் கருளிச்செய் தான
ண்டம் வெள்ளங்கொள்ள, வலைவற்ற காழிச்சிற் றம்ப
லநாடி யடுத்ததுநீ, யலைவற்ற வான்பொரு ளாகிநில் லெ
ன்றடி வைத்தனனே. (16)

அறியாமை பாச மறிவாவ தண்ண லதுவதுவாய்ச்,
செறிவா னுயிரென்று தீரச்சொன்னான்றென் சிரபுரத்து,
நெறிநாளு நல்குசிற் றம்பல நாடிதன் னேர்களெல்லாங்,
குறிநாடிப் பார்க்கி லிறைவரல் லாத குணங்களின்றே.

மொழியா லுரைக்கிற் குறிக்கப் படுமென்று மூத
றிவா, லொழியா நிறைவையு மாநந்த வாழ்வையு மொ
ண்புகலி, யழியா விரதன்சிற் றம்பல நாடி யகமகிழ்ந்து,
விழியா லெனக்களித் தான்விழித்தேனின்பமேலிட்
டதே. (18)

ஒடுக்கம் விரித்த லிறைவற்கு மில்லை யுயிர்க்குமில்
லை, யடுத்தது தானல்ல னுவா னிறைவ னதுவுயிராம்,
விடுத்தது பாசம் விடாதது மற்றின்ப நூலைமெய்யே,
தொடுத்தருள் காழிச்சிற் றம்பல நாடினர் சொற்றன
ரே. (19)

வாக்கி லிருப்ப தவன்றிருநாம மனந்தனிலே, தாக்
கி யிருப்ப தவன்றிரு மேனி தரணிதனிற், போக்கியிரு
ப்ப தவனேவ லென்றும் புகழ்ந்துமறை, காக்குங் கரு
ணைச்சிற் றம்பல நாடியைக் கண்டபின்னே. (20)

அன்பா லறம்பொரு ளால்வர்க் குரைக்கவன் று
லகிழற், றென்பா லுகந்தசிற் றம்பல நாடிநின் சீரருளா,

னுன்பா லுருகிக் கலந்தடி யேற்கின்ப மூட்டியநீ, யெ
ன்பா லுனக்குப் பயனென் கொலோ வென்றறிகிலனே.

பொறிபுக் குழலுமென் போதத்தை மாற்றித்தம்
பூரணத்திற், குறிபுக்கு நின்று குறியா தவிழ்பவர் கூட்
டந்தன்னிற், செறிவுக்கு நல்குசிற் றம்பல நாடி சிரபுர
த்தோ, னறிவுக் கறிவு திருமேனி யான தறிந்திலனே.

பற்றறப் பற்றறவென்பதெல் லாம்பசு பாசம்விட
ல், மற்றொரு பற்றற வில்லையென் றுன்மன்னும் வெங்க
லியைச், செற்றருள் சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுர
த்தோ, னுற்ற தபோதன ரேயொழிந் தேயிரு மும்
மையுமே. (23)

முன்புகண் டேனில்லைப் பாசம் பசுபதி மும்முத
லும், பின்புகண் டேனில்லை யென்னகண்மாயம் பிறங்
குதொண்ட, ரபுன்கண் டாண்டசிற் றம்பலநாடி யருட்
புறவோ, னின்புகண் டாலிஃதா லுற்ற வாறென்கொ
லெண்ணுவதே. (24)

பாசந்தந் தானில்லை வாங்கிய பின்பர மாநந்தத்தே,
பாசந்தந் தானது வாங்கிய தெப்படிப் பாலனுக்குப், பா

சந்தந் தானைப் பதத்தா லுதைத்தந்தப் பாலனுக்குப்,
பாசந்தந் தாண்டசிற் றம்பலநாடி பராபரனே. (25)

பூம்பொழிற் காழிச்சிற் றம்பல நாடியைப் பூசித்த
போ, தாம்புவி தன்னிற் றவங்கள்செய்யார்கள்சா ரூப்
பியத்திற், போம்படி யோகத் தியானத் திரார்கள் புனி
தனுயி, ராம்படி கண்டு பரபோகந் துய்த்திலைப் பாறு
வரே. (26)

நில்லாவுடம்பும்பொருளுநிலையென நின்றுணரும்,
பொல்லாதபுன்மையர் புன்மையை நீத்துப் புலன்வழி
யே, செல்லாதொழித்தசிற் றம்பலநாடி சிரபுரத்தோ
ன்; எல்லாம் பொய்யென்றிரு பாதம்வைத்தானின்ப
மேலிட்டதே. (27)

துண்டத்துக்கண்வைத்துத் தூரமனம் வைத்துத்
தோன்றுசுடர், கண்டத்தைக்கண்டு கருத்தழியாமற் க
ருதுசமன், தெண்டத்தைமாற்றுசிற் றம்பலநாடி சிவா
னந்தத்தேன், வண்டொத்தருந்தி நினைப்பு மறப்பற்று
வாழுமினே. (28)

ஆபாசனுகி யணுவாய்இருந்த வெனையழைத்து, நீ
பாவிபாசத்தி னின்றிளைத்தா யென்று நீக்கியென்மேற்,

சேபாதம்வைத்தசிற் றம்பலநாடி திருவுருவை, யேபாவி பாரென வென்றிசைத்தானென்க ணின்புறவே. (29)

முத்திதனைச்சிற்றம் பலநாடி னுனைமுழுமுதலை, ய த்தனை யத்தனென் றுதரிப் போர்களா தாரமென்றே, பி த்தினைநீக்கிப் பிறப்பிலியென்று பிறக்கணித்தி, ரித்தனை யோமலங் காளிதுகால மிரங்கியதே. (30)

எல்லாமறிந்த வறிவாகிநின்றிடு மிச்சைதொழில்; புல்லாமற் புல்கிடும் பூரணவின்பமப் பூரணமே, நில்லாநி லைமை சுகாதீதவுண்மை நிகழுமப்பாற், செல்லார்பொ ழிற்சண்பைச் சிற்றம்பலவர் திருவுருவே. (31)

தத்துவக்கத்துஞ் சமையவிரோதமுஞ் சாத்திரஞ் சேர், புத்தகப்பித்தையும் புந்திமதத்தையும் போட் டிடென்று, வித்தகன்சிற்றம் பலநாடிவேணு புரத்திறை வ, னுத்தமமான சிவானந்தபோகத்தை யூட்டினனே.

சண்பைக்கதிபதி சிற்றம்பலவனென் சஞ்சிதமாம், புண்பைக்குரம்பையும் போகாவிருளும்பொருந்திவரும், பண்பைக்கெடுத்துத்தன் பாதத்திலேபணிவித்தவன்றே, யெண்பத்துநான்குநூ றுயிரந்தாயருமேங்கினரே. (33)

சங்காரகாலந் தனிலோர்மலத்தொடு சார்தலுமாந், தொங்காதுடல்விடுங் காலமுமாந்தொல் கருவியெலாம், பொங்காமன் மாற்றிய போகம்புகல்கின்ற காலமுமா, நங்காதல் காழிச்சிற் றம்பலநாடி நவின்றனனே. (34)

மலங்கா ரணமா யவத்தையுண் டானது மாயை யினாற், றலங்கா துணர்த்து முறைமை யுண்டானது துய்ப்பதற்கு, நலங்காண வீச னடித்தலுண்டான தெ னநவின்றான், தலங்காண வந்தசிற் றம்பலநாடி தவத் தரசே. (35)

சாக்கிரச் சாக்கி ரவத்தை யவத்தை யுணர்த்துந்த ன்மை, நீக்கியநாலுக்கு மிப்படி யாகுமெனநிகழ்த்தித், தாக்கிவைத் தாண்டசிற் றம்பல நாடிதண் காழியண் ண, லாக்கிய போதமெய் யானந்த போதமு மாய்விட் டதே. (36)

சுத்தக்கருவிக ளைந்துங்கொண்டேசொல் லவத் தையைந்துஞ், சித்திக்கும்போதத்தி லொன்றொன்று சென்றிடுஞ் சென்றதெல்லாம், பத்திக்கு நல்குசிற் றம் பலநாடி பயின்றதெல்லா, முத்திக்கரையது வாய்ச்சிவ போகமு முன்னின்றதே. (37)

தருக்கியுருக்கொண்டு தான்பிறந்துய்த்தல் சகலமதாஞ், சுருக்கியுபாதியைத் தூநெறிக்கேவைத்த தோன்றல்சுத்த, மிருக்கிலிருக்குஞ் சிவபோகந்துய்த்த விறைகலத்தல், செருக்கியுணர்த்துசிற் றம்பலநாடினர் செப்பினரே. (38)

மூலக்கனலை முடுகிமுடுகி முழுமதியின், பாலைப்பருகிப் பரவெளிக்கே சென்று பற்றிநின்றார், ஞாலத்தில் வந்தசிற் றம்பலநாடி நறும்புறவோன், சீலத்திற்றந்த சிவானந்தம் போலுமெய்ச் சித்தியன்றே. (39)

சுற்றுநடுவொடு கீழ்மேலுமெங்குஞ் சுகவடிவாய்ச், சற்றுஞ் சலிப்பற்ற தன்மையுன்னார் சில சாத்திரங்கள், கற்றும் பிறருடன்கேட்டும் பலருடன் கத்தியும்போய், மற்றும் புவனத்தி லாசைவிடாமன் மயங்கினரே (40)

அந்தரங் காற்றங்கி நீர்மண்கொண் டேநின்ற வையமெல்லா, மிந்திரசால மெனக்காட்டி மீட்டு மிறைநிறைவிற், றந்தருள் சிற்றம் பலநாடிவண்மைத் தவப்பெருமான், வந்தபின் காணுஞ் சிவலோகவாசல் வழங்குவதே. (41)

சிற்றைக்கதிபதி நந்தியெங் கோன்றிரு வாக்குலகோர், பற்றைத் தவிர்த்துச்சன் மார்க்கத்தை நல்குமிப்

பண்புமன்றி, மற்றைச்சமையத்தை வாயடக்காநிற்கு மாயஞ்செய்யுந், தெற்றைப் பிடுங்கிச் சிவலோகவாசல் திறப்பிக்குமே. (42)

வனக்கே தகைபுடைச் சூழ்காழி காவலன் மன்னு மன்பர், சினக்கேண்மை செற்றசிற் றம்பல நாடி திரு வுருவை, யெனக்கே தெரியுமற் றென்னையு மாட்கொண்ட விவ்வருமை, யுனக்கே தெரியுந் தெரியாதுபின்னை யொருவர்க்குமே. (43)

ஆறுறுநீக்கி யருட்கரைக்கேயிளைப் பாற்றும்பின்னை, யேறுத வாரிதிக் குள்ளேயழுத்திடு மென்வினைக்கு, மாறுன சிற்றம் பலநாடி வண்மைச் சிரபுரத்தோன், பேருக நம்மைப் பிழைப்பிப்பனென்றவன் பின்செல்லவே.

பூரண போத புரத்தே யிருந்தின்ப மேனிபுகக், காரணன் சிற்றம் பலநாடி யன்றியக் காழியிலே, யாரண மாமுடி மேலன்பர்க் கானந்த மேயளித்துக், கோரணி யான சமையோர்க் கெனக்கொடி கட்டினனே. (45)

எல்லையில் காலந் தவமுயன்றேமில்லை யேத்தியன்பர், சொல்லையிரங்கித் தொழுதுநின்றேமில்லைத் துய்ய வருட், டில்லையுளாடிசிற் றம்பலநாடி சிரபுரத்தோ, னெல்லையிலென்னை யொழித்தின்ப வானந்த மூட்டினனே.

தேன்பாயிதழிச்சிற் றம்பலநாடி சிரபுரத்தோன்,
தான்பாசந் தீர்த்தன்பர்க் கானந்த வாரி தனைவழங்க,
வான்பாலுமன்னை முலைப்பாலுமுண்டின் றளவுமையோ,
நான்பாவி யாய்த்திரிந் தேன்பரமானந்த நண்ணுதற்கே.

தீதற்றகாழிச்சிற்றம்பலநாடியைத்தெய்வமென்றே,
பாதத்துக்கேற்றபணிகள்செய்யாமற்பரந்துகெட்டேன்,
போதத்துக்கேற்ற புலன்வழியேசென்று பொய்பிதற்
றி, வேதத்துக்கேற்ற சிவானந்தபோகத்தை விட்ட
னனே. (48)

ஆனந்தமேசெவி யம்புயத் தாளிணை யங்கைகளு,மா
னந்தமேதிருக் கண்ணுஞ்செவ்வாயருள் மேனியெல்லா,
மானந்தமே யருட் சிற்றம்பலவ ரருட்பொருளு, மானந்
தமேயவன் றில்லையுங்காழியு மானந்தமே. (49)

மானைப்பொருத விழியார் மயக்கின் மயங்கியஞ்சி,யா
னைக்கணைதறி யாயுழல் வேனைவந் தஞ்சலென்றான், ஞா
னத்தசிற்றம் பலநாடி வண்மைத்தவப்பெருமான், ஞா
னக்கொடைமுகில் நந்தாத சிற்றைக்கு நாயகமே. (50)

அறங்காட்டிய வடநீழலில் நால்வர்க் கறத்தினு
ண்மைத், திறங்காட்டிய வெண்ணெ மெய்கண்டநாதன்

றிருமுன்சென்றேன், நிறங்காட்டி யென்னிறந்தன்னையு
மாற்றிவெண் ணீற்றையுமிட், டுறங்காச்சமாதிதந் தான்
பரமானந்த வுண்மையிலே. (51)

போதித்தருடரு சிற்றம்பலவர் புகலிநகர்ச், சோ
தித் திருவுருத்தோன்றிய போது தொடங்கியெனைப்,
பேதித்தறிவை யகலாத பாசப் பெருக்கமெல்லா, மா
தித்தனைக்கண்ட புற்பனிபோல வகன்றிட்டதே. (52)

செழுமலர் மென்குழல் மாதருதரத்திற் சென்று
சென்று, புழுமலவாக்கை யெடுக்கவொட்டேன் புனற்
சேறுழுவ, ருழுமலம் பட்டுவெண் சங்கஞ்சொரிமுத்
தொதுங்கும்வயற், கழுமலமன்னுசிற் றம்பலநாடியைக்
கண்டபின்னே. (53)

ஒன்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லு
க வொன்றிரண்டா, மென்றென்று சொல்பவர் சொன்
னாலுஞ் சொல்லுக வேத்தியன்பர், சென்றங்கு நற்கு
சிற் றம்பலநாடி சிரபுரத்தோ, னன்றென்றிதாமென்று
சொல்லாதமுத்தி யளித்தனனே. (54)

சிற்றம்பலநாடிகள் கட்டளைக் கலித்துறை - முற்றும்.



எட்டாவது,

# துகளறுபோதம்



## பாயிரம்.

### நேரிசைவெண்பா.

பதிபசு பாசந் தெரிந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறாங் - கதிவழங்கு
மெய்கண்டான் சந்தான மேவிற் சிவானந்தங்
கைகண்டார் காணார் கரு. (1)

உற்ற சரியை யொழியாத நற்கிரியை
குற்றமிலா யோகக் குறிநெறியு - முற்றிப்
பிறந்தார்க டாமறியப் பேசுகே னன்றிப்
பிறந்தா ரறியாத பேறு. (2)

எல்லாங் கழற்றி யிறைவ னடுங்கலக்க
வல்லார்கள் கண்ட வழிபலவுஞ் - சொல்லரிய
தம்பிரான் றுள்க டணவாத வாதனையு
மெம்பிரான் றந்தா னெமக்கு. (3)

(நூல்)

பஞ்சபூதப் பழிப்பு.

மண்ணுக் குயிராகி வந்துரத்துத் தான்றரிக்கு
மெண்ணுமுரோ மாதியிதன் காரியமாங் - கண்ணிற்
பிறவுங் கடினமாய்ப் பேசியது தானுந்
துறவுமுதற் பூதத் தொழில். (1)

நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கினீராதி ப்கர்கருமங் — கார்க்குரிய
வெள்ள முதலாகு மெய்யுணரி லப்புத்தா
னள்ள விடப்படா தாம். (2)

வன்னிக் குயிராகி வந்துசுட் டொன்றுவிக்கும்
பன்னுபசி யாதி பயில்கரும — மன்னும்
விளக்காகிப் பந்தமாய் வேறாகி நிற்குந்
துளக்கமிலாத் தேயுத் தொழில். (3)

தேடப் பிரித்துத் திரட்டுவிக்குஞ் செய்கரும
மோடன்முத லோவா வுயிர்மருந்து - நாடிலிவை
யல்லவாம் வாயு வருட்குருவாற் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து. (4)

இரந்தரமாய் நின்றே யிடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதற் பார்க்கின் — விரிந்த
கருமமாய் வேறுகுங் காணலா முண்மைக்
குரவனு லென்றே குறி. (5)

வட்ட மறுகோண மாயாத முக்கோண
மிட்ட பிறைசதுர மேவடிவ - மெட்டரிய
வேதன்மான் மிக்க விடையோன் மகேசனுட
னுதி யதிதெய்வ மாம். (6)

இப்படியே பூதத் தியல்பு தனைத்தெளிந்தே
யப்படிநீ நில்லாம லாங்கறிந்திட் - டெப்படியுந்
தோன்றுமற் றேசிகன்முன் சொன்னபடி கண்டிருந்தா
லூன்று யதுவா முடம்பு. (7)

போறியறவுணர்தல்.

பூத வுடம்பாய்ப் பொருந்தும் பொறிபுலன்க
ளுதனரு ளாலேநீ நாடியவை — யேதமெனத்
தத்த முருவுணரத் தானகலு மப்போதே
சத்தமுத லாகிவிடுந் தான். (8)

சத்தாதி யைந்தினையுஞ் சந்தித்து நீயகல
வத்தால் வரும்பயன்க ளாங்ககலு — மெத்தாலும்

காணுமவ் விடயங் கைகழலக் கைகழலு
நாணுப் பிறப்பி னவை. (9)

வாக் காதி யத்துடனே நீங்கவச னாதிவிடு
நீக்காத வுட்கரண நீங்குமே - தாக்கி
மனதுமுதலாக வந்தவந்த போது
தனது செயலுணரத் தான். (10)

அந்தக்கரணசுத்தி.

மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை
யுன்னு முகார முபகரிக்கு - முன்னரு
மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்திவிடு
நீங்காது சித்தம்விந்து நேர். (11)

அந்தக் கரண மகல வதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே - பந்திக்குஞ்
சித்த மயலறுத்துத் தீர வுனக்கேற
லொத்த படியே யுணர். (12)

கலாதி ஞான நிராகரணம்.

பொங்கு புலனருந்தப் போதந் தருமாயை
தங்குகலை யாதி தருஞான - மிங்கிதனை
நீங்குபடி மாணவக நின்போத மொன்றிரண்டு
தூங்குபடி நில்லாய்ந் துணிந்து. (13)

கால நியதி கலையாதி தத்துவங்கள்
சாலவறி விச்சைதொழி * மூன்பூக்தன் - மூலமா
மாயை மயக்கல் வரைத்தல் வினைக்கூட்ட
லாயவிட லாமென் றறி. (14)

சுத்த தத்துவ தூடணம்.

ஆன வதனு லழுந்தினு லாசறற்கே
னீன வயிந்தவத்தி னெல்லைகா - ஞானமிலாப்
போகந் தருமானுற் பொல்லாதோ புண்ணியத்தி
னுகந் துணையானுர்க் காம். (15)

சுத்தவித்தை யாதிமுதற் சொன்னவேழ் தத்துவமு
மொத்து நடத்தியிடு மோவாமல் - வித்தைசெய
லேறிக் குறைந்தொத்த லெப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்தகலு மாறு. (16)

தத்துவாதீதம்.

மண்முதலா நாதாந்த மாய்வந்த தத்துவத்தி
னுண்மையறிந் தெல்லா மொழிந்தாயே-யெண்ணிலிவை
தத்துவா தீதமெனச் சாற்றுங்காண் சைவமற்றை
யத்துவா வெல்லா மற. (17)

---

* தானழுத்தல் என்றும் பாடம்

இப்பரிசே யைந்துசுத்தி யெய்தியதா லெப்போதுஞ்
செப்பரிய மாயாதி தீருமே - யப்பரிசே
யாங்கவற்றி ஞேடே யழியும் வினைமலந்தா
னீங்கவற்ருே நீங்கா நிலை. (18)

சகலதரிசனம்.

நின்றுநின்று வந்த நிலைதோறு நீயறிந்த
தன்றியவை தன்னை யகன்ருயே – யின்றிவைதான்
முத்தி படுஞ்சகல முன்னம் படுஞ்சகலம்
பெத்தமது வென்றுநீ பேசு. (19)

அஞ்சு வகையாக வாருறு நீத்ததற்பின்
விஞ்சிவரு மாணவத்தின் மேலீடு - வஞ்சமறச்
சாற்றிலது கேவலமாந் தான்கழித்துப் போந்தநிலை
சாற்றி லதுசகலந் தான். (20)

கேவலம்.

அன்றிவந்த தத்துவங்க ளெல்லா மகன்றிடவே
யொன்றிநின்ற வாணவந்தா ஞென்றுமே-யென்றுந்தா
னீங்கா விருள்விழிபோ னிற்குமே யான்மாவும்
பாங்காக வாங்கே பதிந்து. (21)

பகலிழந்த வான்போற் பரவுமல நீயா
யிகலறவே நின்ரு யிழந்தா - யகலறிவு

வாடாத முத்தியினில் வாய்ந்தவருட் கேவலநீ
நாடாத கேவலமுன் னுள். (22)

கேவலதரிசனம்.

ஒன்றுந் தெரியா வொழியா விருளாகி
யின்றளவு நின்ற திசைவோதா - னென்றுகிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற வாணவந்தா
னம்புநிழல் போலென் றறி (23)

கருவி கரணங் கழன்றுங் கழலா
விருளின் பெருமையிது வென்னே - விருடான்
விடிகைக் கிருண்ட மிகுதிபோன் மாசு
மடிகைக் கிருண்டதுகாண் மற்று. (24)

கேவலாதீதம்.

வானி விரவிவர வல்லிருள்போ மாறுபோ
லீன விருளகல்வ தெக்கால - மானே
யறிந்தா யிருளென் றறியாமை தன்னைப்
பிறிந்தாயோ வில்லையோ பேசு. (25)

இந்த விருளொழிய வேதுநான் காண்கிலே
னிந்த விருளகல்வ தெப்படியோ - விந்த
வறியாமை நின்று லதனைநீ காணு
யறியா தறிந்தனையோ வன்று. (26)

தன்னுண்மை.

அந்த மலமா மறியாமை கண்டாயே
யந்த வறிவுநீ யையனே - தொந்தவிருள்
போனதே யுன்னைவிடப் போக்கித் திரோதையரு
ளானதே கண்டா யறி. (27)

வைத்த வுதரங்க ளெல்லா முடன்வந்து
மத்தகைமை கண்டு மறியாயான் — முத்தனைப்
பாச வறிவும் பதியறிவு மன்றியே
யாசறவே நின்றவ னீயாம். (28)

சைதன்ய தரிசனம்.

கண்ணிலிருள் போனலுங் கண்டன்னைக் காணுபோ
லெண்ணுமிருள் போனு லெனையறிய-வொண்ணுதோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
வொண்போத நீயென் றுணர். (29)

இருட்கு மொளிக்கு மிடமாகும் வான்போ
லருட்கு மருட்கு மகமாய்ச் - சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
னுய்சத் தனுவசத்த தாம். (30)

அறியு மறிவுநீ யன்றோ வுனக்குச்
செறியுமல நின்றதோ செப்பா - யறிவுதனைப்

பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கமதில்
வாராத தன்றோ வழக்கு. (31)

ஞானதரிசனம்.

அறிந்தறிந்து வந்த வவதரங்க டோறுஞ்
செறிந்தறிந்து நின்றதெது தேரிற் — பிறிந்ததனை
நின்ற தறியாம னிகழ்த்தியது நீக்கியுனை
யின்றறிய வைத்ததரு ளென். (32)

அந்த வருளுனக்கிங் காதாரமா யல்லி
னிந்து வென வெறித்திட் டேகமாய் - முந்தி
யுனையுனக்குத் தான்விளக்கி போவா துணர்த்துந்
தனையுனக்குக் காட்டுமே தான். (33)

எல்லாம்பொய் யென்றிங் கிருந்தேனு நானன்றோ
நல்லா யெனையறிந்தே னன்றோ - சொல்லாடு
நான்பிரம மன்றி நடுவே யுணர்த்துதற்கு
வான்பிரம முள்ளதோ மற்று. (34)

அன்றுமுத லின்றளவு மண்ணலறி விப்பதன்றி
யின்றறிவே னெனென் றியம்புவதெ - னென்று
மவத்தை தனிலுணர்த்தி யாங்கருத்தி யின்றித்
தவத்தி லுணர்த்தினார் தான். (35)

உன்னறிவு நீயே யுணர்வையே யாமாகி
யின்னெடுநாட் பாசத் தியையாயே - யுன்னறிவை
நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ
லாங்கா ணரனு ளருள். (36)

உன்னறிவுக் குள்ளே யுணர்வா யொழியாத
தன்னறிவு தானுனக்குத் தாரகமாய்ப் - பின்னமற
வொன்று யொழியாம லுள்ளடங்கி யுள்ளபடி
நின்று லதுவாவை நீ. (37)

இச்சை யுயிர்க்கிரங்கன் ஞான மிசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்த — னிச்சயமாஞ்
சத்தியிவை மூன்றனையுந் தந்ததொரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று. (38)

பரைதரிசனம்.

கிரியையறி விச்சை கிளர்ந்தசத்தி யேதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய் — தெரியிலதிங்
காரு மறியா வகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பெற. (39)

அந்த வறிவு மறிவன்றே யிப்போது
தந்த வறிவுமது தானன்றே - வந்த

வறிவிற் கிளைத்ததுகா ணவ்வறிவிங் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர். (40)

அறிவார்க் கறிவித்தங் கல்லாத தாகா
வறிவாய் விகற்ப மறியா - வறிவேகாண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல். (41)

பரையில்வியாத்தி.

விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோற்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோ — னண்ணிப்
பரைநிறைவி னீயும் பதிவையே யாகி
லுரையிறந்திட் டொன்றாவை யுற்று. (42)

பரையில் யோகமும் போகமும்.

விண்ணில் விகற்பமற மேவியகா னின்றதுபோ
னண்ணும் பரையதனி னண்ணியே - யெண்ணிறந்து
நீருறங்குந் தன்மைபோ னிற்கைபரை யோகமதிற்
சீருறலே போகமெனச் செப்பு. (43)

சுத்தபரயோகம்.

நீங்காத பேரறிவு நீங்காமற் கண்டநீ
நீங்காம னின்றபடி நின்றதனி - னீங்காம

னின்றுவிட லன்றோதா னின்மலன்றன் பேரறிவி
லொன்றுபட லென்றறிநீ யுற்று. (44)

சுத்தபரயோகமும்,
முத்திச்சாக்கிரமும்.

எத்திசையு மொன்று யிறையறிவி லேயழுந்தல்
சுத்தபர போக மெனத்துணிநீ - சத்தியமே
யத்தன்மை கண்டா லதுமுத்திச் சாக்கிரமாஞ்
சித்த மயலறவே தேர். (45)

முத்திசொற்பனம்.
சாக்கிராதீதம்.

நின்ற வறிவறிகை நீங்காமை சாக்கிரமா
மன்றி யவிழ்த லதீதமாஞ் - சென்றறிவி
னீங்காம னின்று நெடிதுதுயில் கொள்ளவே
வாங்கா தறிவாய் வர. (46)

முத்திசுழுத்தி.
பரையிலதீதம்.

இவ்வறிவு கண்டா லிருடீருஞ் சாக்கிரமா
மவ்வறிவு காணு ததீதமா - மிவ்விரண்டும்
பாராம னிற்றல் பரையி லதீதமா
மாரா வறிவகன்ற தால். (47)

ஈசனறி வாகியெல்லா மின்று கழன்றகன்றாய்
பாசமிக வைத்ததனிற் பற்றாதே - கூசாம
னேராக நீங்கியதி னின்ற சுவடறவே
வாராய் சிவமேல் வர. (48)

## முத்தி துரியம்.

### சுத்தாவத்தை.

அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டென்றுங் குறியா - நெறியேது
சுத்தவத்தை மைந்தாவுன் றொல்லைமல மில்லையில்லை
யத்துடனே செல்வதது வாம். (49)

### சுகரூபம் துரியம்.

பைய விருந்து பதைப்பற்ற பின்னுனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே - யையனே
கண்டாய் சிவபூமி காட்சியறக் கலந்து
கொண்டாள்வான் கண்டாய் குறித்து. (50)

விழுந்த வவதரத்தில் விஞ்சு சுகந்தா
னெழுந்ததிது வெங்கே யிறைவா - மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோ
லாமரன்றன் பாலே யது. (51)

துன்பற்ற வின்பச் சுகப்பிரபை தன்னையே
யின்பசத்தி யென்றறிநீ யெப்போது — மன்புறவே
நின்றதிலே யாறி நிலாவு நிலாவும்போன்
மன்ற றரமணந்து வாழ். (52)

தேனுரு மின்பச் சிவவடிவு மிப்படியோ
வானுடர் காணுத மன்னவனே - ஞானு
விதுவு மொருசத்தி யிறைவர்க் கதனு
லெதுமுத்தி சொல்லா யினி. (53)

முத்திதுரியாதீதம்.

சுகாதீதம்.

இந்தச் சுகத்தி லினிநீ விழியாம
லந்த வறிவி னயர்ந்ததுபோற் — றேந்தமறப்
போதா யிதுவே சுகாதீதம் பொய்யற்றோர்க்
காதார மான வருள். (54)

ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா
னன்றி யொருபொருளு மாகாதே - நின்றழுந்திச்
சொல்லரிய விந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்லவன்று னமே நிலை. (55)

சுகப்பேறு.

எல்லாங் கழன்ற விடமே சிவமென்று
சொல்லா டுவர்கழன்ற தூயோர்க — ணல்லாய்கே
ணின்றபடி தானே நிலையா நிலையதனி
னின்றுவிடு நேராக நீ. (56)

வானகத்தில் வானு மணத்தின் மணமும்போ
லானசுகப் பேற்றி லழுந்தியவா - தானுகு
மாண்ட குருநாதா வடியேன் பெருவாழ்வை
மீண்டு சொல வுண்டோ விதி. (57)

நீயுஞ் சிவமாகி நின்றாயோ நின்றிலையோ
வாயவடி யேனு வதிகார - நாயனே
யொன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை. (58)

சாற்றி லதற்குவமை தாடலைபோற் சன்மார்க்க
வேற்றுவிதி பலவும் வேண்டாவே - போற்றரிய
நித்தனே சுத்தனே நித்தியா னந்தனே
யத்தனே முத்தனே யாங்கு. (59)

அந்தச் சுகத்துக் கதித வவத்தையென்ப
பந்தமற்ற முத்திப் பயனறியா - ரந்தோ

பிரியாத வின்பப் பெருமாளைப் பெற்று
மறியாத வாதனையா லாங்கு. (60)

பரமானந்ததரிசனம்.

நின்ற நிலைசிவமாய் நின்றுமே நின்மலனு
மென்றும் பயனு யிருந்தானே - யன்றே
யவனுக் கிதமே தவனாகி நின்ற
விவனுக் கிதமே தினி. (61)

அன்றே தொடங்கி யனைத்துயிருந் தானாகி
யொன்றாகி நின்றவருக் கின்பூட்டிக் - குன்றாமற்
கொண்டுவிட லன்றோநங் கோமாற் கிதமென்று
பண்டைமறை சொல்லும் பரிந்து. (62)

பார்க்கரிய விந்தப் பரம சுகந்தனையே
சேர்ப்பனுயிர்க் கென்றிறைவா செப்பினையே-மாற்றரிய
வானந்த மாருயிர்கட் கண்ண லருத்துவது
தானெங்குப் பெற்றவா சாற்று. (63)

பெற்றருந்தி யின்பம் பிறர்க்கு மருத்தினனோ
வுற்றபர மானந்த முள்ளதோ - மற்றிதுதா
னென்றுநீ கேட்கி லிறையுருவ மானந்த
மென்றுரைக்கு மாகமநூ லின்று. (64)

ஆனபர மானந்த மாகின்ற வெல்லையே
யூனமிலா வுண்மைதனி லொன்றுபட - வீனமறத்
தானான போது தணவா தெழுந்தசுக
மானே யதுவா மதி. (65)

பரமானந்தயோகம்.

விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்துதுளைந் தாடியதிற் றோன்று-வளைந்துன்னை
நீர்போ லமிழ்த்தியதி னீர்நிழல்போற் றுன்கரந்து
பார்போற் றரிப்பாகும் பார். (66)

பாராதே யந்தப் பரமசுகந் தன்னை
நேராகத் தானு நிழல்போலத் - தீராச்
சுபாவ மதுவாகித் தோன்றி மறையாதே
யபாவமாய் நில்லா யதில். (67)

பரமானந்தபோகம்.

நின்றபர மானந்த நேரே யனுபவித்தங்
கொன்றுபட வுள்ளுருகி யோவாம - லென்று
மதுவுண்ட வண்டுபோன் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடிப் போது. (68)

பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
யுருகியடி யேனருந்த வூட்டுங் - குருவே

யழியாத வின்ப மரனருந்தா னென்னும்
வழியேது சொல்லீர் மகிழ்ந்து. (69)

சர்க்கரைதா னார்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்காற் - சர்க்கரை
யின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ [க்கின்
வின்புருவ மேயிறைக்கு மென். (70)

நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத மறியுமோ — வோவாப்
பரமசுக முன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன். (71)

இந்தச் சுகமான்ம லாப மெனவறிநீ
யந்தச் சுகமொழிந்திங் காராதே — யிந்தச்
சுகமெலா மந்தச் சுகமாக்கி லுன்ற
னகமெலா மானந்த மாம். (72)

பரமானந்தமேலீடு.

அண்ணலுமா னந்த மருளுமா னந்தமுயி
ரெண்ணிலா வானந்த மெவ்வுலகும் - பண்ணி
யளித்தழிப்பா ராகு மவர்களுமா னந்தங்
களித்ததுவே யெப்போதுங் காண். (73)

எங்குநிறைந் தானந்த மெல்லா மமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமா - யெங்கும்
வளைத்த வுலகுயிரும் வாய்த்த சுகமா
மளத்திற் புகுந்ததுபோ லாங்கு. (74)

கண்டவிட மெல்லாங் கருணைக் கடலமுத
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப் - பண்டே
திருமா லயனறியாத் தேசிகனார் பாதந்
தருமா மடியேற்குந் தான். (75)

பரமானந்த அவசம்.

பரமபர மானந்தம் பார்கீழ்மேன் மற்று
மரவம்வா ராதே யகலும் - புரணமா
யாங்கே யமிழ்ந்தி யவசமா மானந்த
நீங்கா ததுவாகி நில். (76)

உற்றபர மானந்தத் தொன்று யதிலுறங்கி
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்குங் - குற்றமிலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூ லெல்லாந் தெளி. (77)

அணுவ்கை.

ஆன்மாக்களின் கூறுபாடு.

ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளவுயிர் மூவருக்குஞ்
சென்றிவன்போ னேரே சிவமாகி - நின்றநிலை

யிவ்வகையே யாளு மெழிற்குருவா மீசனே
யவ்வகையை நீயிங் கறி. (78)

பஞ்சாக்கரதரிசனம்.

அஞ்செழுத்து மண்ணலரு ளான்மா திரோதமலம்
விஞ்சி நமத்துரந்து மெய்யருள்வாத் — தஞ்சச்
சிகாரத்தில் யவ்வைவிடுந் திதிலா வின்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய். (79)

குருஸ்துதி.

பற்றிநின்ற பாசம் பறித்தகல வேவிழித்திட்
டுற்றவுயிர் காட்டி யுணர்வுணர்த்தி - மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பே றளித்தவரைப் போற்று. (80)

சீடனிலக்கணம்.

இரவு பகனிழல்போ லிட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித் - திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர். (81)

முத்தனுக்குமுத்தியின்பங்கூறல்.

ஆகமுத னீங்கி யருளிற் கலந்து சிவ
போகம் விளையப் புணர்ந்தாலும் - வேகத்

தெரிவாய் நிரயத் திருப்பர் குருசொற்
பிரிவா ருலகிற் பிறந்து. (82)

குருவழிபாடேபொருளெனக்கூறல்.

ஆகமுயிர் பொருள்கொண் டன்றே யருளளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னாரைத் - தாகத்தோர்
வேண்டுபொழுதெல்லாம்வேண்டுபொருள்வந்ததுபோற்
பூண்டுதொழ லன்றோ பொருள். (83)

அன்றுமுத லாகவே யாருயிர்கட் காருயிராய்
நின்றருளுந் தம்பிரா னீங்காம - லென்றுங்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவா யருளாமற் கூறு. (84)

குருவே சிவமெனல்.

பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
பாசி லகலறிவா யாங்ககன்று - பேசரிய
வானந்தம் பெற்று ரருட்குருவே யீசனென்பர்
மோனமே முற்று முயன்று. (85)

குருபணிசெய்வாரை வழிபடல்.

குருவேலை தன்னைக் கடப்ப ருலகின்
மருவாத வின்பத்துள் வைத்த - குருவி

னடியா ரடியா ரடியா ரடியா
ரடியாரைச் சார்ந்த வவர். (86)

## யோகம்.

சன்மார்க்க மீதாஞ் சகமார்க்கஞ் சாற்றுங்காற்
பன்மார்க்கம் வாயுப் பகர்கருவி — தன்மார்க்கஞ்
சால வொடுக்கித் தடுத்து வளியிரண்டு
மாலறவே நிற்கை மகிழ்ந்து. (87)

அந்த மனத்தாலே யாதார மாறினையுஞ்
சந்தித் ததிற்பொருள்க டாமறிந்திட் — டிந்துவிலே
யோவா வொளிவைத் துருகுமமு துண்ணிறைக்கி
லோவா வொளியா முரு. (88)

நின்ற வொளியுருவி னீங்காம னிற்கவே
யென்று மழியாம லின்புற்றுக் — கொன்றையந்தார்த்
தாணுவுருப் போலேபின் சாரூப்பி யத்திலே
மாணவக வாழ்வார்காண் மற்று. (89)

## கிரியை.

புத்திர மார்க்கம் புகையொளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூல மற்றெவையு — முத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
காட்டவத்திற் செல்லாம ளுள். (90)

சுத்தியைந்துஞ் செய்து துகடீரு மந்திரத்தா
லத்தமதுப் பத்துமுக மைந்தாக - வைத்துவைத்து
வித்தியா தேகம் விதிப்படி யிற் ருபித்துப்
பத்தியான் மேனிதனைப் பார். (91)

பார்த்ததிரு மேனிப் படிகந் தனிற்பரனைக்
கோத்ததிரு மந்திரத்தாற் கொண்டுவந்து-பார்த்தருளச்
சொல்லிப் பராக்கறுத்துச் சோதிச் சிவாகமத்திற்
சொல்லிற் படியே தொடங்கு. (92)

சோராமற் பூசித்துச் சொன்னபடி நல்லிதழித்
தாரார் சமீபத்திற் ருனிருந்து - வாராமற்
ருனே பரனளிக்குஞ் சங்கரனு ரிம்முத்தி
தானே தரினுந் தரும். (93)

சரியை.

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரனு ரின்புற்ற
பூதி திருவேடம் போற்றியே-நீதியினுற்
பூங்காவனஞ் சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காகச் செய்கை பரிந்து. (94)

அலகு திருமெழுக்கிட் டாலயத்தி லன்பா
லிலகு திருவிளக்கு மேற்றிப் - பலகாலுஞ்

சென்று வணங்கித் திருவடிவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர். (95)

கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து – நின்று [துப்
ரவலோகந் தன்னி லடையா ரடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து. (96)

வாழ்த்து.

அந்த மலமறுத்தங் கான்மாவைக் காட்டியதற்
கந்த வறிவை யறிவித்திங் – கந்தறிவை
மாறுமன் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறுமற் கூறக் கொடி. (97)

துகளறுபோத முற்றியது.



## ஒன்பதாவது,

## திருப்புன்முறுவல்.



அந்தோவின்னே படும்பாட்டுக் களவோவில்லை யவைக்கிடாய், நொந்தான்கொடிய பிறப்பிறப்பி னேவாதிரங்கி யெதிர்நோக்கத், தந்தாங்கெமது திருவருடான் சாரும்பரிசா லெமைக்காண, வந்தானேகோ வெனுங்குணியோ வானேன்றிருப்புன் முறுவலே. (1)

திரிந்தேவென்பின் பணியாளாய்த் திரும்பிச்சிறிதும் பாராதே, இருந்தானேய்வில் பல்லூழி யெண்ணினிரைய சுவர்க்கங்கள், பரிந்தான்யோனிப் படுகடல்கள் பறியவிந்நா ளெமைக்காண, இருந்தானேகோ வெனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறுவலே. (2)

நான்றன்னுடனு யிருக்கையினு நாடானனன்றிலை யெனத்தா, னூன்றனுடனுய்க் கடலுந்தா னெனவுமுழன்றுன்சார்போதன், என்றங்கிவனே டெதிராடி யிடித்திட்டிடித்திட் டெடுத்துணர்த்தத், தான்றங்கினன்கா ணெனுங்குணியோ தக்கோன்றிருப்புன் முறுவலே (3)

நினையாமுனங் கேவலமாஞ வினையப்பெறினே மாயையுடன், றனேயேசார்ந்தான் சார்வினையாற் சரித் தான்வான் மண்ணிரையமெலாந், றனையாங்காட்டும்படி கண்டான் றனையாம்பார்க்க மலம்போக, எனைநோக்கி னன்கா ணைனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறு வலே. (4)

கடைப்பட்டேனைப் பிறப்பிறப்பிற் கலங்கிக்குய வன் றிகிரிபோன், மிடைப்பட்டேயே னுழல்கின்ருய் வேண்டாமெய்யுண் டென்ருலுந், திடப்பட்டறியா ஞ தலிஞற் றிகழுமருட்பா லெடுத்தேற்ற, இடைப்பட்ட னன்கா ணைனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறு வலே. (5)

உனக்கிங்குயிர்நா மென்ருலு மோராஞரென் றுரைத்தாலும், எனக்கிங்குயிர்நீ ரெப்பரிசென் றெதி ரானெதிரப் பெறுங்காலே, தனக்குள்ளறிவாமெனேக் காட்டச் சார்ந்துகூட லுனேயல்லால், எனேக்கண்டிலன் கா ணைனுங்குணியோ வெம்மான்றிருப்புன் முறுவலே.

சாகாவிடனு மிலேயிவன்ருன்சாரா யோனியிலே மாய்ந்து, வேகாவிடனு மிலேயிற்றைவரையு முழன்ருன்

வேசற்றும், காகாவழியாய் காம்வலியத் தடுத்தாட்கோ ளனு மெனமுனிவன், வாகாநின்ற னெனுங்குணியோ வானேன்றிருப்புன் முறுவலே. (7)

அங்கங்கடுத்த வியாபியாயகப்பட் டதுவாமி வனந் தோ, பொங்குமலங்க ளுடனுகப்போந்தும் கிடந்தான் பல்லூழி, தங்குமருளா லறிவாகிச் சார்ந்துகலந்தின் றேகோகோ, எங்கும்பரந்தா னெனுங்குணியோ வெம் மான்றிருப்புன் முறுவலே. (8)

மட்டாமலங்கட்குட்புறம்பாய் வதிந்து மலமே ஆரகமா, யொட்டாநின்ற னமதருளங்கூடா டிடவங்க வை யெல்லாம், விட்டானருளே தாரகமாய் மேவிக் கொண்டா னினிமலங்கட், கெட்டானிவனென் றிடுங் குணியோ வெம்மான்றிருப்புன் முறுவலே. (9)

ஆறுனந்தோ தீவினைக ளந்தக்கரணஞ் சுத்தியி லான், தேறுன்றேற வுரைத்தாலுஞ் செய்மாறென்கொ றிருநாமங், கூறுன்கூறு மவரிடத்தும் குறுகானிவனு நமைக்காண, வாறுனே கோவெனுங்குணியோ வூனே ன்றிருப்புன் முறுவலே. (10)

எள்ளத்தனையு மிரக்கமிலா னிவனேகொடிய மா பாவி, யுள்ளத்துயர மொருக்காலு மொழியாணிவனுந் தனையாளக், கொள்ளச்சொலியுந் திரிகின்றான்கொடி யோனென்றன்முக நோக்கி, விள்ளப்பெரிதா யிடுங்கு ணியோ விண்ணேன்றிருப்புன் முறுவலே. (11)

திருப்புன்முறுவல் முற்றிற்று.



சிற்றம்பலநாடிகள் சாத்திரக்கோத்து முடிந்தது.

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் றிருவடிவாழ்க.

ஸ்ரீ சிவஞான யோகிகள் சேவடிவாழ்க.



உ

திருச்சிற்றம்பலம்.

திருக்கயிலாயபரம்பரை

ஸ்ரீநகரம் காஞ்சி-மெய்கண்டசிவாசாரியராதீனம்

ஸ்ரீலஸ்ரீ

# ஞானப்பிரகாசதேசிகசுவாமிகள்மீது

திருமயிலை - வித்வான்

## சண்முகம்பிள்ளைபாடிய

### கட்டளைக்கலித்துறை.

திருவேயருட்செல்வமேயன்பருன்னுஞ்செழுங்கருணை
யுருவேயென்னுருயிர்க்கோருயிரேயொழியாதபவத்
தொருவேன்புகுந்துநின்றெய்த்தேற்கிரங்கிடெம்முத்தமனே
தெரிவேயெழிற்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (1)

உள்ளன்பிலாருளையெய்தாரரந்தையுறுவரெனிற்
கள்ளம்பயின்றமனச்சிறியேனின்கருணைநெடு
வெள்ளம்படிந்துனமாமலர்ச்சேவடிமேவுவனோ
தெள்ளுணர்வோர்தொழுஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (2)

எல்லாப்பிறப்பும்பிறந்திளைத்தேனென்றினிதுரைத்த
நல்லான்மொழிக்கொருகாட்சிடென்பதேழையிஞ்ஞான்றலதிங்
கொல்லார்சில்லோர்நின்னருட்பார்வையென்னுழையுற்றிடினே
செல்லாதிராவினைஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (3)

ஆகமமாகிநின்றண்ணிப்பவனெம்மனுதிமுத்தன்
ஏகனனேகனெனமெய்ச்சுருதியெடுத்தியம்பப்
பாகமிலாப்பரிசாலலமந்தனன்பாசமலச்
சேகரெய்தாக்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (4)

மேதாவியருமுணர்வருநன்றனைமேவியிறைஞ்
சோதாப்பிறப்பினிலுய்ப்பிறப்பேநல்லதுறனிரு
பாதாரவிந்தம்பணியவிரங்குபரிவினெடுஞ்
சேதாவெனநனிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (5)

கல்லேன்கலதிமுழுமூடனேனுமிக்காசினியில்
வல்லேயடைந்தனனின்னிருதாண்மலர்வஞ்சநெஞ்சப்
பொல்லேனினதடியாரடித்தொண்டுபுரிவதென்றே
செல்லேய்மதிற்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (6)

பொய்கண்டகன்றதிருவெண்ணைமேவுபுனிதசுக
மெய்கண்டநாதன்மரபோங்கவந்தவியன்செல்வமே
கைகண்டநன்மருந்தென்பிறவிக்கடுநோய்க்குனுரை
செய்கண்டதென்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (7)

தோலாநன்றுவினரேத்தும்பரமநின்சூழலடைந்
தேலாதவெம்பிறப்பெய்திநின்றேனுக்கிரங்குகண்டாய்
நாலாமறையொருமாவெனவோங்கநயந்தமருஞ்
சேலார்வயற்கச்சிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (8)

தாவடியோட்டுமெயிற்பரியானைத்தருமுமையாள்
மாவடிக்கீழ்நினையேத்துறுங்கச்சியில்வந்தெனக்கு
மூவடிகேட்டன்றுலகளந்தானுமுன்னிப்புணராச்
சேவடிசூட்டுதிஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (9)

எள்ளினெய்பாலிற்சுவைகனிமாட்டினிரதமென
வுள்ளிநிற்கும்பரிசாம்பிரிவற்றவவ்வுண்மைநெறி
கொள்ளியவென்றனுளத்திற்கொளுத்தெண்குணமலையே
தெள்ளியவன்பர்சொன்ஞானப்ரகாசமெய்த்தேசிகனே. (10

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீமெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.
ஸ்ரீசிவஞானயோகிகள் சேவடிவாழ்க.

உ

சிவமயம்.

காஞ்சீபுரம்.

# ஏகாம்பரநாதர்.

தைவீகவுலா.

இரட்டைப்புலவர்களருளிச்செய்தது

---

இஃது.

ஷெயூர், சண்முகதேசிகர்குமாரர்

## அருணாசலதேசிகர்

முன்னிலையிற்பரிசோதித்து

ம-௱-௱-ஸ்ரீ கொன்றைமாநகரம்

முருகப்பமுதலியார்குமாரர்

## அருணாசலமுதலியா ரவர்களால்.

மட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீமுக௵-கார்த்திகைமீ.

சென்னைசிந்தாத்திரிப்பேட்டைசாமிநாயக்கர்வீதி ச

சிவமயம்.

# தைவிகவுலாவென்பதற்குக்
## காரணம்



மஹாகவிகளாகிய இரட்டைப்புலவர்கள் இதைப் பாடி இராஜாதிராஜனாகியபல்லவமஹாராஜன் முன்னிலையிலேதிருவேகம்பமுடையார்சந்நிதானத்துஅரங்கேற்றத் தொடங்குகையில் காப்பாகச்சொல்லியநேரிசை வெண்பாவில் ஆயிரக்கால்மண்டபமென்றும் விகடசக்ரவிநாயகரென்றும்படிக்க அதைக்கேட்ட அச்சபையிலிருந்தவர்கள் ஆயிரக்கால்மண்டபமும் விகடசக்ரவிநாயகரும் இங்கில்லையே எப்படிசொன்னீர்களென்று கேட்டார்கள் அதற்கவர்கள் நாமும்அறியோம் அவளும்பொய்சொல்லாளென்றார்கள் அதற்கவர்கள் மண்டபத்தையும்வி நாயகரையும்கண்டபின்புஅரங்கேற்றுவோமென்றுபோயினார்கள் பின்பு இரட்டைப்புலவர்களும் தென்றேயம் போயினார்கள். சிலகாலத்திற்குப்பின்பல்லவமஹாராஜன் அவ்வாலயத்திற்கு ஒருகோபுரங்கட்ட ஆரம்பித்து அதைச்சூழ்ந்த காடு மேடுகளைத்திருத்தும் போது ஆயிரக்கால்மண்டபத்தையும் அதனருகில் விகடசக்ரவிநாயகரையுங்கண்டு அப்பிரபந்தத்தின் தைவிகத்தைஅறிந்துஉடனே அவ்விரட்டைப்புலவர்களைத்தருவித்து, முன்னிலும் அதிக விசேஷமாய் அரங்கேற்றுவித்தார். அன்றுமுதலாய்த் தைவிகவுலாவென்று பெயராயிற்று.

இவ்விருவரில் மூத்தவர்முடவர், இளையவர்குருடர் இவர்கள்பாடுகிறபாடலெல்லாம் ஒருவர்பாதியும் மற்றொருவர் பாதியுமாய்ப்பாடுதலால்இரட்டைப்புலவரொன்று சொல்லப்பட்டார்கள். இவர்கள் சுத்த சைவசித்தாந்தர்.

## உலாவினிலக்கணம்.

இளமைப்பருவமுற்ற தலைமகனைக் குலங் குடிப்பிறப்பு மங்கலம்பரம்பரையிவற்றானின்னானென்பதுதோன்றத் தலைமையாய் மாதர்நெருங்கியவீதியிடத்தவன்பவனிவரப் பேதைமுதலிய வேழுபருவப்பெண்களுங் கண்டுதொழ உலாவந்ததாகநேரிசைக்கலிவெண்பாவாற்கூறுவது.



# இதற்குச் சூத்திரம்.



## இலக்கண விளக்கப் பாட்டியல்.

குழமகனைக்கலிவெண்பாக்கொண்
விழைதொல்குடிமுதல்விளங்கவுரைத்தா
கிழைபுனைநல்லாரிவர்மணிமறுகி
மற்றவன்பவனிவரவேழ்பரு
முற்றமானூர்தொழப்போந்ததுலாவாம் (க)
ஐந்துமுதலேழாண்டும்பேதை
எட்டுமுதனான்காண்டும்பெதும்பை
ஆயிரண்டொன்றேயாகுமங்கை
பதினான்காதிபத்தொன்பான்காறு
மெதிர்தருமடந்தைவேலையாறுமரிவை
ஆறுதலையிட்டவிருபதின்மேலோ
ராறுந்தெரிவையெண்ணைந்துபேரிளம்பெண்ணென்
றேழும்பருவத்தோர்க்குரைத்தனரே



முற்றிற்று.



ஏ

கணபதிதுணை.

காஞ்சிபுரம்.

# ஏகாம்பரநாதருலா.

## காப்பு.

### நேரிசைவெண்பா.

சாற்றறிய வாயிரக்கான் மண்டபத்தின் சார்வாக - *
வேற்றமுடனே யினிதிருந்து - போற்றும்
விறல் விகடசக்ரவிநாயகனையேத்துந் - - *
திறல்விகடசக்ராயுதம் - - - - *

### கலிவெண்பா.

நிலம்போற்றும்பைந்துளப நீலப்பொருப்பும்
பொலம்போற்றும் போதிற்பொருப்பு - நலம்போற்று
மேருப்பெர்ருப்பொருதன்வெள்ளிப்பொருப்பிலிரண்
டாரப்பொருப்புடைய வன்னமுடன் - சேர

விருந்துமனமகிழ்வுற் றெப்போதுமின்பம் - *
பொருந்தியுறைகின்றபோதிற் - கரந்தையினி

தந்துமுடியோனுடனே யின்பநகையாடிவளைக்
கரந்தளிணைகொண்டு திருக்கண்புதைப்ப - வாய்ந்த

படியும்விசும்பும் பரிதிமதிகாணு - - *
தடையுமிடையிருளேயாகி - - நெடிதூழிக்
காலஞ்சிறிதுபொழிதிற்கழிதலாற் - *
சீலமுனிவர்க்குந்தேவர்கருஞ் - - சால

மறையவர்க்கும்வேதம்வகுத்ததொழிலெல்லாங் *
குறைவுபட்டதென்றிறையுட்கொண்டு - செறியளக

வோவியமேநின்னூலுலகநெறிமுறைமை - *
யாவுங்குறைவுபட்டதீங்கதற்கு - மேவியநல்

வேதாகமத்தில்விதித்தபெரும்பூசைதனைப் - *
போதார்குழலாய்புரிகென்ன வீதெமக்கு

வாய்த்ததெனவிரும்பிவானோராநஞ்சுண்டு - *
காத்தபெருமான்கழலிறைஞ்சி - யேத்தி

மட்டமாதுநின்னைவழிபடுதற்கான - - *
விட்டமாவதேதருள்செய்கென்ன - விடையோனுந்

தென்பாலதானதிசையிற்றிராவிசு - - *
நன்பாலித்தண்டகநன்னாட்டகத்து - முன்பாக

வோதுதிருநகரியோரேழினுஞ்சிறந்த - *
வாதிநகர்காஞ்சியநகரிற் - - போதநல

மன்னிவளர்வதொருமாவுண்டதனிழற்கிழ்க் - *
கன்னியெமையுனக்குக்காணலாஞ் சொன்னபடி

யாகமபூசைபுரியவினிதவவிட்டுப் - ❊
போகவெனவமரர்போற்றிசைப்ப - வேகிப்

பொருப்பனையனேவலொடு போந்துபலகோடித் ❊
திருத்தகுமாதருடன்சேர - - விருப்புட்னே

தென்றிசையிற்சென்று திருவாய்மலர்ந்தவுயர் ❊
நன்றுதிகழ்காஞ்சி நகரெய்தி - வென்றியிப

மொன்றுகுறுமுயலுக் கோடுமிடம்பார்த்து ❊
நின்றுவிடுங்காஞ்சி நிழல்பார்த்துச்-சென்றடைந்தோர்

தாம்பிறவைக்காணலாந் தம்மையவர்காணும ❊
லாம்பரிசுநல்கும கம்ப ார்த்துக் காம்பொன்றின்

மூன்றுமுளரி முகிழ்க்குந்தடம்பார்த்துத் - ❊
தோன்றுமலர்த்திபச் சுடர்பார்த்துத் தான்ற

ணிட்த்துநிழுனேக்கி யாவருங்காணப் - ❊
படுத்துமொருகிணறு பார்த்துக் -குடக்கோடிக்

காணவரிதாய்க் கரக்குநதிபார்த்தமரர் - ❊
பேணுலகத்துய்க்கும் பிலம்பார்த்துக் - காணரிய

செம்பொனிறநல்குஞ் சிலைபார்த்துத்திண்காரி ❊
வெம்பரியூர்செண்டு வெளிபார்த்துக் - கொம்பிற்

கடிக்கமலப்போதுங் கழுநீருஞ்சேரப் - ❊
படைக்குமொருபாடலமும் பார்த்து-நடுப்புகுந்தோ

தோற்றங்குரங்காக்குந்தொல்லையிடம்பார்த்ததனை ※
மாற்றுங்கட்வுண்மடுப்பார்த்துக் கூற்று

றிறவாவிடம்பார்த் திறந்தவர்பின்வந்து - ※
பிறவாவிடம்பார்த்தபின்னர் - செறிதரங்கக்

கம்பைநதியின் கரையணுகிக்காண்டகைய (ரான்
பைம்பொழில்சூழெம்மருங்கும்பார்த்தருளி- யெம்பி

யர்மாதரவோ டிருப்போமெனச்சொன்ன - ※
தேமாவடிநிழலைச் சேர்ந்தருளிக் கோமானை

நாமினிதுபூசிக்க நல்லவிட மீதென்று ※
பூமருவுதெய்வப்புனலாடித் - தாமாக

கம்பைமணலைக் குவித்துக்கசிந்துள்ள - ※
மெம்பெருமாட்டி யினிதிறைஞ்சித்- தம்பழைய

சேடியர்கணிற்பத் திருச்சூடகக்கையாற் - ※
றோட்விழ்பூக்கொய்து தொடுத்தணிந்து கூட

விரவுந்திருவுருவில் வெண்ணீறுநெஞ்சிற் ※
றிருவஞ்செழுத்துந்திகழ - வுரிமையுக்

ணந்தமில்பூசையின் மேலாளுடையநாயகிக்குச் ※
சிந்தையொருப்படவே செலலுநா ளிந்துநுத

லாதிக்குலமடந்தை யன்புடைமைமுன்புபோற் ※
சூதத்திருநிழலோன் சோதிப்ப மோதிக்

கரைபொருதுகம்பைநதி கல்பாந்தந்தன்னில் - *
விரிகடல்போற்றரங்கம் வீசி - யிருசுடரும்

விண்ணும்பொலன் சக்ர வெற்புங்குலகிரியு - *
மண்ணும்புதைய வரப்பண்ணி - யெண்ணிறந்த

வாரிடத்துமெவ்விடத்து மெப்போதுமுள்ளபிரா *
னேரிடத்துத்தாமு மொளித்திருப்பப் - பாரிடமு

மேனையமர்நாடு மேகோதகமாக - - *
வானபெரும்பெருக்குக் கஞ்சாதே - வானவர்கோன்

செச்சைநிகருடம்பிற் செம்பாதியாகியதன் - *
பச்சையுடம்பருமை பாராதே - யிச்சையுடன்

றேசுதரும்பழைய திவ்யாகமப்படியே - *
பூசைதலையொழிந்து போகாதே மாசிலா

வன்புடைமைதன்னை யகன்றுலரன்மேனி - *
யென்படுமோவென்பதனையெண்ணியோ தன்பழைய

பெண்மையோவன்போ பிறப்போபெருங்காதற் *
றிண்மையோகற்போ தெரிகிலோ - முண்மை

மறைபடைத்தமேனி வளையான்முலையாற் - *
குறிபடுத்திமார்பு குழைய - நறைபடைத்த

தாழ்ந்தபுரிகுழலா டாளுகவம்மணன்மேல் - *
வீழ்ந்துதழுவ வெளிப்பட்டோன் - சூழ்ந்தமரா

பரந்துவளர்கட்வுட் ப்ச்சைக்குரும்பை - ※
யிரண்டுகுறியிட்ட விடத்தே - திருந்துமுடிக்

காணிப்பிறைநிலவோகங் காநதிப்புனலோ - ※
வேணிப்புரையிருபால் வீழ்ந்ததெனச் - சேணிற்

பனித்தாரகையின் பரிசன்னமுத்தின் - ※
றனித்தாழ்வடம்விளங்கச் சாத்திக் - குனிப்பிற்

றிருந்துமபினயமுந் தெய்வத்துடியு - - ※
மிருங்கனலும்வாழு மிட்த்தே - பொருத்தப்

பிறந்தவிளம்பரிதிப் பேரழகுமக்கச் - ※
சிறந்தகட்கஞ் செறித்து - - நுறுங்கப்

பிசைந்துபிசைந்துண்ணவொரு பிள்ளையறுத்தாக்க ※
விசைந்துபசிதோன்று மிடத்தே - விசும்பின்

முதிருமிருளை முனிபத்மராகக் - - ※
கதிருதரபந்தனமுங் கட்டி - - மதுரைப்

புரவிதிகழிடத்தே பொற்பதிம்ராகத் - ※
திருவுடையாடை திருத்தி - - பரதவிதக்

குஞ்சிப்புநல்லநிலைக் கூத்துந்திகழிடத்தே - ※
செஞ்சித்ரரத்னச் சிலம்பணிந்து - துஞ்சிச்

செலவுற்றவானோர் சிரந்தொடுக்குமாலை - ※
யிலகிக்கிடக்கு மிடத்தே - - - குலவு

மதுமிக்ககல்லார மாலையுடனே - - *
யிதழித்திருமாலை யிட்டு - - மதில்பொருத

தம்பொற்சிலையைத் தலைக்கொண்டனனென்னச் - *
செம்பொற்றிருவா சிகைசேர்த்து - - விம்ப

விரவியிடைதா னிலங்குவதேயென்னப் - *
பரவுமணிக்கண்ணாடி பார்த்துச் - சுருதியினுன்

மூவாதபேரன்பின் மூவர்முதலிகளுந் - *
தேவாரஞ்செய்த திருப்பாட்டும் - பாவனையாற்

போதவூர்கண்ணீர் புளகத்துடனணிந்த - *
வாதவூராளிதிரு வாசகமுந் - - தீதகல

வேட்டென்றெழுதா விருபிறப்போர் கற்கத்தான் *
பாட்டுண்டநாலு பழங்கவியும் - கேட்டருளி

யைங்கைப்பவளநிறத் தானைப்பெருமானுஞ் - *
செங்கைச்சுடர்வடிவேற் சேவகனு - மெங்கு
நிறைபூதஞ்சூழ நிலமெல்லாங்காப்ப - - *
மறைஞாளியேறி வருவானு - நிறையருளாற்

றுண்ணெனத்தேவர்க்குச் சுதைபகுந்தமோகினியாம்
பெண்ணிடத்தில்வந்து பிறந்தோனும் - பண்ணுமக

மங்கும்படிக்கழற்கண் வாய்ந்திலங்குந் தம்முடைய
திங்கணுதல்வேர்விற் செனித்தோனுந் - துங்கமுடி

கொண்டகடவுட் குளிர்கொன்றைத்தாருமுடித் - *
துண்டபரிகலத்தி லுண்டோனுந் - தண்டமிழான்

மண்புகழப்பாடி மறையூரிலாண்பனையைப் - *
பெண்பனையாக்கிய பிள்ளையுந் - திண்பிடித்துப்

பாழியமணரிடும் பாரச்சிலையுடனே - - *
யாழிதனின்மிதந்த வன்பனுஞ் - சூழுமிருட்

பாதியிரவிற் பரவைக்குஞ்சங்கிலிக்குந் - *
தூதுநடப்பித்த தோழனுந் - - தீதில்

வழுக்கில்பெருந்துறையில் வாழ்வித்தகோலங் - *
கழுக்குன்றிற்கண்ட கவியும் - வழுத்தினர்க்குட்

போதவினியதொரு பொன்வண்ணத்தந்தாதி - *
யாதியுலாவோ டமைத்தோனுஞ் - சோதிமண

மன்றினருகுமலர்த்துழாய் நாறுமிடங் - *
கொன்றைகமழ்வித்த கொற்றவனு - மென்றும்

புடைமருவுதன்னிழலிற் போகாதபேயை - *
யிடைமருதிலிட்ட விறையு - - மடையத்

துயர்கடந்ததொண்டத் தொகையுதனிலேனைச் *
செயற்சிறந்ததொண்டத் திரளுங் - கயிலைதனிற்

றந்தாள்படாமற் றலையானடந்துபோ - *
யந்தாதியாற்புகழ்ந்த வம்மையு - -மிந்தநிலங்

கோட்டிவளைத்தெடுத்துக் கூட்டிக்குலைத்தடுக்கிக் *
காட்டவல்லபூத கணவரு - - மீட்டுநல

மெண்ணுமொருநாற்பத் தெண்ணாயிரவரொனும் *
புண்ணியவேட்ப புனிதரு - - நண்ணரிய

வோராயிரத்துத் தொளாயிரரொன்றாழிமுதற் - *
பேராநிமந்தப் பெருமையருஞ் - சேர

வுரியவிதிமுறையோ டுள்ளமுருகிப் - *
பொருவரியவன்புடனே போதச் - - சுரரைத்

திருவாசலினந்தி செங்கைப்பிரம்பா - - *
னிரையாகவெங்கு நிறுத்தி - - வருவார்

கழற்சேவடிபணிந்து கண்களிப்பமுன்னே - *
யெழச்சேவியுநீங்க ளென்ன - - முழுக்க

விருப்பதுவும்வெள்ளிமலை யென்னுமற்செம்பொற் *
பொருப்பினுமேறினர் போல - - விருப்பால்

வடித்தசுடர்வேற்சம்பன் வாழ்மல்லிநாதன் - *
கொடுத்ததிருத்தேர்மேற் கொண்டு - முடித்தநதி

யாடும்விசையிலலை யெழுந்துதன்மீதி - *
னீடும்வகைசுழித்து நின்றதெனக் - - கூட

விருகதிரஞ்ச வெறிக்குநிலாவி - - *
லொருதனிவெண்குடை யோங்க - விருபாலும்

கங்கைநதியிற் கரைபுரண்டசீகரம்போன் - *
மங்கையர்கள்வெண்சா மரையிரட்ட - வெங்களையு

மிட்டாலோரூணுக வென்றுரகமாடுவபோற் - *
பட்டாலவட்டம் பணிமாற - - விட்ட

வெருதுமராமரமு மெவ்வேழுஞ்சாயப் - *
பொருதவிடைக்கொடிமுன் போத - வருவதொரு

மேருகிரிதொடரும் வெள்ளிக்கிரியென்ன - *
மூரிவிடையெம்பிரான் முன்போதப் - பேரிகை

சல்லிகைமத்தளி தண்ணுமைபண்ணமை - *
பல்லியமெங்கும் பரந்தார்ப்ப - வல்லபடி

வாணன்குடமுழா வாசிப்பமாமதுர - - *
வீணையுததிமிகவுயிர்ப்பப் - - பேணும்

பரிசிற்றமதுசெவிப் பாண்சேரிபெற்ற - *
விருவரிசைபாடியேத்தச் - - சுருதியெழு

மின்னரம்பேழு மிசைததும்பவெம்மருங்கும் - *
கின்னரர்தங்கள் கிளைபாட - - முன்னரிடு

பேரிகையோசை பிறங்கமிகத்தாரையுடன் - *
மூரிவலம்புரி முன்முழங்க - - வாரங்

குளித்தவதிபாரக் கொங்கைத்தழும்பும் - *
வளைத்தழும்பும்பெற்றபிரான் வருதான், கிளைத்தசடை

யேகாம்பரநாதன் வந்தானிகல்விடையின் - ❊
பாகாம்பழைய பரன்வந்தான் - - மாகத்

தெழுமிரண்டுபேரொளியு மெப்போதுமஞ்சி - ❊
வழிவிலங்குமுருடையான் வந்தான் - சுழிகொண்

டலையும்பகீரதிநின் ரூர்க்கின்றசென்னி - ❊
மலையன்றிருமருகன் வந்தான் - - கலைதேர்

பரிசிலிருவர்க்குப் பகல்விளக்குங்கண்ணும் - ❊
வரிசையுடனளித்தான் வந்தா - னொருவயிற்றில்

வாராவுடம்புடையான் வந்தானெனமறுகிற் - ❊
சீரார்திருச்சின்னஞ் சேவிப்ப - வேரிமிகத்

தேங்குமலரோன் சிறையோதிமமீது - - ❊
மோங்குதிருமா லுவணத்துந் - தாங்குபடை

வாசவன்வெள்ளை மதவாரணமீது - - ❊
மீசர்பதினொருவ ரேறிடத்துந் - தேசுதரு

மாறிருவரொவ்வே ழடர்புரவித்தேர்மீதும் - ❊
வேறிருவரொண்மர் விமானத்துஞ் - சீறியடங்

கூற்றுக்கட்வுள் கொடியகடாமீதும் - - ❊
போற்றுமளகேசன் புஷ்பகத்தும் - 'காற்றுறவாம்

வேகமிகுதழலோன் வெற்றித்தகர்மீதும் - ❊
வாகைவருணன் மகரத்து - - மாகமத்தி

னித்தெரியு நிருதிநரவாகனத்துங் - - *
காதுபவனன் கலைமீதுஞ் - சோதிநிகழ்

சிதமதிமுத்தின் றேர்மீதுமோரேழு - - *
வேதமுனிவர் விமானத்தும் - - போதவுயர்

விஞ்சையர்சாரணர் சித்தர்வியன்கருடர் - *
செஞ்சுடிகைநாகருடன் சேவிப்ப - மஞ்சுகவித்

தாடுங்கொடிக ளருக்கன்பரிதடுக்கு - - *
மாடநெடிய மணிமறுகி - - னீட்டருளாற்

பொன்னனகுடகக்கைப் போதன்னமும்புனலு - *
மெந்நாளுமெவ்வுயிர்க்கு மீந்தருளி - மன்னு

மறச்சாலைப்பெண்டி ரருகுவரக்கங்கை - *
புறக்காவற் பெண்டிருடன்போதச் - சிறக்கும்

வரையரமாதரும் வாராகரத்திற் - - *
றிருவுடன்வந்த திராளுங் - - திருவுங்

கலையையகலாத கன்னிமட்மானு - - *
மலையையகலா மயிலுங் - - கலைமகளும்

பொன்னிறுலகாளும் பூவையருமாநதிக
ளென்னுமட்வா ரெழுவரு - - மன்னமயில்

சிறும்விடைகளிறு சேனங்கடாயாளி - - *
யேறுமட்வா ரெழுவருங் - - சூழுங்

குலநாகமாதர் குழாமும்பணிந்து - - ※
பொலமாடவீதி புகுத - - நிலமாதர்

தாணுநுதல்விழிமேற் றூவடிபோகத்திரண்ட - ※
பாணமலரோன் படையென்னப் - பூணரவஞ்

சூடுந்தரங்கச் சுரநதியிற்றோய்ந்துவிளை - ※
யாடும்படிதிரண்ட வன்னமெனப் - பாடலினாற்

றம்பெருமைபாடுந் தமிழோன்றனக்களித்த - ※
வெம்பகலிற்சேர்ந்த விளக்கென்ன - நம்பருறை

சூதத்தெழுந்த துணர்ப்பல்லவப்படலங் - ※
கோதத்திரண்ட குயிலென்னத் - - தீதற்ற

வெந்தைபெருமான்கரத்தி னேந்துமிளமான்கண்டு
வந்துதிரண்டசில மானென்னச் - செந்தமிழின்

பாட்டுக்குழல்வோன் பசும்பாதியின்வார்த்தை - ※
கேட்டுத்திரண்ட கிளியென்னக் - கூட்டிலார்

தாழ்ந்தசடைமுடியோன் றன்னுட்டம்பைக்காமொன்று
வாழ்ந்துதிரண்ட மயிலென்னச் - சூழ்ந்தரன்பா

னன்புதியதூதுக்கு நான்செல்வேனென்செல்வேனென்மே
னெனபனபோன்மென்குழல்வண்டெங்குமெழ-நின்பு

லெங்கட்டுழம்பணிந்தா லென்செய்யுமென்பனபோற்
செங்கைவளைகள் சிறந்தார்ப்பச் - சங்கரன்மேற்

றள்ளவரியகுறித் தாமுமிட்த்தாயங் - - *
கொள்வனபோற்கொங்கைக் குவட்டைசய - வுள்ளமகிழ்

செம்பதுமைகேள்வன் றிருமல்லிநாதனுயர் - *
சம்புபதிநல்குந் தட்டந்தேர்போல் - கம்பரே

யித்தேருங்கண்டாலோ வென்பனபோலல்குலெனு *
மத்தேரின்மேகலைக ளார்ப்பரிப்ப - வித்தெருவிற

சிற்றவிடையோனைச் சேவிக்கப்பெற்றபதம் - *
போற்றுவபோற்பொன்னூ புரஞ்சிலம்ப - மேற்ககன

கூடம்வெளியடைத்த கோபுரத்துங்குன்றனைய - *
மாடநெடுமத்த வாரணத்து - - மோடுகதிர்

விஞ்சுகொடிதடுக்கு மேனிலாமுற்றத்து (சமரிற
மஞ்சுதவழ்கங்கைகொண்டான்மண்டபத்தும் - வெஞ்

றத்துபரிபல்லவன் சம்புகுலப்பெருமான் - *
வைத்ததுலாபார மண்டபத்துஞ் - சித்ரமணி

குளிகையின்மீதுஞ் சுதைநிலாமுற்றத்து - *
மாளிகையின்மீது மறுகிட்த்தும் - - யாளி

செறியுமணித்தெற்றியினுஞ் செய்குன்றிடத்து - *
நிறையவெவரு நெருங்க - - விறையவனை

வந்துவணங்கி மதிக்கொழுநதுஞ்செஞ்சடையுஞ் *
சிந்தைகவர்கண்மலருஞ் செவ்வாயு - மெந்தைபிரான்

றெய்வப்புரிநூலுந் திண்டோளுமார்பகமுஞ் - ※
சைவத்திருவனா தாழ்வடமு - மெய்வழியக்

கொண்டதிருநீறுங் குழைதுரந்தசெங்கழுநீர் - ※
மண்டுதிருக்கொன்றை மாலையு - மெண்டிசையுந்

தாவில்சுருதித் தமருகமுந்தம்முடைய - ※
தேவியறியுந் திருக்கூத்தும் - - யாவையுந்த

முள்ளத்தேகொள்ளா வுருகாப்பெருகின்ப - ※
வெள்ளத்தேவீழா மிகவுயிராத் - தள்ளியுறை

விட்டவாள்போல்விழியிர் மென்சுணங்கின்பொன்மு
பட்டவாபாரீர் பசப்பென்பார் - கட்டழகன் (லைமேற்

கோதையகன்மார்பங் குழைவிக்கமாட்டாதா - ※
லேதுபடிலெ னிவையென்பார் - - போத

நெருக்கியரிதிட்ட நினைவிளைகளெல்லா - ※
மிருக்கையரிதுகரத் தென்பார் - நிருத்தன்

பரிக்குந்தழும்பு படுத்தாவளைக - - ※
ளிருக்கிலென்போகிலெ னென்பார் - திருக்கண்கள்

வையார்நம்மேலென்பார் வைப்பாரவர்கருணை - ※
மெய்யானவளொருத்தி மேலென்பா - ரையோ

வருள்படைக்கவேண்டியருமங்ககண்ட - ※
மிருள்படைத்ததேனிங்ஙனமென்பா-ரிருள்படைத்த

நின்றுகில்வானோ னெனுஞ்சாதியத்தனையும் - *
பொன்றுதோவென்று புகலுவார் - வென்றிமத

னேவானோமேலென்பா ரேவிலினின்னமுந்தான் *
வேவானோபோய்த்தோ விழியென்பார்- மேவனிலஞ்

செல்லாதோமீதென்பார் சென்றால்வரவிடுமோ *
நல்லார்திருக்காப்பு நாணென்பார் - புல்லாத

இருக்கொன்றைமாலைபெறிற் சிந்தைகுடியேறி *
யிருக்கின்றமாலொழியு மென்பா - ரொருத்திகுறி

யிட்டதிவர்மார்புபிற ரெய்துவதின்மாலுழன்று - *
பட்டதமையும் படவென்பார் - மட்டவிழு

மம்பதுமப்போதி னயன்மாலறியாத - - *
வும்பரறியா வொருகிரியைச் - செம்பவளப்

பாதியுடம்பு பசப்பித்தாள்பைங்களபக் - *
கோதைமுலையாற் குழைவித்தா - ளாதலா

லுண்மைதனக்கிந்த வுமையாள்பிறந்ததற்பின் *
பெண்மைதனக்கேற்றம் பெரிதென்பார் பெண்மை

குறையாளிவளன்றோ வென்பார்மற்றிங்ஙன் - *
மறுகிலெதிர்வந்த மாத - - ரறுசமய

அண்டருக்குந்தாயா ரறச்சாலையிப்படிபெற் - *
றுண்டிருக்குமூதா ருடையானே - கொண்டவிருப்

காவிவிழியொருத்தி கட்டிக்குறியிட்டு - ❊
மாவடியில்வைத்த வயிரமே - - தேவிமுகஞ்

செவ்விபெருகத் திருச்சூட்கக்கையாற் - ❊
றவ்விபிடித்துச் சமைத்தன்ன - மெவ்வுயிர்க்கு

மர்ரச்சொரிதருநெ லாட்டைக்கிருநாழி - ❊
சேரப்படியளக்குஞ் சீமானே - மர்புபோற்

கண்ணுஞ்சிலர்படைத்த காணியோகாமவேள் ❊
பண்ணுந்துயர்தீரப் பார்த்தருளீர் - வெண்ணிலவோ

டுருமிளந்தென்ற லீராமலும்முடைய - ❊
வாரம்பசிதணித்தா லாகாதோ - - வாசவுளம்

வேவக்கறங்கும் விடைமணியையும்முடைய - ❊
சேவுக்கினிதளித்தாற் றீதாமோ - மேவியவிக்

கொக்கினிறகுட்னே கூவுங்குயிற்சிறகை - ❊
யொக்கவணிய வுமக்கொண்ணுதோ - மிக்க

வறஞ்செய்யுமூருடையீ ராகாதுகாணு - ❊
மறஞ்செய்யவென்று மயங்கா - நிறந்திகழும்

விண்டகுவளைக்கும் விள்ளாததாமரைக்குந் (யீர்
தண்டரளமும்பொன்னுஞ் சாத்துவா- ரொண்டொடி

பாகம்பிரியாத பச்சைமயில்காணுமல் - ❊
ஏகம்பர்பார்த்தா ரெனமையென்பா - ராகமதன்

காதன்மலர்சொரிந்து கைசலிப்பவிவ்வண்ண - ※
மாதர்பலர்மயங்க மற்றொருத்தி - பேதை

# குழாங்கள் முற்றியது.



## பேதை.

திரையுதவுபேரமுதின் சிற்றரும்புமுற்றி - ※
வருமுகையதானதொரு வல்லி - சுருதியளி

யூதமலரா வொருதாமரைமுகிளங் - - ※
காதலுதவாத காமசரம் - - - வேதத்

துறையானகலா துறைகின்றசூதங் - - ※
குழையாததென்றற் கொழுந்து - பழைதாகக்

கம்பருறையுங் கடவுளிளஞ்சூதத்தின் - ※
கொம்பிலுறையாக் குயிற்பிள்ளை - யின்ப

வலையாரமுதத்தி னரம்பவித்து - - ※
தொலையாதகாமத்தின் றோற்ற - மூலகிற்

சிறந்தபிரானல்லாத தேவர்களைப்போல - ※
விறந்துபிறக்கு மெயிற்று - ணிறைந்துமைப்போன்
முத்தாரம்பூண முலையெனக்குச்சூட்டுமென்று - ※
கைத்தாயர்முன்னின்று கண்பிசைவாள் - சுத்த
வியல்புதனையொழிய வேதும்பிறழாக் ※
கயலையனையவிரு கண்ணாள் - - புயல்வரினு
மாட்டாததோகையதன் பிஞ்சம்போற்கூடுவதுங் ※
கூடாதுமான குழலினா - - ணீடிமிக
வோங்கிவளர்த்ன் னுரியபரிணாமமெல்லாந் - ※
தாங்கியவித்தன்ன தனத்தினா - ணீங்காத
வேகம்பமென்னீ ரிமவான்மகட்முவ - ※
வாகங்குழைந்த வரனென்னீர் - மாகம்பை
யாறென்னீரம்மை யறச்சாலையென்னீர்நம் - ※
பேறென்னீரென்றுதமைப் பேசுவித்த - வாறெல்லாம்
பாவைக்குரைத்தந்தப் பாவைபகராததெல்லாம் ※
பூவைக்கழுது புகலுவான் - - மேவுபல
தீவிற்பிறந்த செழும்மணியுந்தம்மூரின் - ※
வாவிபிறந்த மணிமுத்துங் - - காவிவிழி
யம்பைமுதனா ளரனா ரைப்பூசித்த - - ※
கம்பைமணலுங் கலந்தெடுத்துக் - கொம்பனையா

ளொண்டொடிமாதருட்னேகாஞ்சிவப்ப - ✻
வண்டலிழைத்து மகிழ்போதிற் - பண்டொருநா

டெண்டிரையிற்பெற்ற திருவமுதச்செவ்வாயும் ✻
பண்டுகிராற்கொண்ட பரிகலமு - மண்டுமெரி

தாழுஞ்சினத்துழுவை தான்கொடுத்தவுட்சாத்தும் ✻
வேழங்கொடுத்தவொரு மேற்சாத்துஞ் - சூழ்பனியி

னேங்கல்கொடுத்த வொருபாகமுமுடையார் ✻
தாங்குமணிமறுகு சாருதலு - மாங்கவளும

வண்டறனையொழிந்து வந்தணுகிச்செந்துவர்வா ✻
யொண்டொடிமாதருட னிறைஞ்சி - யண்டருறை

நாகஞ்சிலையாக நண்ணார்புரமெரித்த - ✻
ஏகம்பர்தம்பெருமை யெண்ணுதே - கோகநக

வுந்திக்கனையோ னொருபாகமுஞ்சடையு - ✻
மந்தப்புரமென் றறியாதே - - யிந்தப்

பெருத்தமணக்கோலப் பிள்ளையுடன்றேர்மே ✻
லிருத்துமெனக்கொடுபோ யென்ன-வொருத்தியிவர்

பூணத்தவரிருவர் பொன்முடியுஞ்சேவடியுங் ✻
காணக்கிடையாத கம்பர்காண் - வாணுதலாய்

பாயவுலகம் பதினலையும்பரந்தொன் - ✻
றூயபெருமான ருகிருக்கத் - தோயுமகிழ்

பச்சைக்கிரியாற் பவளத்திருமார்பி - ※
லச்சிட்டவர்க்கொழிந்துண் டாகுமோ - வச்சமுடன்

மீதெடுத்தகம்பை மிகுபெருக்குக்கஞ்சாத ※
மாதவத்தாட்கன்றியிது வாய்க்குமோ - மூதண்ட

மெல்லாம்பெறநெல் லிருநாழிபால்வளர்க்க ※
வல்லாடனக்கன்றி வாய்க்குமோ - சொல்லாய்

குறைவின்மடமயிலே கூசாதேயாமே - ※
யிறைவருகேறி யிருப்போ - மறவிதனை

யென்னவிளையா ளிருகண்கண்முத்தரும்ப ※
வன்னையர்தங்கையா லணைத்தாற்றி - மின்னேபோ

தென்றுபகர்வதன்மு னேகம்பர்தேருட்னே ※
தென்றலந்தேருந் தெரிவித்து - - வென்றி

மதன்கைவரிசாபம் வாங்காமல்வாசம் - ※
பொதிந்தகணைபூட்டாமற் போந்தான் பெதும்பை



# பெதும்பை.



யிவண்மற்றொருத்தி யெவர்க்குந்தெரியாப் - ※
பவளத்தமுது தரும்பாவை - - தவளத்

திருப்பாற்கடற்பிறந்து செந்தாமரைமே - ❋
லிருப்பார்க்குநேரோ யிளையாள் - விருப்புடனே

யார்க்குமளிக ளவிழ்பதமீதென்று - ❋
பார்க்குமுகைபோலும் பருவத்தா - ளாக்கமுடன்

போராக்குமாமதனன் போதும்பவனிக்குத் ❋
தேராக்கவெண்ணுஞ் செழுந்தென்றல் வேரிநறும்

போதுபுனைவதற்கும் பூணாரம்பூண்பதற்கு - ❋
மாதரவுவைக்கு மளவினு - - ளாதிமதன்

பேறுமட்நாணும் பெண்மைப்பெருமிதமும் ❋
வீறுஞ்சிறிதரும்பு மெய்யினள் - சீறியெரி

யூட்டமதின்மூன் றழிநிகழ்ந்தவண்ணம்போற் ❋
கூட்டிமுடிக்குங் குழலினள் - வேட்டவர்தம்

புந்திகவர்வஞ்சனையும் பொய்யுங்கொலையுமிட்ம் ❋
வந்துவந்துயார்க்கு மதர்விழியாண் - மைந்த

ருகமையழகோடே யுள்ளரும்புங்கஞ்ச - ❋
முகையினமுகைபோலு முலையா - ளிகுளையர்தம

மீளாதகாதல் விழைவுரைக்கும்போததனைக் ❋
கேளாதவர்போலக் கேட்டிருப்பாள் - கேளாய

மாதருமானு மயிலும்பசுங்கிளியு - - ❋
மோதிமமுஞ் சூழவுடன்போத - மாதவிப்பூம

பந்தரிட்டநீழற் பளிக்குச்சிலாதனத்து - *
வந்திருப்பவெற்றி மட்டமாத - - ருந்திக்

குவளைமலரிருகண் (* கொங்கைக்குறி) யிட்ட *
பவளமலையினையும் பாடித் - - தவளநகை

யன்னையறஞ்செய்த வறச்சாலையும்பாடிக் - *
கன்னியினிதாடு கழுங்கென்னக் - கன்னிதனக்

காழிதருமுத்தமா காதென்றவ்வூரி - - *
லேழுநதிமுத்த மினிதெடுத்துச் - சூழ்தேரிற்

றட்டுநிகர்லகுற் சங்கிலிபாற்றூதுதமை - *
விட்டவர்பாற்பெற்ற விழியொன்றும் வட்டித்துப்

பாதமலர்துதித்த பட்டவாணன்றனக்குக் - *
காதலுடனளித்த கையிரண்டும் - - பூதத்

திகலொழியநின்று மிருந்துமகிடந்து - *
முகிலுறையுந்தானங்கண் மூன்று - நகிலா

விலங்குவரிவளையா லிவ்விரண்டாய்த்தம்மே *
னலங்கொட்டூழும்பொரு நான்குந் . - துலங்க

வுமைக்கமைத்தபொற் கோயி லூழிமுதனை *
ளமைத்தனகோணங்க ளைந்து - மமைத்தோ

---

(* கொங்கைக்குறி-கூ)விளங்காய்.

ளிளைக்குமருங்கு லிருநாழிநெற்கொண் - *
டளிக்குஞ்சமயங் களாறுங் - - குளிப்பார்

செறியும்பவக்கடலைச் சிந்தித்திளையா - *
லெறியும்புனிதந்தி யேழும் - - பிறைநுதலா

ளன்பொடுபாடிக்கழங்கை யாடுகின்றவெல்லைக்க - *
ணென்பொருபெண்ணென வெழினகரு - மன்பனுள

மன்றெருத்திக்குண்மை யறிவித்துத்தாமகிழ்க்கீழ்ச்-
சென்றெளித்துநின்ற திருநகருஞ் - சென்று

முதுககனகோளத்து முற்பட்டகூத்தின் - *
பதுமமலர்ந்த பதியுங் - - கதிராழிக்

காவித்திருநிறத்தோன் கைகுவித்துநின்றெதிரே - *
சேவித்துநிற்குந் திருப்கதியுந் - - தாவுபரி

மல்லற்றொண்டைத்தொண்டை மான்கடவுந்தேனாயொ
முல்லைக்கொடித்தடுத்த மூதூரு -நெல்விலைக்குச் (ரு

சற்றளந்தநாட்புகலிச் சைவப்புல்வனுக்குக் - *
கொற்றளந்தமாடக் கொடிநகரும் - பெற்றதொரு

தாயுமிலையென்னுந் தமதுகுறையையொரு - *
தூயகழைதவிர்த்த தொன்னகரும் - வாய்கலச

மாட்டியினிமை யறிந்தவூனெச்சிறனை - *
யூட்டியவேட்டுறைபதியுஞ் - - நாட்டிலுள

வெண்ணிலமணமொலா மேறக்கமூவிலொரு - *
பெண்ணையியலறிந்த பேரூரும் - விண்ணவர்தஞ்

சாதலுறைநாளுஞ் சாகாதபுள்ளிரண்டுந் - *
தீதகலவாழுந் திருமலையுந் - தூதுதமை

யோட்டுந்திருநாவ லூராற்கிரந்திட்டுப் - *
பாட்டுண்டவூரும் படைத்துடையோன் - சூட்டு

வெருவும்வரியரவும் வெண்டலையுமாறு - *
மருவுமுடிக்கம்ப வாண - ஞெருபுத்தன்

செங்கலெறிக்குச் சிவலோகமீந்தபிரான் - *
றுங்கமணிமறுகு தோன்றுதலும் - பைங்கொடியு

மாடுங்கமூங்குதவிர்த் தாயத்துடன்கனக - *
மாடநெடுவீதி வந்தணுகிக் - - கூடப்

பணிந்துபரவிப் பகுவாயரவ - - *
மணிந்ததிருத்திருந்தோ ளழகு - மணங்கமழும்

பொன்னுன்மார்பும் புனையும்புரிநூலு - *
மன்னுனகாதல் வரநோக்கி - - மின்னுந்

திருந்திழையீரிந்தத் திருமேனிதன்னி - *
லிருந்ததமூம்பென்ன தமூம்பென்றுள் புரிந்தவரு

மின்னேகிளியே விளங்கிழையேயன்னமே - *
யன்னேயிதனை யறியாயோ - தன்னருளாற்

பாராட்டிவையம் பதிஞலையும்வளர்க்கும் - ✻
போாட்டிமாதவத்தின் பேறுகாண் - வாரிதிசூழ்

வையமுழுதறிய வாங்குஞ்சிலேமார - - ✻
னெய்யுங்கணைபடைத்த வேற்றங்காண் டுய்யகுழற்

பண்பிறந்தசொல்லாய் பலசொல்லியேனிந்தப் ✻
பெண்பிறந்தார்க்கெல்லாம் பெருமைகாண்-மண்பரவி

யேத்துமிறையா ளிருகொங்கையால்வளையாற் ✻
சாத்தியகோலத் தழும்புகாண் - பார்த்தருளா

பென்னுமளவி லிலங்கு மனத்துட்காதல் - ✻
பொன்னனையமெய்யிற் புறம்பொசியக் கன்னிவெயி

நீண்டமலர்வதொரு செந்தாமரைமுகைபோற் (னுங்
காண்டகையசெவ்விக் கவின்படைத்தாண் - மீண்டர

கோலமயிலைக் குறிப்பாற்கடைக்கணித்தாற் - ✻
போலமுறுவலுடன் போயகன்றான் - மாலைமதன்

செங்கைவரிசிலையைச் சேரத்தொடைமடக்கி ✻
யெங்கள்பெருமானே டேகினன் - மங்கை



## மங்கை.

புடையோதஞாலமெலாம் போர்மதனன்வேதக் ✻
கிடையோதிவிக்குமொரு கிள்ளை - விட்டுமை

வளருங்கொடுங்கொலையும் வஞ்சனையும்பொய்யுங் *
களவுங்குடிபுகுதுங் கண்ணு - - டெளிதேனுஞ்

சிலவுததியமுதுஞ் செழும்பாகும் - - *
பாலுமுதவும் பனிமொழியாண் - மாலுதவு

மிக்கதிருவழகின் வெள்ளத்தெழுந்தவிரு - *
மொக்குளனைய முலையினாண் - - மைக்குழலிற்

பூவின்மிகுபொறையாள் பூணாரமென்முலையா *
ணேவடியிட்ட நுண்ணிடையா - ளாவிபெற

வார்வமுளதாக வாடவர்தன்மேல்வைத்த - *
பார்வையறியும் பருவத்தாள் - - சேரச்

சுட்டுநற்பூவிளக்கைத் தோழியருந்தானு *
நெடுமத்தவாரணத்தி னின்று - விடையோன்பா

லன்னத்தைதூதுவிட வங்கையிற்கொண்டனள்போற்
பன்னித்திலநிரைத்த பந்தேந்தி - யன்னதுதான்

பாவையொருபாகன் பாலணுகமாட்டாமற் - *
போவதுவுமீள்வதுவும் போற்றேன்ற - மேவி

நெறிந்திருள்கொண்டை நெகிழ்ந்துததும்ப *
நறும்புழுகின்க ணணைந்து - - செறிந்து

சுரும்பினினங்கள் சுழன்றுசுழன்று - - *
நரம்பெனவெங்கு நணுங்க - - விரும்பி

யிடுங்குழையஞ்ச வெறிந்திருகண்க - - *
ணெடுங்குமிழின்க ணெருங்க - வடங்கொண்

மணங்கமழ்குங்கும வண்டலணிந்து - - *
சுணங்கணிகொங்கை துளங்க - - வணங்கி

மருங்குறளர்ந்து வருந்தவருந்த - - *
விருங்கலைகொஞ்சி யிரங்க - - நிரம்பி

யிலங்குபதங்க ளிடுங்தோறுநின்று - - *
சிலம்புசதங்கை சிலம்ப - - நலந்திகழும்

வல்லியினிதாட் மடவாரணைந்துமலர் - *
வில்லிபுரிவித்த மெய்த்தவமே - நல்லமட

மானேகலாப மயிலேமலர்பொதியாத் - *
தேனேதிரையளித்த தெய்வமே - கானேயுங்

கோவையிதழ்வாய்க் கொடியேநமக்கிந்தப் - *
பாவியிடைசெய்த பகையுண்டோ - மேவியுடன்

மன்னுஞ்சிறையன்றின் மன்றிற்பனைமடன்மே *
லின்னஞ்சிலநா ளிருந்தாலோ - முன்னமே

வென்றேயிருக்கும் விழியுடனேயுள்ளபகை *
யின்றேமதன்முடிக்க வெண்ணமோ வென்றிமதன்

சேரும்வளைமலராற் நீண்டப்பெறும்வாழ்விவ் *
வாரமணிப்பந்துக் கமையாதோ - பாருலகி

ருவிறகைஞ்மத்தபோ தனர்தங்காலத்தே - ✻
யாவியுட னிருந்தா லாகாதோ - - பாவா

யமையுமமையுமெனு மவ்வளவிற்றேர்மே - ✻
லுமையொருபாக முடையோன் - சமரமுக

வீரனுக்குமெய்யன்பான் மேவுந்திருநீற்றுச் (க்கு
சேரனுக்குஞ்சோழனுக்குந் தென்னனுக்கு மூரனு

மாரணற்கும்வாசவற்கு மல்லாததேவர்க்கு - ✻
நாரணற்குமேனோர்க்கு நாதனார் - போர்முகத்தி

லாமநாட்கொண்டதலை யாட்டுத்தலையாக - ✻
மாமனார்க்கீந்த மருகனார் - - தாமாக

விங்கெமையாட்கொள்ள வெழுந்தருளப்பெற்றோமெ
றங்குளமின்னார்கண் டகமகிழச் - செங்கேழ(ன்

வபங்குமணிமாட மா மறுகிற்றோன்ற - ✻
வியந்தமணிப் பந்தாட்ல் விட்டு - நயந்தணுகித்

திண்டோளுமார்புந் திருநீலகண்டமுங் - (சித்
கண்டோராவாழ்விக்குங் கண்மலருங் கண்டிறைஞ்

தாயபவ்ளந் துவளுற்றுடோழியருந் - ✻
தாயருநிற்கத் தலைப்பட்டா - - - டைய

வெறியுமழுவுடையா ரிம்மாதின்காதல் - ✻
சிறிதுமுணரார்போற் சேல்லக் - குறைவின்

மறைபுகலும்பூசை மனுவாலயத்தி - - *
லுறைதிருவேகம்ப முடையீர் - செறியிருளிற்

பந்தணுகுஞ்செங்கைப் பரவைபாற்சங்கிலிபால் *
வந்துழலுந்தூது மறந்தீரோ - கொந்தொசியுஞ்

சிற்றிடைபுல்லத் திருமார்பகங்குழைந்தீர் - *
நெற்றிவிழியுடையீர் நீரன்றே - வொற்றியூர்ப்

பெண்ணேவறிவார்தம் பேரின்றுதொட்டுமக்கு *
விண்ணோர்பெருமானே வேண்டாவோ வண்ண

மமைந்தாரார்காதலினு லார்தலையிற்பெண்ணைச் *
சுமந்தாரார்மற்றுமைப்போற் சொல்லீ ரமைந்து

றுகைத்துமதுகரத்தாற் றேடுமுதார்தந்து *
நகைத்துமுகம்பார்த்து நடவீர் - முகத்திலிவை

கண்ணன்றேவெப்படியுங் காதலித்தாட்டானுமொரு *
பெண்ணன்றேகச்சிப் பெருமானே யெண்ணி

லிருக்கிலறஞ்சொன்னீ ரொனுமாதைவிட்டுத் (காலு
திருக்கடைக்கண்வைத்தவர்போற் செல்ல வொருக

மேவுண்டிறிகிலளென் றெண்ணுதேயேவுண்டா *
லாவிபடுவ தறியாதே - - - பாவி

விறல்வேள்சிலையம்பு விட்டான்றன்னம்பின் *
மறல்வேல்விழியாண் மனத்தே - பிறைமுடியார்

பாதிகருகப் படுபஞ்சபாணமதிங் - - ✻
கேதுபடுத்தா திளையாளைக் - காதலுக்குச்

சங்கம்விழுமென்றுந் தாழ்கலைநில்லாதென்று ✻
மங்கம்பசலைநிற மாமென்றுந் - திங்கணிலா

வீரஞ்சுடுமென்று மேழிசைவேய்தீயென்று ✻
மாரஞ்சுடுமென்று மன்றறிந்தாள் - சோர்வுற்

றடங்குமறிவினளா யன்னையர்தந்தோண்மேற்
றடங்கண்மயிறளர்ந்து சாய்ந்தாண் மடந்தை

## மடந்தை,

இளையார்மனம்வளைய வெய்யுமதன்செங்கோல் ✻
வளையாவகையசையும் வல்லி - யளகநறை

தேங்குகருமுகிலுஞ் செவ்வாய்முருக்குமொளி ✻
தாங்குபுருவத்திந்த்ர சாபமு - மாங்கழையும்

வாய்ந்தமொழிக்குயிலு மைக்கட்கருவிளையும் ✻
பூந்தரளஞ்சேர்கழுத்துப் பூங்கமுகு மேய்ந்தநகை

முல்லைநகையு முலைக்கோங்குங்கைக்காந்தண் ✻
மல்லன்மலரும் வரிச்சுணங்கா - மல்லிமலர்

வேங்கையுஞ்சாயன் மயிலும்வியனழகுந் - ✻
தாங்குதிருநிறத்த சண்பகமும் - வாங்குமிடை

மின்னும்பதச்சூத மென்குழையுங்கொண்டொன்றாய்
மன்னியகார்வேனிலுடன் வந்ததென - மின்னுசுதை

பக்கநிலவெறிக்கப் பதுமராகத்துவெயின் *
மிக்கவரங்கத்து மேனின்று - - முக்கணனைத்

தேவர்நெருங்குந் திருமயானம்பார்த்துத் - *
தாவிறிருமேற் றளிபார்த்து - - மேவி

யரன்விடாதாளு மனேகதங்காபார்த்துப் - *
பரவுங்காரைக்காடு பார்த்துப் - பெரிதிறைஞ்சிக்

கங்கைகொண்டான்மண்டபமுங் கண்டுமனமகிழ்ந்து
மங்கைகொண்டான்வாழு மனைபார்த்துத் திங்கண்

முடித்தமுடிக்கு முடிகொடுத்தசம்பன் (யோன்
படைத்ததுலாமண்டபமும் பார்த்து,விடைக்கொடி

கச்சாலையும்பார்த்துக் கம்பர்தம்பாடியெனும் *
பொற்சாலையும்பார்த்துப் பூவைமொழிப் பச்சைநிறச்

சைவமுதல்வி தவஞ்செய்யப்பெற்றதொரு *
தெய்வவுலகாணித் திருக்குளமுந் - துய்ய

வறச்சாலையும்பார்த் தறுசமயம்வாழும் - *
புறச்சாலையும்பார்த்துப் பூவை - சிறப்புடைய

விந்நகர்போலென்னகரு மில்லையிமையோர்பதியு *
முன்னவரிதிதனுக் கொப்பென்ன - வன்னநடை

மானேயிதன்பெருமை வல்லவரார்சொல்லுகைக்குத்
தானேயுவமை தனக்கல்லான் - மானார்கட்

பொற்றொடியாள்கண்ணுதலைப் பூசித்தறஞ்செய்யப்
பெற்றதிதுபோற் பிறிதுண்டோ - மற்றிவளுக்

கந்தமுதலில்லாத வாதியொருமாவடிக்கீழ் *
வந்துவெளிப்பட்டநகர் மற்றுண்டோ நந்தா

மருக்காவின்மூன்று மணிவிளக்குமன்னி - *
யொருக்காலுநீங்கா துறையுந் - திருக்காமக்

கோட்டமெனிலிங்கே குலவுங்கனகமழை - *
யீட்டுமுகில்பொழிந்த திவ்விடத்தே கூட்டியபே

ராசையுடன்மால்பத் தவதாரந்தம்மிலும்வந் *
தீசனைப்பூசித்த திவ்விடத்தே - பேசுநல

மொன்றுபுரிந்ததொரு கோடியாகுமிதி - *
லென்றுமொழிகின்ற வெல்லைக்கண் - மன்றற்

றிருக்கொன்றைமாலையளி செவ்விமணமுண்டு - *
தருக்கியநாதந் ததும்ப - வெருக்கமலர்

பாயுஞ்சடாடவிமேற் பாகீரதிமுகங்க - *
ளாயிரமும்வீசி மலையெடுப்ப - வோயா

தருகிலிருபாலு மரும்மறைகளுன்கும் - *
பரிகலமுமாலையுடன் பாட - - வொருதன்

றிருக்னகத்தமருகத்துத் தெய்வச்சுருதி - *
பெருக்கத்திசைமுகத்திற் பொய்ய - விருப்பொட்ரி

தேடுந்திருவடியிற் செம்பொற்சிலம்போசை - *
யூடுங்ககனத் துலாய்நிமிர - - - நீடு

நட்ஞ்செய்தருள்காக்கு நாயகரும்வானங்- (மையாள்
தொழும்பொன்மணிதேருந் தோன்ற - கொடுங்கு

கோதையசையக் குழலசையக்கோல்வளைக்கை *
மாதர்பலருட்னே வந்திறைஞ்சிச் - சோதி

மிகக்கருணையெப்போதும் வீற்றிருந்தசெவ்வி *
முகத்தழகைக்கண்ணுன் முகந்தா - ணிகர்ப்பி

றவளத்திருநீறுஞ் சந்தனமுந்தோய்ந்த - *
பவளத்திருத்தோள்கள் பார்த்தா - ளிவளும்

மலர்மார்பிலாசையெலாம் வைத்தாண்மைக்கண்ணீர்
புலராமனெஞ்சம் புலர்ந்தா - ளுலகுண்ட

இண்பால்விடையீர் திருத்தோணலங்கண்ட *
பெண்பாவியாவி பெறுமாறு - கண்பார்

ரென்றபொழுதிற்கச்சி யேகம்பரேகுதலு *
மன்றன்மலர்சொரிய மாரவேள் - நின்றயர்ந்த

தத்தைமொழிக்குயிலைத் தாயெடுத்தணைத்துச்
சித்ரமணிமண்டபத்திற் சேர்வித்து - முத்தினொரு

பந்தருமிட்டார் பனிநீரையுஞ்சொரிந்தார் ❋
செந்தளிரின்பாயலின்மேற் சேர்த்தினர் சந்தனமும்

பூசினர்கொண்டமயல் போமோவென்றுயிரமும் ❋
பேசினர்தாயார்பெரி திருந்து - - கூசாதே

தண்ணென்கழுநீருஞ் சாத்தினர்பார்த்தபலா ❋
ரெண்ணமுமக்கொன்று மில்லையோ-வொண்ணுதலீர்

முத்தினைருபந்தன் முழுநிலாவீசுநிழ ❋
னித்தருறைதேமா நிழலாமோ - பித்துளதோ

வாசப்பனிநீர் மணலையவராகப் - - ❋
பூசித்தவாற்றின் புனலாமோ - பாசிழைக்குப்

பாயல்குளிரி படுத்தாலப்பாய்விடையோன் ❋
கோயிலிளமாவின் கொழுந்தாமோ நேயமுள

பொற்றொடிநல்லீர் பனிசந்தனச்சேறு - ❋
நெற்றிவிழியவர்த னீறுமோ - - கற்றறிவி

னாற்றுயிரநா ளொடித்தாலவையிவளுக் - ❋
கேற்றார்திருவஞ் செழுத்தாமோ - மேற்றான்

பிணைந்தவணிகழுநீர் பெய்வளைக்குக்கம்ப ❋
ரணிந்ததிருக்கொன்றை யாமோ - வணங்கனையீ

ரென்றுமொழிய யிவையவையாயினயோ - ❋
லின்றதிவளாவி நீங்காம - - - லன்றே

தேரியவேயாவர்க்குஞ் சிந்தாகுலமு - *
முளையுந்தெளிவுதர லுற்று - - ளரிவை

கமலமலர்சுமந்தாள் கட்டழகுமேனு - *
ளமுதமுடன்வந்தா ளழகுஞ் - சிம்யமிசைக்

கூசிமழைதவழுங் கொல்லிக்கிரிபடைத்தாள் *
பேசவரியதொரு பேரழகும் - வீசுமிளந்

தென்றலும்வென்றிச் சிலைமாரனைங்கணையு - *
மன்றலுமொன்றான வடிவினள் பொன்றுமொரு

காலமும்பார்த்துக் கயறும்பிடித்தொருவன் *
சூலமுமேந்திச் சுழலாமன் - - மால்செய்

துலவாநகையா வொசியாவசையா - - *
குலவாவுயிருண்ணுங் கூற்று - தலைவிக்கைங்

கோணம்பெறவகுத்த கோயில்போலியாவளையும் *
காணுந்தொறுமயக்குங் காட்சியாள் - பேணி

மகிழ்வுற்றவாயமுடன் வண்டரளமாலை - *
திகழ்சித்ரமண்டபத்திற் சேர்ந்து - மகர

விடங்தோய்விழியங் கெழுதியவையெல்லாம் *
நெடும்போதுபார்த்தகலா நிற்ப வடைந்தெவரு

மின்னதிதுவிதுவென் றெங்களுக்குக்காட்டியரு *
ளன்னநடைய ரடைவிலென - மின்னிடையீர்

வெள்ளிமலைநீங்கி விண்ணோருமண்ணோரு * முள்ளும்பிரானை யுமையாளபோ - யுள்ளமிகத்
தாங்காதபூசைக்குத் தக்கவிடமீதென்று - * நீங்காதுநின்ற நிலைபாரீர் - - தேங்கமழுங்
காவிபுடைசூழ்ந்த கம்பாநதிப்புனலிற் - * பாவைபடியும் படிபாரீர் - கோவையித
ழோசையளிக ளுலவம்பிகாவனத்தில் - * வாசமலர்கொய்யும் வகைபாரீர் - பேசரிய
வாதியமர ரறியாவவராக - - - * மாதுகுவித்த மணல்பாரீர் - - கோதை
யணியுமிருளோதி யன்பொடுபூசித்துப் - * பணியும்வழிபாடு பாரீ - - ரிணையிலிமுன்
மேவுபுளகமுடன் வெண்ணீறுமெய்க்கணிந்து * தேவியிருந்த செயல்பாரீர் - - பூவிற்
கரந்துமழைபொழியாக் காலத்தேகம்பை - * பரந்துவரும்பெருக்கைப் பாரீர் - விரிந்தபுனன்
மாகம்புதைய வரப்பண்ணித்தம்மையொளித் * தேகம்பர்நின்றவிடம் பாரீர் - - தோகை
யரும்புனல்கண்டஞ்சியவ ராகமுறச்சென்று * பரிந்துதழுவியது பாரீர் - - புரிந்து

மலைக்குமகட்டன் வழிபாடுவந்து - - *
பலித்தபெரும்பேறு பாரீர் - கலப்பொற்

றெரிவையுட்னிந்தத் தேமானிழலிற் - *
பரமனிருந்தவிட்டம் பாரீர் - - பொருவி

றிருக்கைவளையான்முலையாற் றிண்டேர்ளுமார்பும் *
பரித்ததிருத்தழும்பு பாரீர் - - விரித்தசடை

யண்ணல்வெளிப்பட் டருள்வரங்கள்பாரீரொன் *
றெண்ணும்புதுமையிவை யெல்லாமொண்ணுதலாள்

காட்டவருங் களிகூர்பொழுதிலொரு - *
தேட்டமுளதாய சிந்தையளாய்க் - கூட்டி

லிருந்தகிளியை யினிதுகரத்தேந்தி - *
வருந்திவினையேன்பெற்ற வாழ்வே - யருந்தவமே

தேமென்குதலைதருந் தெள்ளமுதேகம்பரணி *
தாமந்தருவாய் தவிருவா - - யாமெல்லாஞ்

சூழுநிலவிற் சுதைநிலாமுன்றிலின்யான் - *
வாழும்படிநினைக்க மாட்டாயோ - வேழந்

திகழும்வரிசிலையான் சேவகங்கள்காட்டும் - *
புகழிநறும்பூவாகப் பண்ணு - யிகழ்வார்மு

னென்னன்னையேது மிரங்காளிரவுபக - *
லுன்னன்னையுன்னை யொறுக்குமோ - தென்னன்

பொருப்பிற்பிறந்து புகையாகவீசு - - *
நெருப்புகுளிர நினையாய் - நிளைத்தாளத்

தாருங்கழுநீருஞ் சந்தனமுந்தோய்ந்தபனி *
நீருங்குளிர நினைந்திட்டாய் - - பேரரவச்

சேவின்மணிவருத்தந் தீர்த்தருளாயென்றிருந்து *
பூவையினிதுரைக்கும் போதின்கண் டேவருய்ய

வாலமினிய வமுதாகவுண்டபிரான் - - *
கோலமறுகு குறுகுதலு - - நீலவிழி

தூதுவிட்க்கிள்ளைக்குச் சொல்லுவதெல்லாமறந்து *
காதலுடன்வந்தானைக் கைதொழுது - நீதிபுரி

யிந்தமலைப்பாவை யிடப்பாகங்கொண்டுமக்குத் *
தந்தவலப்பாகந் தரலாமோ - வெந்தைபிரான்

கங்கைத்திருமுடிமேற் கண்ணியலால்வெண்ணீறு *
தங்குபுயக்கொன்றை தரலாமோ - சங்கரா

வெம்பாகநீரணைந்தா லிவ்வுடம்பிற்பச்சென்ற *
செம்பாகம்வந்து சிவக்குமோ - நம்பாநின்

சோதிமணிமுடிமேற் சோமப்பனிக்கொழுந்தை *
மோதுமுதுதரங்க மோதாதோ - வோதாயென்

றோதியுடன்சொல்ல வறம்வளர்க்குமூருடையா *
னேதுமுரையா னெழுந்தருள - - மாத

ரரிந்தும‌கவை யளித்தவர்களாக்கிச் *
சொரிந்தகறியமுதுஞ் சோறு - மருந்த

விருப்பினொடுசெங்காட்டில் வேண்டும்பொழுதோ *
திருப்பவளச்செவ்வாய் திறப்பீர் - விருப்பால்

வளைந்ததிரிபுரத்தை மாள்விக்கும்போதோ *
குளிர்ந்ததிருமுறுவல் கொள்வீர் - துளங்குநிலா

முத்தவரிசிலையான் மொய்ம்பூங்கணைபுகுந்து *
தைத்தபொழுதோதிருக்கண் சாத்துவர் மெய்த்தக்

கொடியவிடஞ்சுரரைக் கொல்லும்பொழுதோ *
வடையவருளுடையீ ராவீர் - மடமாத

ருற்றதுயர்கேட்பதற்கொன் றோதாதுபோகின்றீர் *
கற்றதிதுவோகள்ளக் கம்பரோ - பெற்றவர்தான்

வீசுமழுவாற்றுணிய வெட்டுமவர்க்கல்லாது *
வாசமலர்க்கொன்றை வழங்கீரோ - பூசித்து

வல்லபங்கள்செய்து வழிபடுவார்க்கல்லாது *
புல்லவொருவர் பொருந்தீரோ - சொல்லீ

ரொருவாசகமென்ன வோராதுபோலப் - *
பொருமாரனைநிறுத்திப் போனார் - தெரிவை



# தெரிவை.

யொருத்திதவக்குறும்பை யோட்டியுலகெல்லாந் *
திருத்திமதனட்டத்துஞ் செங்கோ - னிருத்தனுர்

தூதுவிட்சசங்கிலிபாற் றேழனுக்குத்தாமுழன்ற *
போதிதுவெனறெண்ணும புரிகுழலா ளாதிரையான்

வெண்டிரைநீர்வேணிக்கு வேறுமொருதிங்கணமக் *
குண்டனவென்றெண்ணு மொளிநுதலா டுண்டமதி

வேணியுடையோன் மிடற்றிலடக்குதற்கும் *
பாணிமிசையசையப் பண்ணுதற்கும் பாணத்

தொடுப்பதற்கும்பாற்பதற்குஞ்சூழ்கழற்காலன்மேல்
விடுப்பதற்குமெண்ணும்விழியாள்விடைக்கொடியோ

ராயபிறப்பை யணுகாதவருடைய - - *
தூயபிறப்புணர்த்துந் தோளிணை - யுயனுர்

சேமச்சிலையுஞ் சிலையுமிவையென்று - *
தாமுட்குறிக்குந் தனத்திணை - மாமழுவோன்

தென்றல்பட்க்குழைந்த தேமாவின்கொம்பரிது *
வென்றுதிருவுள்ளத் தினிதெண்ண வொன்றுகத்

துய்யவளைக்கையுந் துவர்வாயுஞ்சோதிதிகழ் *
மெய்யுநிறமும் விளங்குவாண் - மொய்யமரிற்

றவும்விடையுடையான் றன்மேன்மலர்வாளி *
யேவுமதனை யெரித்தநாண் - - மேவுற்

றெழும்புகையும்வானமு மென்னவுரோம - *
வொழுங்குமிடையு முடையா - டொழுஞ்சுரனைக்

காக்குமிடற்றார்க்குக் கச்சாதல்காப்பாத - *
லாக்கநினையுமக லல்குலா - - ளேக்கரிய

தூவிமயிலனையார் சூழவொருகமல - - *
வாவியருகு மகிழ்ந்திருப்ப - மேவியயி

(* லுண்கண்)விறலி யொருத்திசெழுகளபக் *
கொங்கையிணைபடைத்த கூற்றமே - யெங்குமளி

நின்றேலிடுகின்ற நீள்வனசக்கோயிறனக் - *
கின்றேகுடிபுகுத விட்டா - ளொன்றாக

விஞ்சவழகுடையார் வீற்றிருப்பதல்லாது *
கஞ்சமலரொருத்தி காணியோ - வஞ்சாதே

இந்தவழகல்லா லேந்துமோகஞ்சமலர் - *
தந்தவழகு தனையென்று - - செந்திருமுன

சென்றுபணியத் திருவாலவாயுமணி - *
மன்றுமொருகட்வுண் மாநிழலு - மென்றும்

---

(* உண்கண் இனவெதுகை.)

விரும்பியுறைமழுவாள் வீரன்றசாங்க - *
மிருந்துவிறலிபா டென்னத் - தெரிந்தபெருடி

பாகுபலவுடையான் பாட்டுக்கொருவடிவான் *
றயாகமுதவுந் திருமலையு - - மாகம்

பெருக்குமறுகும் பிறைக்கொழுந்தும்பாம்பு *
மெருக்குமுடித்த மணலியாறும் விருப்பொட்
ணந்தண்பெருந்துறையி லாளுடையாரம்மணலில *
வந்துசிறந்த வளநாடுஞ் - - சந்தும

வடங்கொளிளமுலையால் வானோரறியா - *
வுடம்புகுறிபெற்ற வூரும் - தொடர்ந்தவரி
நீலம்போற்கண்ணார் நிறமெல்லாந்தன்னுடைய *
கோலம்போலாக்குங் குளிர்தாரு - மாலிலையிற்

சேக்கைப்புயலின் றிருநாபியிற்பனவன் - *
வாக்கிற்பிறந்த வயப்பரியு - - நோக்கித்

திரண்டாயிரங்கயிலை செல்வதெனத்தோன்று *
மிரண்டாயிரங்கோட் டிபமு - - நெருங்கு

கடிக்கற்பகவனத்தைக் காசினிமேலாயர் - *
கொடிக்குக்கொடுத்த கொடியுந் - துடிக்கட

ட்டுழங்குசதியுடையான் றாண்டவத்துக்கேற்ப *
முழங்குதிருக்கைமுரசுந் - - தொழும்பா

லடுத்தசுரர்பரவ(*வண்டாண்ட)மெல்லாம் *
படுத்ததிருவாணையுமே பாடத் - துடிக்கவிதழ்

நெஞ்சுதளர்ந்து நெறிமயங்கிநீடுயிர்த்து - *
வஞ்சியறிவழிந்து மாலாகி - - யஞ்சாதே

யாகம்பிரியா வவளையறியாம - - *
லேகம்பர்தாமேவந் தெய்திலே - மோகங்கொண்

டாரமருவிய கன்மார்பிலென்னையவர் - *
சேரவரவணைக்கத் தேடிலேம் - பாரடையத்

தாவும்விடையுடையோன் றன்மேற்றனத்தழும்பு *
மேவுங்கலவி விளக்கிலேம் - பூவினறும்

பாயலணுகிநலம் பாராட்டியென்னையவ - *
ராயபுலவி யகற்றிலே - - - நேயமுடன்

போகவுததியினிற் புக்கழுந்திநெக்குருகி - *
யாகமிருவருமொன் ருகிலே - - மாகத்

தணைத்ததறிய வவரணிந்தநீறென் - - *
பணைத்தமுலைமேற் படிலே - மணிக்களத்தா

ரின்றுமணந்தபடிக் கென்னுட்ம்புசான்ருகக் *
கொன்றைமணநாறக் கூடிலே - மென்றிருந்து

---

(*அண்டாண்டம்-என்பது-அண்டப்கிரண்டம்.)

வாழும்படிதன் மனத்திற்பிறந்ததெல்லாந் - ❊
தோழியுடனிருந்து சொல்லுங்காற் - சூழு

நெருக்காரமாலை நெடுநிலாவீசுந் - - ❊
திருக்காவணநிழலிற் சேயுந். - திருத்தாள்சேர்

சிலம்படைத்துத் திருநீறிட்டவயிற்றிற் - ❊
சூலைகொடுத்தாண்ட தொண்டனு மோலையுடன்

சென்றுதடுத்துத் திருவெண்ணைநல்லூரி - ❊
லன்றுபடைத்த வடியானுங் - கொன்றைநறுந்

தேன்பாய்முடிமேற் றிருச்சேய்ஞலூர்தன்னி ❊
லான்பால்சொரிந்தாட்டு மந்தணனுந் தேன்போலத்

தித்திக்குமாறு திருவாசகஞ்சொன்ன - ❊
பத்திப்பெரும்பெருக்குப் பாலனு மெத்திசையுஞ்

செல்லவரிய சிவதத்துவமல்லா - - ❊
தில்லையெனவெழுதி விட்டோனு - நல்லதவஞ்

சூழ்வாருஞ்சூழ்ந்துவரச் சூதத்திருநிழலின் - ❊
வாழ்வோன்மணிமறுகில் வந்தணுகத் தாழ்குழலு

முற்றநினைந்தவெல்லா முன்வந்துகைப்புகுதப் (டியா
பெற்றவர்போல்வந்து பெரிதிறைஞ்சிப் - பொறறொ

டெய்யபுரிநூலுந் தோளுந்திருமார்பு - - ❊
மையல்பெருக வரநோக்கித் - - தையலா

ளீசன்றன்மார்புநல் லெண்டோளுநீங்கர்த - ❋
வாசநறுங்கொன்றை மாலையே - பாசறையில்

வீசுப்னிநீரு மிக்கவகிற்சந்தனமும் - ❋
நீசவுனக்குப் பொறுக்குமே - வீசிவரும்

போதாருந்தென்றல் புகுதுகைக்குமாளிகையின் ❋
வாதாயணந்திறந்து வைப்பையே - நாத

மளவேயளவேயென் றுயரிராலூதுந் - ❋
துளேவேயுனக்குச் சுடாதே - - குளிர

வடுத்தசெழுங்கழுநீ ராலேபடுத்த - - ❋
படுக்கைசருகு படாதே - - கட்க்கவரி

தாயவிரிகங்குல டன்மாமதன்சொரியுஞ் - ❋
சாயகங்களுன்மீது தைய்ாவே - மாயவிரா

வெண்ணிலாவூழி யெறித்தாலுமிங்குனக்குத் ❋
தண்ணிலாவேதுந் தழலாதே - - நண்ணுமய

லையவிடையாருமன்னே யருந்தாமொறுக்கும் ❋
வெய்யவுரைகேட்க வேண்டாவே - பையவருஞ்

சேவின்மணியின்சைக்குந் திராவலைகட்ற்குங் ❋
கூவுங்குயிலுக்குங் கூசாயே - மேவியநின்

முன்றிலுயர்ப்னையின் மூரிமட்ற்குட்ம்பை - ❋
யன்றிலரிக்குரற்கு மஞ்சாயே - யென்றுலுய

வெய்யபகலை விளைவானேன்மேனியெங்குந் *
துய்யமலர்க்கண்ணீர் சொரிவானேன் செய்யவங்கை

வண்டுவிழுவானேன் மற்றெனக்குச்சொல்லென்று *
கெண்டைவிழிமாது கேட்பளவிற் திண்டிறல்வேள்

காவியொழிந்த கணைசொரிந்தானவ்வளவிற் *
றேவர்களுந்தன் றெருவகன்றான் - பாவைமே

லாரவட்டமு மணிக்தார்குளிர்ந்தபனி - *
நீருமட்டவார் நிரப்பினார் - - பேரிளம்பெண்

# பேரிளம்பெண்.

திண்மைமதனன் செலுத்துகின்றபேராண்மை *
பெண்மையழகின் பெருக்குத் தண்மலரோ

னுவமளவிறந்த ஞானத்தாற்பேரழகாற் - *
பூவுமரசாளப் போதுவா - - - டேவ

ரரசனிமையாத வாயிரங்கண்சூழத் - *
தருநிழலில்வாழத் தருவாள் - விரவி

பினியகலவிகல மெல்லாமதனன் - - *
மனைவியையுங் கற்பிக்கவல்லாள் - கனைகடல்சூழ்

பாணைப்பெரிதுழைக்கப் பண்ணிப்பழையசுர *
ரூணைப்பெரிதுழைக்க வொட்டாமல் வாரிட்டுக்

கட்டுண்டனமென்று நாணிக்கவிழ்ந்துதலை *
யிட்டனபோற்சாய்ந்த விளமுலையாள் கிட்டரிய

சைவப்பெருமைத் தமிழ்நாட்டறிவித்த - *
தெய்வப்புலவன் றிருமுறையும் - வெவ்வமணை

ரீருமதயானைக்கிடும்போது மஞ்செழுத்தைத் *
தேருமரசன்றிருமுறையுஞ் - - சேரனுட

னன்றுகயிலைக் கதிமதவெள்ளானையின்மேற் *
சென்றபெருமான் றிருமுறையுந் தென்றிசையின்

மாட்பெருந்துறையில் வந்தவருட்கோலங் *
தேடித்திரிந்தோன் றிருமுறையுங் - கூட்வினி

தோதியவர்கடிரு வுள்ளக்கருத்தினுள - *
கோதினிலைமையெல்லாங் கும்பிட்டுச் சோதிதிக

ழஞ்செழுத்துமேகம்ப ரா்டுந்திருக்கூத்து *
நெஞ்சழுத்திவைக்கு நிலைமையால் - மஞ்சு

பொருந்துமணிமாளிகையிற் பூங்கவரிவீச *
விரும்புமணியாசனத்தின்மீதே யிருந்தெவரும்

பேசவரியபிரானார் திருவார்த்தை - - *
யாசையுடன்கேட்புழிவந் தாங்கொருத்தி வாசலின்க

ணின்றுரொருமறையோனீறணிந்தகோலமுட,னென்
ருள்வரவிடுவையென் றுரைத்துச்-சென்றெதிர்கொண்

டங்கைகுவித்தோ ரரியாசனத்தினில்வைத் - *
தெங்கட்வம்வந்தவா றென்றுரைசெய் தங்கமுடன்

முன்னமறைநூன் முதலாயவெக்கலையு - *
நின்னிலறிவார் நிலத்தில்லை - மின்னுசடை

யீசனிலைமக்கு மேனையிமையோர்நிலைக்கும் *
வாசியுரைதெளியும் வாறென்னப் - பூசுரனு

மென்னிலைமைசோதிக்க,வென்றோவிதுசொன்னாய் *
நன்னுதலேயென்று நகைசெய்யா - வுன்னி

யிதனையிதனுடனே யெண்ணலாமென்னு - *
மிதனைவினவுதலே யன்றி - - மதியதனி

லெண்ணமிலாதார்போல வெல்லாமினிதுணர்ந்த *
பெண்ணமுதேகேட்கப் பெறுதியோ மண்ணுலகிற்

குன்றிதனையொருபொற் குன்றமுடனிகரு *
மென்றுதிரிவாரை யென்செயலாந் துன்றிருள்போம்

விஞ்சுசுட்ருடைத்தாய் மின்மினியேவந்திக்குஞ்(க்
செஞ்சுடரினென்பாரைச் செய்யுமதென்-றஞ்சமென

கல்லானிழலிருந்த கண்ணுதலார்தம்முடனே *
யெல்லாரையுந்தேவ ரொன்றுரைத்த னல்லாயொப்

பேதுங்கரா விரும்பினையும்பொன்னினையுங் *
தாதுவெனவுரைக்குந் தன்மைகாண் மீதுலவு

நீடுசுடராழி நிலத்தேரிலீரிரண்டு - - *
பாடுசுருதிப் பரிபூட்டித் - - - தோடார்

நளினத்துப்பாக னடத்தவெரிவாய்த் - *
துளவப்பகழி தொடுத்துக் - கொளுவியநாண்

மூரியரவாக மூதண்டமுந்தாங்கு - - *
மேருவெனுஞ்சயிலம் வில்லாக - வார்வமுள

மூவருயிர்வாழ முப்புரமுநீறாக - - *
யாவர்பொருதா ரிமையோரிற் - - றேவர்

பழித்தபெருவேள்வி பழுதாகவாள்விட் - *
டழித்தவிமையவர் வேறார்தா - னிழைத்து

வதைப்பான்வருங்கூற்றை மார்க்கண்டர்க்காக *
வுதைத்தார்வரலலா துண்டோ - வெதிர்த்த

கழற்கான்மதன்மாளக் கண்மலரால்வெய்ய *
வழற்றனையேவினா ரார்தா - - னிழற்பொழு

கலையானிடந்திட்ட கண்ணுக்கோராழி - *
விலையாகநல்கினார் வேறார் - - நிலையாகத

துன்னுமொருசிலந்தி சோணாடுங்காவிரியு *
மன்னியரசாள வைத்தவரார் - பன்னெடுநா

நேடியிருவர் திரியத்தெரியாம - - *
னீடுசுடர்வடிவாய் நின்றவரா - ராடலென

வுங்காரஞ்செய்தேயுலகுண் டமாலயனைச் - *
சங்காரஞ்செய்துபின்னுந் தந்தவரார் பங்கயன்மால

வீந்தசுடலை விபூதிதரித்திருவ - - *
ரார்ந்ததலைமாலை யணிந்தவரார் - மாய்ந்திட்டவே

நாராயணருடலு நாலுமுகனுருடலுங் - *
கூராயசூலமிசைக் கொண்டவரார் - சேர

வெரிந்தபிறையெயிற்றி னீரைந்துவாயும் - *
பரந்துசெழுங்குருதி பாய - நெரிந்தொருவன்

மான்றுகிடக்க மலையான்மகளுடனே - *
யூன்றுவிரலொன் றுடையவரார் - தோன்றியட்

லோதவிட்டமுண் டபயநிறத்தாமரைமேற் - *
கோதையர்க்குத்தாலி கொடுத்தவரார் மாதவனைக

கூடியயனைக் கொடுத்தவரார்மோகினிபா - *
னூடுமெழிற்சாத்தனைமு னல்கினரார் பாடார்ந்த

புத்தேளிரொன்னைப் புனைந்தவராரல்லினுமை *
கைத்தாளங்கொட்டநடங் காண்பவரார் மத்தமுறு

மாதிநெடுமாலுதிர மத்தனையுங்கைக்கலத்திற்
பாதிதனிலேநிறையப் பண்ணினரார் வேதமுடன்

றுண்ணெனவேயாழிப்குஞ்சோமுகனைச்செற்றிடுமீன்
கண்ணையுகிராற் களைந்தவரார் - கண்ணனு
ராமைவடிவந்தனிலு மாதிவராகந்தனிலு (ம்
மாமுதுகோட்டைக்கரத்தால் வாங்கினரார்தாமறையு
பேசரியசிம்புளாய்ப் போராட்கனையடுங் - *
கேசரியைவள்ளுகிராற் கீண்டவரார் - கூசா
தட்டுஞ்சலத்தரனை யன்றாழிகூட்டி - *
யுட்லம்பிளந்தவர்வே றுண்டோ - படிவிண்
முழுதளந்தமாயன் முதுகெலும்பைச்செந்தீ *
யொழுகவேவாங்கினர் வேறுண்டோ - பழுதெண்
ட்டமலரோனுச்சித் தலையையுகிரா - *
லுட்னேகுறைத்தவர்வே றுண்டோ நெடுவிசும்பு
முற்றும்புதைத்தலையான் மோதுஞ்சுரநதியைச் *
சுற்றுஞ்சடையிற் சுவறுவித்து - - மற்றும்
பகீரதனின்றாழிநாட் பாதமலர்போற்ற - *
மகிலத்தேபோதுவித்தார் மற்றார் - புகழைச்
செலுத்தச்சிறுத்தொண்டர் தேவியறுத்தாக்கிக் *
கலத்திற்படைத்த கறியைத் - - தலைக்கிட்ட
சுட்டியுமாலைச் சுரிகுஞ்சியுமுத்துங் - - *
கட்டியைநல்குங் கனிவாயு - மிட்டொரு

வாளியுங்காது மருங்குமணிவட்டமுந் - *
தாளிணையுஞ்செம்பொற் சதங்கையுமாய் - மீளப்

பிறப்பித்தவர்தம் பெரும்பிறப்பையெல்லா - *
மறுப்பிக்கவல்லவர்தா மற்றூர் - நறைக்கொன்றை

யாதிதனையொழிய வாறாறுதத்துவத்தின் - *
மீதுமகிழ்ந்திருக்கும் விண்ணவரார் - மாதிற்

பொருந்திவிடையாகப் பூந்துழாய்மாலை - *
விரும்பிநடத்தினர் வேறூ - ரரன்பெருமை

யின்னம்பலகோடி யில்லையோயாமிருந்து - *
சொன்னபொழுதே தொலையுமோ - வுன்னரிய

மூவாமுதலா முதல்வனையுமூவுலகிற் - *
சாவார்பிறப்பார் சட்டங்களையுந் - தேவாக

வொக்கநினைவா ருக்கல்லவோவோரேழு - *
மிக்கநரகம் விதித்ததுகாண் - மைக்கண்

மருவார்குழலியென மற்றவளுமந்தப் - *
பெருவாழ்வுடைய பிரானைப் - பரவியவர்

தெய்வவெழுத்தைந்துமோ தித்திருநீறு - *
மெய்யிலணியா விதயற்று - மையறாு

மெட்டெழுத்தையோதி யிடுவார்மண்ணெப்பொழு
கட்டொக்கவென்னக்கெளவுதமனூரிட்டபெருஞ்(துங்

சாபத்தியல்பு தருமாமறையோர்செய் - ❋
பாபக்கலிகாலப் பண்புகாண் - - கோப்விதழ்

மின்னேயெனச்சிறந்தும் வேதியராகிப்பிறந்து - ❋
மென்னேபெருமை யிருந்தவா - முன்னை

மறையினெழுத்தைந்தும் வாயாரவோதி - ❋
நிறையவணிந்துதிரு நீறும் - பிறவியெல்லாம்

வாட்டவறியர்மல் வாளாப்பிறவிதனை - ❋
யீட்டுவதேபாவ மெனவுரைத்து - வேட்டவெலா

மொண்டொடியும்வேதியனுக் குள்ளமகிழ்ந்தளித்து
வண்டணியும்பூவனைமேல் வந்திருப்பப்-பண்டுவிட

முண்டபிரான்பாகத் தொருத்தி முலைத்தழும்பு - ❋
கொண்டபிரானாட்க் குழுவெல்லாந் - தண்டகமா

நன்னாட்டுத்தேவர்க ணாயகனார்சோணாட்டின் ❋
முன்னாட்டுமென்றின் முதலியார் - தென்னாட்டிற்

சூடுமபிஷேகச் சொக்கனார் துங்கமணி - ❋
மாடநெடுவீதி வந்தனுக - வாடகப்பூஞ்

சோதிச்சிலம்புக்குஞ் சூழ்பாடகத்துக்கும் ❋
பாதத்தழகைப் பகிராதே - - மோதிளநீ

ரானமுலையழகை யாரவிளவண்டலுக்கு - ❋
ஞானநறுந்தொய்யலுக்கு நல்காதே - வானநிலா

வாரமணித்தோளழகைக் கரும்புக்கு - *
மீரமிலாவல்லிக்கு மீயாதே - தாளைப்

பலவுநிறைத்தன்னதொட்டைப் பாலைக்களகங் *
குலவுமழகைக் கொடாதே - - கலவிநலங்

கொண்டதிருமார்புங் குளிர்ந்ததிருச்சாந்தும் *
வண்டணியுங்கொன்றைமலர்த் தாருந் தொண்டருள

வந்தாமரைமலர வானந்தத்தாண்டவஞ்செய் *
செந்தாமரையுந் திருச்சிலம்புஞ் - சிந்தை

மகிழமகிழ வணங்கிவளையெல்லா - - *
நெகிழநெகிழவெ திர்நின்று - - சகமேற்

பிறவாமலெண்ணிறந்த பேரண்டமாய்ந்து *
மிறவாதமேனி யிறைவா - - வுறவாய்ச்

சிரித்துமுகம்பார்த்துத் திருக்கொன்றைமாலை *
தரித்ததிருத்தோ ளழகைத்தாரீ - ரொருத்திகுறி

யாகமிசையில்லை யாமாகிலிப்பொழுதே - *
யேகவுமைவிட் டிருப்பேனோ - வாகிலிநான்

கட்டியிறுகக் கலந்துருகியொன்றாகி - *
யிட்டகுறியழித்தா லியார்தவிர்ப்பார் பட்டதுபட்

டாவல்கெட்டப்புல்லி யகலாமலியான்வளைத்தா (னைப்
லேவலொனைத்தள்ளியுமை யேகுவிப்பார் - மேவியெ

புல்லியொருக்காலும் போகாவகைபிணித்து *
வல்லபடிகாண மாட்டேனே - நல்லமட

நாண்கொண்டதாருவன நங்கையனைப்போலமனம் *
வீண்கொண்டுபோக விடுவேனே மாண்கொண்டு

பூத்ததிருநீறும் புயமுந்திருமார்பு - - *
மேத்துமவர்க்கருளீ ரென்னென்று வாய்த்தசொலா

லாவதெல்லாம்பார்த்தா ளவளுந்தழுவுகைக்கங் *
காவதெல்லாம்பார்த்தா லவைவருமோ - வாவி

யுருகும்வகைக்காத லுண்டாகநோக்கி - *
விரவுநகைகொண்டேகி விட்டார் - - தரள

மிடையுநகையா ரிவரொழுவரிங்ஙன் - *
கொடியபெருங்காதல் கொள்ள - முடிமே

னிலாவுடையான்றேமா நிழலுடையான்சேர *
னுலாவுடையான்போந்தா னுலா - - *



# ஏகாம்பரநாதர்தைவீகவுலா

## முற்றுப்பெற்றது.

ஆ - கண்ணி, ருருக.



உ

கடவுள் துணை.

புகழேந்திப்புலவர்

அருளிச்செய்த

# நளவெண்பா மூலம்.




சென்னை-புரசை

விவேகவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1899.

இதன் விலை அணா - 4.

தெய்வமே துணை.

# புகழேந்திப்புலவர் சரித்திரம்.

புலவர் திலகராகிய புகழேந்திப்புலவர் எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின்மேல் எனக்கூறி யுள்ளமை நோக்கிக் கம்பநாடர் காலத்து (அதாவது) சற்றேறக்குறைய 1032 வருடங்களுக்கு முன்னம் செங்கற்பட்டுக்கடுத்த பொன்விளைந்த களத்தூரில் துளுவவேளாளர் மரபிற் றோன்றினவரென்பது, படிக்காசுப்புலவர் பாடிய தொண்ட மண்டல சதகத்தால் விளங்குகின்றது. இவர் செய்த பிரசித்த நூல்கள் நளவெண்பாவும், இரத்தினச் சுருக்கமுமாம்.

இவர் கல்விப்புலமை நிரம்பப்பெற்று நான்மாடக்கூடலென்னும் மதுரையைச் சார்ந்த கொற்கைப்பதியை ஆண்டுவந்த † சண்பகமாறனென்னும் பாண்டியனிடத்தில் தமிழ்ப்புலவராயிருந்தனர். வேறு கூறுவாருமுளர். இதன் உண்மை தெளிந்து கூறக்கூடாமையாயிருக்கின்றது. இவருடைய காலத்திருந்த வித்வான்கள் கம்பரேயன்றி ஒட்டக்கூத்தப் புலவருமாம். சிலர் ஔவையு மிருந்ததாகக்கூறுவர். அந்தக்காலத்தில் உறையூரிலிருந்து சோழநாடு முற்றும் அரசு நடாத்தி வந்த குலோத்துங்கச்

† சிலர் வரகுண பாண்டியன் என்பவர்.

சோழராஜனுக்குப் பெண் கேட்கும்படி அவனுக்கு வித்யா குருவும் அவனுடைய ஸமஸ்தான வித்வானுமாகிய ஒட்டக்கூத்தப் புலவர் சண்பக மாறனிடத்திற் சென்று; அவனோடு பேசிக் கொண்டிருக்கையில், பாண்டியராஜன் பரிகாசமாய்ச் சோழராஜன் பாண்டியகுலத்துப் பெண்ணைக் கொள்ளத்தக்க பாத்திரனோ? எங்களிலும் அவனுக்குள்ள ஏற்றமென்ன சொல்லும் என்றான். அதுகேட்டு ஒட்டக்கூத்தப்புலவர்; சோழராஜனுடைய பெருமைதோன்ற அவனுடைய குதிரை, நதி, மாலை, குலம், வீரம், கொடி, நகர், தேசம் இவைகளுக்குப் பாண்டியராஜனுடைய குதிரை முதலிய அவ்வெட்டும் ஒப்பாக மாட்டாவென்னும் பொருளை அமைத்து:—

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
　　கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானே
ஆருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
　　ஆதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்குள் வீரனொரு மீனவனோ வம்மானே
　　வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானே
ஊருக் குறந்தை நிகர் கொற்கையோ வம்மானே
　　ஒக்குமோ சோணாட்டைப் பாண்டிநாடம்மானே.

என்னும் பாடலைச் சொல்லினர். அதுகேட்ட பாண்டிய ராஜனுடைய சமஸ்தான வித்வானாகிய புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தப் புலவரை நோக்கி அதற்கு மாறாக:—

ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
ஒப்பரிய திருவிளையாட் டெந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே
கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
பரவையணிக் கதுஞ்சோழன் பதந்தனையோ வம்மானே
பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே.

என்றபாடலைச்சொல்லினர் அதுகேட்டுப் பின்னர் ஒட்டக்கூத்தப்புலவர் சோழனைப் புகழவேண்டி:—

### வெண்பா.

" வென்றி வளவன் விறல்வேந்தர் தம்பிரான்
என்று முதுகுக் கிடான் கவசம் - துன்றும்"

எனக்கூறிச் சற்று ஆலோசித்தனர், இதற்குள் புகழேந்திப் புலவர்;

" வெறியார் தொடைகமழு மீனவர்கோன் கைவேல்
எறியான் புறங்கொடுக்கி னென்று. "

எனக்கூறி முடித்தனர். தாம் சொல்லியவற்றிற்கெல்லாம் பிரதி கூலமாய்ப் பேசினனேயென்று அவர்மேல் ஒட்டக்கூத்த ருக்கு வருத்தமுண்டாயிற்று. பின்பு பாண்டியராஜன் தன் சுற் றத்தாரோடு பரியாலோசித்து அவர்கள் உடன்பாட்டினுல் தன் புத்திரியைக் கொடுக்கச் சம்மதித்தான். ஒட்டக்கூத்தர் உடனே புறப்பட்டு வந்து குலோத்துங்கச் சோழனுக்கு இது செய்தியை த்தெரிவித்தனர். சோழராஜன் தன் போதகாசிரியராகிய ஒட்டக் கூத்தரை நகரையாளும்படி வைத்துத் தான் தென்மதுரைக்குச் சென்று பாண்டியராஜனுடைய மகளை மணம்புரிந்தனன். பாண் டியன் தன் குமாரத்திக்குச் சீதனமாகப் பொன்னணி முதலியவ ற்றையும், புகழேந்திப்புலவரையும் கொடுத்தனன். சோழராசன் சீதனப்பொருள்களையும், அப்பொருள்களில் ஒருவராகிய புகழேந் திப்புலவரையும், முன்னதாகத் தனதுநகரத்துக்கு அனுப்பினன். உறையூரில் அரசுபுரிகின்ற ஒட்டக்கூத்தப் புலவர் புகழேந்திப் புலவரைக் கண்டமாத்திரத்தில், முன்னே தம்மைக் கல்வியறி வால் அவமதித்த புலவர் திலகரைச் சிறைச்சாலையில் அடைவித் துச் சற்றேனும் இரக்கம் என்பதில்லாமல் நாளொன்றுக்கு ஆழா க்கு அரிசியும், உழக்கு உப்பும் கொடுக்கும்படி உத்தரவு செய்த

னர். புகழேந்தியாரும் அவ்வாறே சிறைச்சாலையி லிருந்துகொண்டு அந்தக் காராகிரகத்தின் பக்கத்து மார்க்கமாகத் தண்ணீர்க்குச் செல்கிற பெண்களைச் சாளரத்தின் வழியாகப் பார்த்து, அவர்கள் காதுக்கு இனிமையாயும் எளிதிற் பொருள் விளங்கும்படியாயும், ஸ்ரீமஹாபாரதத்தில் சிற்சில சரித்திரங்களை எடுத்துச் சுருக்கி இக்காலத்தில் தெருக்களில் சில எளிய ஜனங்கள் உடுக்கை தட்டிப்பாடிச் சீவனஞ்செய்து கொண்டு வருகிற; அல்லியரசாணிமாலை, பவளக்கொடிமாலை, புரந்தரன் களவுமாலை எனச் செம்பாகமான பாடல்களாகப்பாட, அவைகளைக்கேட்டு மகிழ்ந்த பெண்கள்; தங்கள் தங்கள் வீட்டில்இருந்து கொண்டுவந்து கொடுக்கும் அரிசி காய்கறி முதலியவற்றில் தமக்குப் போதுமானவற்றை எடுத்துக்கொண்டு சமைத்துண்டு மிகுதியைக் காவற் சேவகர்களுக்குக் கொடுத்து வருவர். இது காரணத்தால் அவர்களும் இவர்மேல் மிகுதியும் அன்புவைத்து மரியாதையாய் நடத்திவந்தார்கள்.

இப்படி யிருக்கையில் சோழராஜன் கலியாண காரியம் யாவும் நிறைவேறின மாத்திரத்தில் தன மனையாளோடு நகரம் வந்து சேர்ந்து ஒருநாள் வீதியில் யானைமேல் பவனிவந்தான். சிறைச்சாலைத் தளத்தின்மேல் நின்று புகழேந்தியார் அச்சிறப்பைப் பார்த்துக்கொண்டிருக்க; சோழன் தன்னருகிலுள்ள ஒட்டக்கூத்

தருக்குக் காட்டி இதோ மேன்மாடத்தில் நிற்கின்ற புகழேந்திப் புலவர் சிறந்த புலவரன்றோ வென்றான். அச்சொல்லுக்குப் பொறுக்காமல் ஒட்டக்கூத்தர் புகழேந்திப்புலவரை இகழ்ந்து.

கட்டளைக் கலித்துறை.

" மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச் செத்த
கானிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றார்மன்னனே- "

என்ற பாடலைச் சொல்லினர். அதுகேட்டுப் புகழேந்திப் புலவர் இவன் அவ்வளவு சயர்த்தனறுவென்று புன்னகைசெய்து சோழனைப்பார்த்து இக்கவியைவெட்டிப்பாடவோ, அல்லது ஒட்டிப்பாடவோவென்று கேட்க, அரசன் ஒட்டக்கூத்தரிடத்தில் வைத்த அன்பால் வெட்டிப் பாடவேண்டுவதில்லை ஒட்டியேபாடுமென்ன,

அவ்வாறே.

" மானவ னனந்த வாளரி வேங்கையும் வற்றிச்செத்த
கானவ னனவ் வெரியுந் தழலுங் கனைகடலின்
மீனவ னனந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னனக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே. !'

என்று அப்பாடலையே ஒட்டிப்பாடினர். பாடியும் அரசன் ஒட்டக்கூத்தரிடத்தில் வைத்த அன்பின் மிகுதியால் சிறைமீட்கக் கருதாமற் போயினன். இது நிற்க ஒட்டக்கூத்தப் புலவர் சோழராஜனுடைய சமுகத்தில் பரிசுபெற வரும் தமிழ்ப்புலவர்களில் தாம் கேட்ட வினாக்களுக்குத் தக்க விடைதராதவர்களைச் சிறைச் சாலையிலடைத்து நவராத்திரி யுற்சவத்தில் இருவர் இருவராகக் குடிமியோடுகுடுமி முடிபோட்டு அங்குள்ள பிடாரிக்கு முன்பாக நிறுத்தி அவர்களைப் பலிகொடுப்பது வழக்கம். அவ்வழக்கப்படி புகழேந்திப் புலவர் சிறையிலிருந்த காலத்திலும் பல புலவர்கள் அடைபட்டிருந்தனர்கள். அஃது அறிந்த புகழேந்திப்புலவர் இக் கொடிய வழக்கத்தை நிறுத்தவேண்டுமெனக் கருதிச் சிறையிலிருக்கும் புலவர்களில்; குயவன், அம்பட்டன், கருமான், தச்சன், தட்டான், வண்ணான், வேளாளன் ஆகிய எழுவர்களைத் தெரிந்தெடுத்துச் சிறைச்சாலையிலேயே சம்பிரதாயத்தோடு இலக்கிய இலக்கணங்களைப் பயிற்றுவித்துச் சமர்த்தர்களாகச் செய்தனர். நவராத்திரி யுற்சவமும் சமீபித்தது; அக்காலத்தில் வழக்கப்படி அடைபட்டுக் கிடக்கும் புலவர்களைச் சிறையிலிருந்து கொண்டு வரும்படி ஏவலாளரை யனுப்ப, புலவர் திலகராகிய புகழேந்திப் புலவர் தம்மிடத்தில் கல்விபயின்று தேர்ந்தஎழுவர்களையும் முன்னே செல்லவும், மற்றயோர்களை அவர்கள் பின்னே செல்லவும் உறுதிசொல்லிஅனுப்பினர். அவர்களுள் முன்னேகுசவன்போய்

மிருதியு மிடுக்காக நின்றான். ஒட்டக்கூத்தர் அவன் மிடுக்காக நின்றதைக்கண்டு செய்யுள் செய்யுந் திறத்தை அறியும்படி.

கலி விருத்தம்.

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் ததிர்த்தவ னாரடா."

என்றனர். அதற்குக் குசவன்.—

"கூனை யுங்குடமுங் குண்டு சட்டியும்
பானை யும்பண்ணு மங்குசப் பையல்யான்."

என்று ஒட்டக்கூத்தர் தம்மை யானை எனச் சொன்னதற்கு யானையை யடக்குவது அங்குசமாகையால் அங்குசம் போன்ற பையலெனவும், தான் குசவனாதலால் அழகிய குசப்பையலென வும் சிலேடையாகப் பொருள்பட அங்குசப்பையலென்றனன். ஒட்டக்கூத்தப் புலவர் அஃது கேட்டுச் சற்று வாட்டமுற்று மற் றொருவனை யழைப்பிக்க, ஒருகண் பூப்பட்டு நின்ற அம்பட்டன் வந்தான். அவனைக்கண்டு,

கட்டளைக் கலித்துறை.

விண்பட்ட கொக்குவல் லூறுகண்டென்ன விலவிலக்கப்
புண்பட்ட செஞ்சொடு மிங்குநின் றாய்பொட்டை யாய்புகல்
[வாய்.

என, அதற்கு அம்பட்டன்.

" கண்பொட்டை யாயினு மப்பட்டனுன்கவி வாணர் முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே."

என்றான், அதைக்கேட்டுக் கலங்கி மற்றொருவனை அழைப்பிக்க, அவன்பின் கருமான் வந்துநின்றான். முன்னே கவியால் வினவினாற்போல இவனையும் வினவாமல் நீயாரென; அதற்கவன்.

கட்டளைக் கலித்துறை.

" செல்வன் புதல்வன் றிருவேங் கடவன் ஜெகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்னபேரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
அல்லும்பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே."

என்னும் பாடலைச் சொல்லினன். அதைக்கேட்ட ஒட்டக்கூத்தர் கிலேசங்கொண்டு அவனை அப்புறப்படுத்தி வேறொருவனை அழைப்பிக்கத் தச்சன் வந்து நிற்க, அவனை நீயாரென; அதற்கவன்.

இதுவுமது.

" சொன்ன சந்தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக்கவி யேதென்றபோதி லெதிர்த்தவரை
வன்னசந் தங்கெட வாயைக் கிழித்திந்த வாய்ச்சியினல்
கன்னசந் தங்கள் களிற்கவி யாப்பைக் கடாவுவனே."

என்னும் பாடலைப் பாடினன். அதைக்கேட்டுத் திடுக்கிட்டு ஏது ஈது விபரீதமாக முடிந்ததுபோல் இருக்கிறதென்று வருந்தமுற்று அவனை அடுத்து நின்றவனை அழைக்க, வண்ணான்வந்து தைரியமாக நின்றான். அவனைக்கண்டு நீயாரடாவென்று செருக்காகக் கேட்க.

" சேலைய் விழிமட வாரிற்செங் காலன்னஞ் சேர்பழனப்
பாலைய் மணவயிற் கூத்த நின்போ லியற்பாப் புனைந்த
நாலைய் துகளறத் தூய்தாக்கு நேரன்மை நுவல்வ தல்லால்
மேலைய் தமிழ்ப்புல வோரென்னை யென்னை விளம்புவதே."

என்னுங் கவியைத் தான் வண்ணானும் ஒட்டக்கூத்தர் கைக்கோளருமாதலால் பாப்புனைந்து களற எனச்செய்யப்பட்ட நூல்களில் உள்ள குற்றங்க ளறவெனவும், பாவோட்டிநெய்த வஸ்திரத்திலுள்ள மாசு நீங்க எனவும் சிலேடைபடக் கூறினன். இதை கேட்டு இவன் யாவரிலும் கெட்டவனென்று அப்புறப்படுத்தி அவனுக்கு அயலில் நின்றவனை அழைக்க, வேளாளன் ஒழுக்கமாக வந்து எதிரே நின்றான். அதுகண்டு ஒட்டக்கூத்தர் பெருங் கவிஞர்கள்முன் சிறுகவிஞர்கள் வந்து நிற்பது தகுதியோவென்றனர்; அதுகேட்டு வேளாளன்.

" கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்

காக்கின்ற மன்னா கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்களோ தமிழ் பாடிய பாவலரே."

என்னும் பாவினைக் கூறி இவனை இம்மட்டிலே விடுதல் தகுதியன்றென்று கருதி நீர் சோழராஜன்பேரில் பாடிய அண்டத்துப் பரணியில் இவ்வண்டத்தையே நகரமாகவும், சக்கரவாள கிரியையே மதிலாகவும், அதற்குப்புறத்திலுள்ள கடலகழையே அகழாகவும், பூமி நடுவிலுள்ள மகமேருவையே கோட்டைக் கொடிக்கம்பமாகவும் உருவகப்படுத்தி வருணித்திருக்கிறீரே; அகழ் மதிலின் புறத்திலன்றோ இருக்கவேண்டும், அகத்திலிருப்பதாகக் கூறியது குற்றமன்றோ; பெரும் புறக்கடலையே அகழ் எனக்கூற மறந்தீர்போலும் கம்பநாடர் அயோத்தியாநகர வருணனையில்.

கலிவிருத்தம்.

நேமிமால் வரைமதிலாக நீள்புறப்
பாம மாகடல் கிடங்காகப் பன்மணி
வாமமாளிகை மலையாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போலுமே.

என்ற செய்யுளைப் பார்த்ததும் கேட்டதும் இல்லையோ என்றான்.

அந்தமட்டிலே அக்கினிதேவனுக்கு அபிடேகஞ் செய்தாற் போலே ஒட்டக்கூத்தர் முகங்கருகி வாளாவிருந்தனர். அவரைப்பிடித்திருந்த அகங்காரத் துட்டப்பேயோ விட்டுத் தொலைந்தது, நமக்கு இவ்வளவு மானக்கேடு சம்பவித்தது புகழேந்தியாலென்று கருதி மற்ற கவிஞர்களையும் வரவழைத்து அவர்கட்குத்தக்க பரிசு அரசனைக்கொண்டு கொடுப்பித்து, அவர்கள் யாவரையும் தங்கள் தங்களிடத்திற்குப் போகும்படி செலவு கொடுத்தனர்.

இச்சேதிகள் யாவும் தோழிகளால் அரசன் மனைவி கேள்வியுற்று புகழேந்திப்புலவரை இன்னம் அரசன் சிறையினின்றும் விடுவித்தல் செய்யவில்லை என மனம் வருத்தமுற்றுப் பள்ளியறைக்குத் தன்னாயகனாகிய சோழராசன்வரும்போது வீட்டு வாயிற்கதவைச் சாத்தித் தாள்பூட்டிக்கொண்டனள். தான் பற்பல இனிய மொழிகளைக் கூறியும் திறவாமையால் அரசர்கள் தங்களுக்கும் தங்கள் மனைவிமாருக்கும் ஊடல் முதலியன நிகழ்ந்தபோது, தங்கள் பாலுள்ள புலவரைக் கொண்டு தீர்த்துக் கொள்ளுதல் வழக்கமாதலினால் இவளுடைய தணிவைத் தீர்க்கும்படி ஒட்டக்கூத்தரை அனுப்பினன், அவர்போய்,

நானே யினியுன்னை வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடு வாய்திற வாவிடிலோ
வானே றனைய விரவி குலாதிபன் வாசல் வந்தால்
தானே திறக்குநின் கைத்தல மாகிய தாமரையே.

என்ற கவியைக் கூறினர். அவர் பாடலைக் கேட்ட அளவில் மிகுதியுஞ் சினங்கொண்டு ஒட்டக்கூத்தன் டாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்று மற்றொரு தாழ்ப்பாளும் போட்டனள். ஒட்டக்கூத்தர் உடனே வந்து அரசனுக்கு அதைத் தெரிவித்தனர். நம்முடைய மனைவிக்கு யாதொரு வழுவுதலும் இன்றி வேண்டியதை வேண்டியபடியே நடத்திவருகையில், இப்படிப்பட்ட துணிபுண்டாவதற்கு எனனிமித்தமெனத் தனக்குள்ளே எண்ணிப் புகழேந்திப்புலவரைச் சிறையில் வைத்திருக்கின்றோமே இதுவே யாமெனத் துணிந்து, சிறைநீக்கித் தன்மனையாளுடைய ஊடலைத் தீர்க்கும்படி அனுப்பினன். அவரும் அவ்வாறே சென்று:—

இழையொன் றிரண்டு வகிர் செய்த நுண்ணிடை யேந்திழைபொற், குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி, மழையொன் றிரண்டு கைம்மானு பரணனின் வாசல் வந்தால், பிழையொன் றிரண்டு பொறுரோ குடியிற் பிறந்தவரே,

என்ற கவியைக் கூறினர். இக்கவியைக் கேட்ட வளவில் மனமகிழ்ந்து சோழன் மனைவி துனி தீர்ந்தனள். அதுமுதல் சோழராஜன் புகழேந்திப் புலவரை மேம்பாடாகவே தன்னுடைய சமஸ்தானத்தில் வைத்துக்கொண்டு பரிபாலித்து வந்தனன். ஆயினும் ஒட்டக்கூத்தர் முன் தம்மைச்சிறையில் அடைவித்ததையும், இப்போதும் தம்மேல் பொறாமையா யிருப்பதையுந் தெரிந்துகொண்டு அக்கருத்தை அரசனுக்குத் தெரிவிக்காமல், உறையூரைச் சார்ந்த மள்ளுவமென்னும் ஒரு சிறியநாட்டில் முரணூரிலிருந்த சந்திரன் சுவர்க்கியென்னும் அரசனிடஞ்சேர்ந்து அவனுடைய வேண்டுகோளால் நளவெண்பாவாகிய இந்நூலைச் செய்து தக்க பரிசுபெற்று வாழ்ந்திருந்தனர்.

சிலநாள் கழிந்தபின்னர் குலோத்துங்கச் சோழன் புகழேந்திப்புலவர் நளவெண்பா நூலைச் செய்து முரணைநகரில் சந்திரன் சுவர்க்கியென்பவனால் ஆதரிக்கப்பட்டிருக்கும் செய்தியைக் கேள்வியுற்று அதிமரியாதையோடு அவரை வரவழைத்துத் தன்னுடைய சமுகத்தில் பிரசங்கிக்கும்படிக் கேட்டுக்கொண்டனன். அவரும் ஓமென ஒத்துக்கொண்டு கம்பநாடர் ஒட்டக் கூத்தர் முதலிய தமிழ்ப் புலவர்கள் முன்னிலையில் உபந்யாசஞ் செய்கையில்.

### வெண்பா.

மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்

மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

இப்பாடலைச் சொல்லும்போது ஒட்டக்கூத்தப் புலவர் மல்லிகையரும்பைச் சங்காகவும், வண்டைச் சங்கூதம் செய்பவனாகவும் கற்பித்தது உசிதமே, சங்கூதுவோன் அதன் அடியையன்றோ வாயில்வைத்து ஊதுவான், அப்படி வண்டு அம்மலரின் அடிப்புறத்தில் ஊதுகிறதில்லையே; ஆதலால் இந்த வருணனை குற்றமென்றார்.

உடனே கம்பநாடர் புகழேந்திப்புலவரை நோக்கிக் கண்சைகை செய்தனர். அதை உணர்ந்து கொண்டு புகழேந்தியார் கட்குடியனுக்குச் சூத்தென்றும் வாயென்றும் தெரியுமா என்றார். அப்புறம் மேலுள்ளபாடல்களை சொல்லி பொருள் சொல்லுகையில்:—

செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன் பொதிந்துநின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன் பொதிந்த வாயாற் றெரிந்து.

என்ற பாடலில் ஒட்டக்கூத்தர் நீர் விண்மீன்கள்அடர்ந்த வானத்தைத், திங்கட்சுடர்பட்டுக் கொப்புளங்கொண்ட குளிர்

வான் என்றது வியக்கத்தக்கதே; அக்கொப்புளத்தி லிருந்து போவது சிலைநீராவது வடியுமே அது யாதோவெனக்கு சோத்தியமாய்க் கேட்க, புகழேந்தியானவர் சீவடியவில்லை சிலைநீர் வடிவதுண்டு அதுதான் பனி என்றார். இவ்வாறுசிலகுதற்கமான கேள்விகளுக்கெல்லாம் உத்தரம் சொல்லி அவர் நாவை அடக்கினர். கம்பரும் புகழேந்திப்புலவர் சார்பாகவே நின்று புகழ்ந்தார். அரசனும் புகழேந்திப்புலவருக்குத் தக்கபரிசளித்தனன்.

ஒட்டக்கூத்தர் இப்படித் தமக்கு நேரிட்ட அவமானத்தையெல்லாம் பெரிதாக எண்ணாமல் புகழேந்திப்புலவருடைய கல்வித்திறத்தைத் தமக்குள்ளே வியந்துகொண்டு ஒருநாள் இராத்திரி படுத்திருக்கையில் அவர்மனைவி போசனகால மாகிறதென்றாள். ஆயினும் நான் புசியேன் என்றார். சக்கரைச்சேர்ந்த பால் கொண்டு வருகிறேன் என்றாள். அதுகேட்டு, சக்கரையோடு சேர்ந்த பாலன்று புகழேந்தி செய்த நளவெண்பாவின்,

இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்
அற்றது மான மழிந்ததுநாண்—மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து.

எனவும்,

கொங்கை யிளநீராற் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பாற்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின்—மங்கைநறுங்

கொய்தாம வாசக் குழனிழற்கீ ழாறேனே
வெய்தாமக் காம விடாய்.

எனவும்,

மன்னாகத் துள்ளமுந்தி வாரணிந்த மென்முலையும்
பொனனாணும் புக்கொளிப்பப் புல்லுவனென்—றன்னோ
எடுத்தபே ரன்பை யிடையே புகுந்து
தடுத்ததே நாணுந் தறி.

எனவும்,

எக்குலத்தா யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
சொக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்
விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து.

எனவும்,

காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ வோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை.

எனவும்,

மற்றும் பலவகையாகவும் சொல்லப்படும் கவிகளில் காலை
ந்தை எடுத்துப்பிழிந்து அந்த இரசத்தைக்கொண்டு வந்தாலும்

உண்ணேன் போவென்றார். தம்மையும் தம்முடைய பாடலையும் வியக்காமையால் ஒட்டக்கூத்தனைக் கொல்ல வெண்ணித் தற்செயலாய் அன்றுவந்து ஒளித்திருந்த புகழேந்திப்புலவர் பொருக்கென வெளிப்பட்டு நின்று அவர் பாற் கொண்ட பகைமையைவிட்டுச் சிநேகத்தைப் பாராட்ட அவரும் மனமொத்து நட்புப் பாராட்டினர்.

குலோத்துங்கச்சோழனும் இச்செய்தி கேட்டு மனமகிழ்ந்து அவ்விருவரையுநோக்கி நெய்த்தானம் என்னும் தலத்தில் எழுந்தருளி இராநின்ற சிவபெருமான்மேல் நெய்த்தானத்தானைச்சேவித்தே னென்பது மகுடமாக எண்சீர்க்கழிநெடில் சந்த விருத்தம் பாடும்படி சொல்ல ஒட்டக்கூத்தர்:—

விக்கா வுக்கா வித்தா விப்போய்
  விட்டா னட்டார் சுட்டேர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே
  யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூ
  ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்
நெக்கா டக்கா னத்தா டப்போ
  நெய்த்தா னத்தா னைச்சே வித்தே.

என்கிற பாட்டையும், புகழேந்திப்புலவர்,

தற்கோ லிப்பூ சற்பா சத்தே
தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே
முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேன்
மைப் பூகத்தே றித்தா விப்போம்
நெற்று ளூற்று லேப்பா கிற்சேர்
நெய்த் தானத்தா னேச்சே வித்தே.

என்கிற பாடலையும் பாடினார்கள். மற்றொருநாள் திருக் குறுங்குடி யென்னும் தலத்தில் பெருமாள்மேல் வல்லோசை யுள்ள கட்டளைக்கலித்துறை பாடும்படி அரசன்கேட்டுக்கொள்ள ஒட்டக்கூத்தர்.

திக்குளெட்டுக்கயந் துக்கமுற்றுத்திடுக் கிட்டலற
மைக்கடற்குட்சரந் தைக்கவிட்டோற்கிட மாமதுர
இக்குமுற்றிக்கனுச் சுற்றுவிட்டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக்கிக்கக்கி விக்குமச்சோலைக் குறுங்குடியே.

என்றொருபாட்டும், புகழேந்திப்புலவர்.

எட்டெழுத்தைக் கருத்திற் குறித்திட்டு நித்தம் பரவுஞ்
சிட்டர்கட்குத் திருப்பொற் பதத்தைச் சிறக்கத்தருமவ்

வட்டனெட்டைப்பணி மெத்தையத்தற்கிடம் வாரிசப்பொ
ருட்டினத்துக்குலந் தத்திமுத்தீனுங் குறுங்குடியே.

என்றொரு பாட்டும் பாடினார்கள். குலோத்துங்கச் சோ
ழன் உள்ளங்களித்து முன்போலின்றி இருவருக்கும் சர்வோப
சாரங்களையும் சமமாகவே நடப்பித்து வந்தான். இவ்வாறு புக
ழேந்திப்புலவர் சோழநாட்டிலிருந்து காலங்கழித்தனர்.

## ஆசிரிய விருத்தம்.

வெண்பாவிற்புகழேந்தி பரணிக்கோர் செயங்கொண்டான்
விருத்தமென்னு, மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா வந்
தாதிக் கொட்டக்கூத்தன், கண்பாயகலம்பகத்திற் கிரட்டையர்
கள் வசைபாடக் காளமேகம், பண்பாகப் பகர்சந்தம் படிக்காச
லாதொருவர் பகரொணாதே.

புகழேந்திப் புலவர் சரித்திரம்

முற்றிற்று.

கடவுள் துணை.

# நளவெண்பா.



## சிறப்புப்பாயிரம்.

### தெய்வவணக்கம்.

விநாயகக்கடவுள்

நேரிசை வெண்பா.

நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாம் - ஈசன்
கரியா னனத்தான் கருது புகழ் பூண்ட
கரியா னனத்தான் கழல்.

மற்றொருபாடம்.

சடகோபமுனிவர்.

நேசரிதங் கூற நிலவலயந் தாங்கு நளன்
மாசரிதங் கூற வருந்துணையாப் - பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்றாண் மலர்.

### சுப்பிரமணியர்.

நீலநெடுங் கொண்மூ நெற்றி கிழனுறிக்
காலையிருள் சிக்குங்காய் கதிர்போல் - சோலை
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்றோன்
அணிச் சேவடியெம் மரண.

### சிவபெருமான்.

கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை
உலாவு சடைமே லுறையு - நிலாவை
வழிய வார்த் தாலன்ன மாநீற்றார் நாகம்
கழிய வார்த் தார் நமக்கோர் காப்பு.

### திருமால்.

ஆதித் தனிக்கோல மானு னடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினன் - வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே யெனவழைப்ப
என்னென்று னெங்கட் கிறை.

### அவையடக்கம்.

வெந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
தந்துவினுற் கட்டச் சமைவ தொக்கும்-பைந்தொடையில்
தேன்பாடுந் தார்களன்றன் றெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது.

ஸ்ரீ

# நளவெண்பா மூலம்.

# சுயம்வர காண்டம்.



## ஆசிரியன் பெயர்.

பாரார் விடத பதிநளன்சீர் வெண்பாவாற்
பேரார் புகழேந்தி பேசினான் - தாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொண்
மொழியின் சுவையே முதிர்ந்து.

## நூல்.

பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்றொருநாள்
ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி வேண்ட
மறுத்தா னிருந்தானை மண்ணொடும் போய் மாளப்
பொறுத்தா னிருந்தான் புலர்ந்து 1

நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோர்
ஈட்டங்கள் சூழ விருந்தானைக் - காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
ஒருந்தகைய ரெல்லாரும் வந்து. 2

கொற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தான்
எற்றுநீர் ஞாலத் திருணீங்க - முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
மொழி முறையே கோத்த முனி. 3

மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லாம் - அறவே
பிழைத்தேன்யா னென்றனப் பேராழி யானை
அழைத்தேவல் கொண்ட வரசு. 4

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கு முள்ளத் துரவோனே - சித்தம்
வருந்தியவா றென்னென்றான் மாமறையா னுள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் றேர்ந்து. 5

அம்பொற் கயிலைக்கே யாகத் தரவணிவார்
தம்பொற் படைக்குத் தமியனு-எம்பியைமுன்
போக்கினே னென்றுரைத்தான் பூதலத்து மீதலத்தும்
ஊக்கினே ரில்லாத மன். 6

காண்டா வனந்தீக் கடவுளுணக் கைக்கணையால்
நீண்ட முகிறடுத்து நின்றற்கு - மீண்டமரர்
தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடியநாள்
தோளிரண்டு மன்றே துணை. 7

பேரரசு மெங்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேர்வரிய வெங்கானஞ் சேர்தற்குக் - காரணந்தான்
யாதோவப் பாவென்றா னென்றாந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய்.

கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண் - வாடிக்
கலங்கலீ யென்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலைநூன் மார்ப னெடுத்து. 9

கண்ணிழந்து மாயக் கவறுருடிக் காவலர்தாம்
மண்ணிழந்து போந்து வனநண்ணி விண்ணிழந்த
மின்போலு நூன்மார்பா மேதினியில் வேறுண்டோ
என்போ லுழந்தா ரிடர். 10

சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செங்தனிக்கோல்
நாமவேற் காளைநள னென்பான் - யாமத்
தொலியாழி வைய மொருங்கிழப்பப் பண்டு
கலியால் விளைந்த கதை. 11

நாட்டுச் சிறப்பு.

காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் றளையவிழப் - பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு. 12

நகரச் சிறப்பு.

கோதை மடவார்தங் கோதின்மெயிற்றிமிர்ந்த
சீத களபச் செழுஞ்சேற்றால் - வீதிவாய்
மானக் கரிவழுக்கு மாவிந்த மென்பதோர்
ஞானக் கலைவாழ் நகர். 13

நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்று மகில்கமழு மென்பரால் - தென்றல்
அலர்த்துங் கொடிமாட தாயிழையா ரைம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து. 14

வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன - கஞ்சம்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு. 15

தெரிவன நூலென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே - ஒருபொழுதும்
இல்லா தனவு மிரவே யிகழ்ந்தெவரும்
கல்லா தனவுங் கரவு. 16

மாமனுநூல் வாழ வருசந் திரன் சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான் - காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி. 17

ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டோ - டோ
முருகுடைய மாந்தர் முகநனைக்குந் தண்டார்
அருகுடையான் வெண்குடையா னங்கு. 18

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான் - மாதர்

அருகூட்டும் பைங்கிளியு மாடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ வுலகு. 19

## சோலைக்குச் செல்லுதல்.

வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான் - தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன்
பூநாடிச் சோலை புக. 20

வென்றி மதவேட்டன் வில்லெடுப்ப வீதியெலாம்
தென்றன் மதுநீர் தெளித்துவர - நின்ற
இளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற
இளவேனில் வந்த தெதிர். 21

தேரிற் றுகளைத்திருந்திழையார் பூங்குழலின்
வேரிப்புன லணைப்ப வேயடைந்தான் - கார்வண்டு [கிப்
தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருள்வெய்யோற்கொதுங்
புக்கிருந்தா லன்ன பொழில். 22

## அன்னம் வெளிப்படல்.

நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்
தாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப மாணிறத்தான்
முன்னப்புட் டோன்று முளரித்தலைவைகும்
அன்னப்புட் டோன்றிற்றே யாங்கு. 23

பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமல்
மேதிக் குலமேறி மெனகரும்பைக் - கோதிக்
கடித்துத்தான் முத்துமிழுங் கங்கை நீர்நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து. 24

நாடிமட வன்னத்தை நல்லமயிற் குழாம்
ஓடி வளைக்கின்ற தொப்பவே - நீடியநற்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து. 25

அன்னந்தனைப் பிடித்தங் காயிழைபார் கொண்டுபோய்
மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே - அன்னம்
மயங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு. 26

அஞ்சன் மடவனமே யுன்றனணி நடையும்
வஞ்சி யனையார் மடநடையும் - விஞ்சியது
காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன். 27

செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம் - வெய்ய
அடுமாற்ற மில்லா வரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான். 28

திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள் - வசையில்

தமையந்தி யென்றே தந்தையலாண் மென்றேள்
அமையந்தி யென்றே ரணங்கு. 29

அன்ன மொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச்-சொன்னமயில்
ஆர்மடந்தை யென்று னனங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து. 30

எழுவடுதோண் மன்ற விலங்கிழையோர் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை - உழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயு மாடொலிநீர் நாடன்
கொடை விதர்ப்பன் பெற்றதோர் கொம்பு. 31

நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே யணிமுரசா - வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு. 32

மோட்டினங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு - நாட்டேன்
அலம்புவார் கோதை யடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு. 33

என்று நுடங்கு மிடையென்ப வேழுலகும்
நின்ற கவிகை நிழல்வேந்தே - ஒன்றி
அறுகாற் சிறுபறவை யஞ்சிறகால் வீசும்
சிறுகாற்றுக் காற்றுது தேய்ந்து. 34

செங்தேன் மொழியாள் செறியளக பந்தியின்கீழ்
இந்து முறியென் றியம்புவார் - வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
ஏவாளி தீட்டு மிடம். 35

அன்னமே நீயுரைத்த வன்னத்தை யென்னாவி
உன்னவே சோரு முனக்கவளோ - டென்ன
அடைவென்றான் மற்றந்த வன்னத்தை முன்னே
நடைவென்று டன்பா னயந்து. 36

பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவடன்
மாமனைவாய் வாழு மயிற்குலங்கள் - காமன்
படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாத
நடைகற்பான் வந்தடைந்தே நாம். 37

இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்
அற்றது மான மழிந்தது நாண் - மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து. 38

வீமன் றிருமகளா மெல்லியலை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன் - சேம
நெடுங்குடையா யென்றுரைத்து நீங்கியதே யன்னம்
ஒடுங்கிடையா டன்பா லுயர்ந்து. 39

இவ்வளவிற்செல்லுங்கொ லிவ்வளவிற்காணுங்கொல்
இவ்வளவிற் காத லியம்புங்கொல் - இவ்வளவில்

மீளுங்கொ லென்றுனையா விம்மினுன் மும்மதநின்
றாளுங்கொல் யானை யரசு. 40

சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டான் - பூவின்
இடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னந் தன்பா னயந்து. 41

அன்ன முரைத்த குயிலுக் கலசுவான்
மென்மயிறன் றோகை விரித்தாட - முன்னதனைக்
கண்டாற்று துள்ளங் கலங்கினுள் காமநோய்
கொண்டார்க்கி தன்றே குணம். 42

வார்ரணியுங் கொங்கை மடவா ளுடங்கிடைக்குப்
பேருவமை யாகப் பிறந்துடையீர் - வாரீர்
கொடியா ரெனச்செங்கை கூப்பினு னெஞ்சத்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து. 43

கொங்கையிளநீராற் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பாற்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின் - மங்கைநறுங்
கொய்தாம வாசக் குழனிழற்கீ ழாறேனே
வெய்தாமக் காம விடாய். 44

மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய - நன்னுதலும்

தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந்தாங்கதனை
யென்னுடல் சொல்லென்று ளீங்கு. 45

செம்மனத்தான்றண்ணளியான்செங்கோலான்மங்கையர்கள்
தம்மனத்தைவாங்குந் தடந்தோளான் - மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்து நானிலத்து மிக்கான்
உளனென்பான் வேந்த னுனக்கு. 46

அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியுந் - திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு. 47

புள்ளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
உள்ளங்கவர வொளியிழந்த - வெள்ளை
மதியிருந்த தாமென்ன வாய்ந்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன். 48

மன்னன் மனத்தெழுந்த மையலை யத்தனையும்
அன்ன முரைக்க வகமுருகி - முன்னம்
முயங்கினாள் போற்றன் முலைமுகத்தைப்பாரா
மயங்கினா ளென்செய்வாண் மற்று. 49

வாவியுறையு மடவனமே யென்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியால் - காவினிடைத்

தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தியென் றுரைத்
தாள், பார்வேந்தன் பாவை பதைத்து. 50

மன்னன் புயமின் மலர்க்கைக்குக் கச்சாகும்
என்ன முயங்குவிப்பே னென்றன்னம் - பின்னும்
பொருந்த வன்பா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய
இருந்தவன்பாற் போன தெழுந்து. 51

## வீமராசனுக்கு அறிவித்தல்.

கொற்றவன்றன்றேவிக்குக் கோமகடன் றோழியர்கள்
உற்றதறியா வுளமடங்கிப் - பொற்றொடிக்கு
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி. 52

கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப்பைங்கால்
மருங்குலவ வார்முரச மார்ப்ப - நெருங்கு
புரிவளையின் றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாண் மனை. 53

கோதைசுமந்த கொடிபோலிடை நுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள் - மீதெல்லாம்
கார்தாரம்பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தார மெல்லோதிப் பொன். 54

பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மேல்
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப்-பாராக்

குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளு மணம். 55

## தூதனுப்பல்.

மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கு மறைகென் றியம்பினான் - பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு. 56

மாமுத்தவெண்குடையான் மால்களிற்றான் வண்டிசைக்கும்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி - நாமத்தார்
பாவேய்ந்த செந்தமிழா மென்னம் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம். 57

செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள்வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய் - வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து. 58

புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார் - தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு. 59

வழிமேல் விழிவைத்து வாணுதலா ளும
மொழிமேற் செவிவைத்து மோகச் - சுழிமேற்றன்
செஞ்சோட வைத்தயர்வான் கண்டா னெடுவானில்
மஞ்சோட வன்னம் வர. 60

முகம்பார்த் தருணோக்கி முன்னிரந்து செல்வர்
அகம்பார்க்கு மற்றோரைப் போல - மிகுங்காதல்
கேளா விருந்திட்டா னன்னத்தைக் கேளாரை
வாளால் விருந்திட்ட மன். 61

அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
என்னுயிரை மீள வெனக்களித்தாய் - முன்னுரைத்த
தேமொழிக்குத் தீதிலவே யென்றான் றிருந்தாரை
ஏமொழிக்கும் வேலா னெடுத்து. 62

கொற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடிபால்
உற்றதுவு மாங்கவடா னுற்றதுவு - முற்றும்
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு. 63

கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
ஓட்டை மனத்தோ டுயிர்தாங்கி - மீட்டும்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான்
தழலிற் படுதளிர்போற் சாய்ந்து. 64

கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினர் - போதில்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலி நீர்நாடன்
அடையாத வாயி லகம். 65

நளராஜன் சுயம்வரத்திற்கு வருதல்.

காவலன்றன் றூதர் கடைக்கா வலர்க்கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலும் - மாவின்
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்த தோள் வேந்தன் விரைந்து. 66

கெட்ட சிறுமருங்குற் கீழ்மகளிர் நீள்வரம்பில்
இட்ட பசுங்குவளை யேரடித்த - கட்டி
கரையத் தேனூறுங் கடனாட னூர்க்கு
விரையத்தே ரூரென்றான் வேந்து. 67

சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டான்-அடற்கமைந்த
வில்லியரும் பொற்றும வீமன் றிருமகளா
நல்லுயிரும் வாழு நகர். 68

நாரதமுனிவர் தேவநலகிற் சேருதல்.

நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்கும்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்-உற்றடைந்தான்
தேனுடிந் தெய்வத் தருவுந் திருமணியும்
வானுடுங் காத்தான் மருங்கு. 69

வீரர் வில்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்
ஆரு மிலராலென் றையுற்று-நாரதனார்
நன்முகமே நோக்கினா னாகஞ் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து. 70

வீமன் மடந்தை மணத்தின் விரை தொடுத்த
தாமம் புனைவான் சுயம்வரத்து-மாமன்னர்
போயினா ரென்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன். 71

அழகு சுமந்திளைத்த வாகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தற் பாவை-மழகளிற்று
வீமன் குலத்துக்கோர் மெய்தீப மற்றவளே
காமன் திருவுக்கோர் காப்பு. 72

## இந்திரன் முதலியோர் சுயம்வரத்திற்கு வருதல்.

மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்-சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து. 73

பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற்போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்-முந்தி
வருவான்போற் றேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானிற் றேவர் பெரிது. 74

காவற்குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற்றொழிலுக் கிசையென்றான்-ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினான் மற்றதனை
இன்னதென வோரா திசைந்து. 75

தேவர்கள் நளனைத் தமையந்தியினிடத்தில்

தூது அனுப்புதல்.

செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
எங்களிலே சூட்ட வியல்வீமன்-மங்கைபால்
தூதாக வென்றானத் தோகையைத்தன் னாகத்தாற்
கோதாக வென்றானக் கோ. 76

தேவர் பணிதலைமேற் செல்லுந் திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபால் மீண்டேகும்-பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவின்
நிழல்போலுந் தண்குடையா னெஞ்சு. 77

ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரிற்-காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
அடக்குமா றுள்ளத் தவன். 78

வார்வெஞ் சிலையொழிய வச்சிரந்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்-யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாருந் தாரானைப் பார்த்து. 79

இசைமுகந்த வாயு மியலறிந்த நாவுந்
திசைமுகந்தா லன்ன தெருவும்-வசையிறந்த
பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்ப
னன்னாடர் கோமா னகர். 80

தேங்குவளை தன்னிலே சேர்தா மரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே-ஆங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது. 81

நீண்ட கமலத்தை நீலக்கடை சென்று
தீண்டு மளவிற் றிறந்ததே-பூண்டதோர்
அற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்றாழ் வீழ்ந்த கதவு. 82

உய்ஞ்சுகரையேற வொட்டுங்கோ லொண்டொடியான்
நெஞ்சு தடவு நெடுங்கண்கள்-விஞ்சவே
நீண்டதோ வங்ஙனே யிங்ஙனே நீண்மலராள்
ஆண்ட தோண் மன்ன னழகு. 83

மன்னாகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னாணும் புக்கொளிப்பப் புல்லுவனென்-றுன்னா
எடுத்தபே ரன்பை யிடையே புகுந்து
தடுத்ததே நாணந் தறி. 84

## தமையந்தி வினவுதல்.

காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ - தேவனோ
உள்ளவா சொல்லென்று ளூசற் குழைமீது
வெள்ளவா ணீர்சோர விட்டு. 85

தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும்
நீரா லவித்துக் கொடுநின்று - வாராத
பொன்னாட ரேவலுடன் போந்தவா சொல்லித்தன்
றன்னாடுஞ் சொன்னா னளன். 86

என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை - மென்மாலை
சூட்டுவா யென்றான் றொடையிற்றேன் றும்பிக்கே
ஊட்டுவா னெல்லா முரைத்து. 87

இயமரநின் றார்ப்ப வினவளைநின் றேங்க
வயமருதோண் மன்னா வகுத்த-சுயம்வரந்தான்
நின்பொருட்டாலென்று நினைகென்று ணீள்குடையான்
தன்பொருட்டா லைவா டளர்ந்து. 88

போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே - சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களு நீயும்
எழுந்தருள்க வென்றா ளெடுத்து. 89

## நளன் தமயந்தியினிடத்தில் தூதுசென்று திரும்பல்.

வானவர்கோ னேவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே - தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டா ருவப்பக் கலந்து. 90

விண்ணவர்த மேவலுடன் வீமன் றிருமகள்பால்
நண்ணு புகழ்நளனு நன்குரைத்த - பெண்ணணங்கின்
வன்மொழியுந் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு. 91

## தேவர்கள் நளனுக்கு வரமளித்தல்.

அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே - சங்கையறப்
பெற்று யெனவருண னுகண் டலன்றருமன்
மற்றேனு மீந்தார் வரம். 92

அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடுந் தார்வேந்தன் சார்ந்தனன்மேல் - மங்கை
வயமருவு கின்ற மனக்காவலர்க்குச்
சயமரந்தான் கண்டதோர் சார்பு. 93

## தமயந்தி வருந்தல்.

தூதுவந்த காலனைச் சொல்லிச் செலவிடுத்த
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால் - யாதும்

அயிர்த்தா ளுயிர்த்தா ளணிவதன மெல்லாம்
வியர்த்தா ளுரைமறந்தாள் வீழ்ந்து. 94

உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போல் - பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் றிருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர். 95

பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென்
ஆவியார் போனலு மவ்வழியே-பாவியேன்
ஆசைபோ காதென் றழிந்தா ளணியாழின்
ஓசைபோற் சொல்லா ளுயிர்த்து. 96

வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்பப் - டையவே
செவ்வாய வன்றி றுணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு. 97

## சூரியன் அஸ்தமிந்தல்.

மாவிரு ஞாலத் துயிர்காண வானரங்கிற்
பாயிரு ளென்னும் படாம்வாங்கிச் - சேய்நின்
றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை. 98

மல்லிகையே வெண்சங்கா வண்டூத வாள்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப - முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது. 99

புற்கென்ற ரந்தி புனைமலர்க்க ணீரரும்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான் - முற்கொண்
டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கும்
இடைநின்ற காலம்போ லின்று. 100

பைந்தொடியா ளாவி பருகுவா னிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன - வந்ததால்
மையார் வேற்கண்ணாள் வனமுலைமே லாரழலைப்
பெய்வா னமைந்த பிறை. 101

கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டால்
கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள் - ஈட்டுமணிப்
பூணிலா மென்முலைமேற் போதச் சொரிந்ததே
நீணிலா வென்னு நெருப்பு. 102

அன்னங்கா ணீங்களுமவ் வாதித்தன் றானும்போய்
மன்னும் படியகலா வல்லிரவின் - மின்னும்
மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள்
பிழைத்தால் வந்தேனென்னும் பேர். 103

செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை - இப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து. 104

கானுந் தடங்காவுங் காமன் படைவீடு
வானுந் தேர்வீதி மறிகடலும் - மீனக்
கொடியாடை வையமெல்லாங் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய். 105

கொள்ளையோ வின்ற துயிரென்னுங் கோளரவின்
முள்ளெயிறோ மூரி நிலாவென்னும் - உள்ளம்
கொடிதிரா வென்னுங் குழையுந் தழல்போல
நெடிதிரா வாய்புலரா நின்று. 106

வெங்கதிரோன் றன்னை விழுங்கிப் புழுங்கியோ
கொங்கை யனலிற் கொளுந்தியோ - திங்கள்
விரிகின்ற வெண்ணிலவால் வேகின்ற தேயோ
எரிகின்ற தென்னோ விரா. 107

ஊழி பலவோ ரிரவாயிற் றோவென்னும்
கோழி குரலடைத்த தோவென்னும் - ஆழி
துயிலாதோ வென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து. 108

ஆடி வரிவண் டருகே பறக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமேல் - ஓடிப்

பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ மோகத்
துறைவா யடங்காத் துயர். 109

ஈர மதியே யிளகிலவே யிங்ஙனே
சோர் குழலின் மீதே சொரிவதெவன் - மாரன்
பொரவளித்தான் கண்ணி யுனக்குப் புலரா
இரவளித்தா னல்லனோ வின்று. 110

தூங்கு நிலவின் றழல்போய்த் தலைகொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப -வோங்குயிர்ப்பின்
தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
யாமங் கரியாக வின்று. 111

மையுற்ற கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து -மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வா டவம். 112

அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய் - உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதையமே போன்ற திரா. 113

ஊங்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர் - காக்க
இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடைவா யிருள்புடைத்தார் போன்று. 114

சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு - காமன்றன்
பூவாளி யைத்திற் புகத் துயில்புக்கதே
ஓவாது முந்நீ ருலகு. 115

ஊன்றின் றுவகையா லுள்ள வுயிர்பிறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே - தான்றன்
உரைசோரச் சோர வுடல்சோர வாயி
னிரைசோரக் கைசோர நின்று. 116

அன்றிலொருகண் டுயின்றொருகண் ணார்வத்தால்
இன்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொல் - இன்று
தவிர்ந்ததே போலரற்றிச் சாம்புகின்ற போதே
அவிழ்ந்ததே கண்ண ரவட்கு. 117

ஏழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
ஆழ்துயர மேதென் றறிகிலேன் - பாழி
வரையோ வெனுநெடுந்தோண் மன்னுவோதின்னும்
இரையோ விரவுக் கியான். 118

கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்குல்
உருவிப் புகுந்ததா லூதை - பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
உண்டுபோ கட்ட வுயிர்க்கு. 119

எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச்-செழுந்தாளத்
தானோடு சேர்க்குந் துணையேது மில்லாதே
நானோடு நின்றழிவா ணைந்து. 120

விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும்-புரிகுழலைத்
தாங்குந் தளருந் தழலே செடிதுயிர்க்கும்
ஏங்குந் துயரோ டிருந்து. 121

உடைய மிடுக்கெல்லா மென்பேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ-கொடியன்மேல்
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
வேகாத தென்னோ விரா. 122

மயங்குந் தெளியு மனநடுங்கும் வெய்துற்
றுயங்கும் வறிதே யுலாவும்-வயங்கிழைபோய்ச்
சோறுந் துயிலுந் துயிலாக் கருநெடுங்கண்
நீருங் கடைசோர நின்று 123

சூரியன் உதித்தல்.

விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதும் வழிதேங் கங்குல் பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்தம்
அருயிர்க்கு முண்டோ வரண். 124

பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமித மும்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப-வாசம்
அலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது. 125

வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினன்-வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று. 126

முரசெறிந்த நாளேழு முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்-விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையுங்
காலை முரசுங் கலந்து. 227

மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீல-முன்றில்
குறுவிழுக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய். 125

சித்திலத்திற் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல வயவேந்தர்-சித்தம்
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்
அருங்கேழ் மணிப்பூ ணணங்கு. 129

பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போல்
கோதை மடமானைக் கொண்டணைந்த-மாதர்

மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கி னவே மேன்மே னிறைந்து. 130

மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்-மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று. 131

வடங்கொள் வனமுலையாள் வார்குழைமே லோடும்
நெடுங்கட் கடைபார்த்து நின்றான்-இடங்கண்டு
பூவாளி வேந்தன்றன் பொன்னும் பின்னேயிட்
டேவாளி நாணின்மே லிட்டு. 132

மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன படிசென் றியலணங்கு முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. 133

பொன்னி யமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவுந் திருநாடன்-பொன்னிற்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றன்னோர்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண். 134

போர்வாய் வடிவேலாற் போழப் படாதோருஞ்
சூர்வாய் மதகரிக்கட் டோகாய்கேள்-பார்வாய்ப்
பருத்ததோர் மால்வரையைப் பண்டொருகாற் செண்டால்
திரித்தகோ னிங்கிருந்த சேய். 135

வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போற்
குன்றருவி பாயுங் குடநாடன்-நின்றபுகழ்
மாதே யிவன்கண்டாய் யானத் தனிக்கொடியின்
மீதே சிலையுயர்த்த வேந்து. 136

ஆழிவடி யம்பலம்ப நின்றானு மன்றொருகால்
ஏழிசைநூற் சங்கத் திருந்தானும்-நீள்விசும்பில்
நற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானுங் கண்டாயிச் சேய். 137

தெரியி லிவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலையென் றஞ்சி-இரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புட் டாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன். 138

தேமருதார்க் காளை யிவன்கண்டாய் செம்மலர்மேற்
காமருசங் கீன்ற கதிர்முத்தைத்-தாமரைதன்
பத்திரத்தா லேற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன். 139

அஞ்சாயன் மானே யிவன்கண்டா யாலைவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த-செஞ்சாலிப்
பச்சைத்தாள் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சத்தார் கோமான் மகன். 140

வண்ணக் குவளை மலர்வவ்வி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்துப் பைங்குவளை-உன்னு

தருக்கடா நிற்கு மவர்திரா டாளும்
இருக்கடா யானை யிவன். 141

விடக்கதிர்வேற் காளை யிவன்கண்டாய் மீனின்
தொடக்கொழியப் போய்மிளிர்ந்த தூண்டில்·மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் சென்னெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன். 142

அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலில்
செந்நெ லரிவார் சினையாமை வன்முதுகில்
கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்
தேனிருந்த சொல்லாயிச் சேய். 143

புண்டரிகத் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியுந் தெண்ணீர் மகதயர்கோன்-எண்டிசையிற்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னுவம் பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய். 144

கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்-வான்கடல்வந்
தந்தோ வெளவெடுக்கு மங்கநா டாளுடையான்
செந்தேன் மொழியா யிச்சேய். 145

வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப்-புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
தண்டெரியற் றேர்வேந்தன் றான். 146

அங்கை வரிவளை யாயாழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்-கங்கையிடைச்
சேல்குளிக்குங் கேகயர்கோன் றெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து. 147

மாநீர் நெடுங்கயத்து வள்ளைக்கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றில்-போநீள்
கழைக்கோ தையரேய்க்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன். 148

அங்கை நெடுவேற்க ணாயிழையாய் வாவியின்வாய்ச்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச்-செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளக்குந் தண்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன். 149

தேவர்கள் நளனுருவமைந்ததைக்கண்டு
தமயந்தி ஐயுறல்.

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார்-பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாண் மற்றவரைக் காணுநின்
றூசலா டுற்றா ளுளம். 150

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்-நீணிலந்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து. 151

### தமையந்தி தெய்வத்தைப் பிரார்த்தித்தல்.

மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா ளாகிற் கடிமாலை-அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. 152

### தமையந்தி நளனை அறிதல்.

கண்ணிமைத்த லாலடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்-எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்னாள்
அறிந்தா ணளன்றன்னை யாங்கு. 153

### தமையந்தி நளனுக்கு மாலைசூட்டல்.

வில்லரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கன்னிதன் ஞாலங் களிகூர-மண்ணரசர்
வன்மாலைத் தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். 154

திண்டோள் வயவேந்தர் செந்தாமரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே-ஒண்டாரைச்
சோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது. 155

மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந்து-மெல்லியலாள்

பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலா னளன். 156

## தேவர்கள் கலிபுருஷனைக் காணுதல்.

வேலை பெருவமுதம் வீமன் திருமடந்தை
மாலை பெறுதகலும் வானாடர்-வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லார்க்கும்
இருங்கலியைக் கண்டா ரெதிர். 157

எங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினான்-நீங்கள்
விருப்பான வீமன் திருமடந்தை யோடும்
இருப்பான் வருகின்றேன் யான். 158

மன்னவரில் வைவே னளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்-உன்னுடைய
உள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து. 159

## கலிபுருஷன் சினங்கொள்ளல்.

விண்ணரசர் பிற்க வெறித்தே மணமாலை
மண்ணரசர்க் கிந்த மடமாதின்-எண்ணைக்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்கும் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து. 160

வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கண்
ஆய்மையு மற்றவன் றோள்வலியும்-பூமா
நெடுங்கரபு மற்றவர்க்கு நின்றுரைத்துப் போனான்
அடுங்கொற்ற வச்சிரத்தா னங்கு. 161

செருக்கதிர்வேற் கண்ணியுடன் றேர்வேந்தன் கூட
இருக்கத் தரியே னிவரைப்-பிரிக்க
உடனாக வென்று னுடனே பிறந்த
விடநாக மன்னன் வெகுண்டு. 162

## சூரியன் உதித்தல்.

வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் றிருமடந்தை
மங்கலநாட் காண வருவான்போல்-செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கு நன்னெஞ்சில்
தீயடங்க வேறினான் றேர். 163

## மணம் புரிதல்.

இன்னுயிர்க்கு நேரே யிளமுறுவ லென்கின்ற
பொன்னழகைத் தாமே புதைப்பார்போல்-மென்மலரும்
சூட்டினார் சூட்டித் துடிசே ரிடையாளைப்
பூட்டினார் மின்னிமைக்கும் பூண். 164

கனிமொழித்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மன்ன லவற்கும்-பணிமொழியார்

குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றெவரு மொவ்வார் மகிழ்ந்து. 165

புணர்ச்சி வகைகூறல்.

செந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னாகத்தும்
வந்திருவ ரார்சிலையைக் கால்வளைத்து-வெந்தீயும்
நஞ்சுந் தொடுத்தனைய நாமமலர் வாளி
அஞ்சுந் தொடுத்தா னவன். 166

ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி
இருவரெனுந் தோற்ற மின்றிப் பொருவெங்
கனற்சேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று. 167

குழைமேலுங் கோமா னுயிர்மேலுங் கூந்தன்
மழைமேலும் வாளோடி மீள-விழைமேலே
அல்லோடும் வேலா னகலத் தொடும்பொருதாள்
வல்லோடுங் கொங்கை மடுத்து. 168

வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தின்
ஈர விளவண்ட லிட்டதே-நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனும்
ஓரா றுபாய வுடைந்து. 169

கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ-அங்கை

விளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து. 170

தைய றளிர்க்கரங்க டன்றடக்கை யாற்பற்றி
வையமுழுது மகிழ்தூங்கத்- துய்ய
மணந்தான் முடித்ததற்பின் வாணுதலுந் தானும்
புணர்ந்தா னெடுங்காலம் புக்கு. 171

## சுயம்வர காண்டம்

முற்றிற்று.

---



## இரண்டாவது

# கலிதொடர் காண்டம்.



### காப்பு.

செக்கர் நெடுவானிற் றிங்க ணிலாத்தருநம்பி
உக்கதெனச் சடைமே லும்பர்நீர்-மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்பர்
உள்ளத்தா னெங்கட் குளன்.

முற்றை மறைநூன் முடியெனலாந் தண்குருகூர்ச்
செந்தமிழ் வேத சிரமெனலாம்-நந்தும்
டுழைக்கைக்கு நேயப் பொதுவர் மகளிர்க்கும்
அழைக்கைக்கு முன்செல் லடி.

### நளன் மனைவியுடன் தன்னகர்க் கேகுதல்.

தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல்
குழலின் கருநிழலுங் கொள்ள-வளைக்
கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன்
செழுந்தேரி லேறினான் சென்று.

### பெண்கள் பூக்கொய்தலும் நீர்விளையாடலும்
### நளன் தமயந்திக்குக் காட்டல்.

மங்கையர்கள் வாச மலர்கொய்வான் வந்தடையப்
பொங்கி யெழுந்த பொறிவண்டு-கொங்கோ

கெட்டிர்கொண் டனைவனபோ லேங்கு வனமுத்தின்
கதிர்கொண்ட பூண்முலையாய் காண். 2

பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு-மேவியவர்
பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழலாய் காணென்றான்
மின்னெடுவேற் கையான் விரைந்து. 3

மங்கை யொருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டை-செங்கையால்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப் பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேர்து. 4

புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போல்
செல்லு மடந்தை சிலம்பவிர்த்து மெல்லப்போய்
அம்மலரைக் கொய்யா தருந்தளிரைக் கொய்வாளைச்
செம்மலரிற் றேனே தெளி. 5

கொய்த மலரைக் கொடுங்கையி லேணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் முன்வந்து-தையலாள்
மாதார விந்தத்தே சூட்டினான் பாவையிடைக்
காதார மில்லா தறிந்து. 6

முற்ற முலையார்க் கிளைஞ ரிடும்புலவித்
தோற்ற வமளியெனத் தோற்றுமால காற்றசைப்ப
உக்க மலரோ டுகுத்தவனை முத்தமே
மிக்கர் மணன்மே லிசைத்து. 7

அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்-கலந்தொசிந்த
புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
அல்லென்ற சோலை யழகு. 8

கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கையால்
அங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூ-கொங்கவிழ்தேன்
வார்க்கின்ற கூந்தன் முகத்தை மதியென்று
பார்க்கின்ற தென்னலாம் பார். 9

கொய்த குவளை கிழித்துக் குறுநுதன்மேல்
எய்தத் தனிவைத்த வேந்திழையாள்-வையத்தார்
உண்ணுங் கடுவிடத்தை யுண்ட வொருமூன்று
கண்ணனைப் போன்றனளே காண். 10

கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்-கெழுமியவக்
கோமகற்குத் தானினைந்த குற்றங்க ளத்தனையும்
பூமகட்குச் சொல்லுவாள் போல். 11

பொய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டிற்
பெய்து முகமூன்று பெற்றாள்போல்-எய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்தவங்குஞ் சேய். 12

பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த-மின்னுடைய

பூணு டிருமுகத்தைப் புண்டரிக மென்றயிர்த்துக்
காணு நயர்வானைக் காண். 13

சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையான்
முறுக்குநெடு மூரிக் குழலும்-குறிக்கின்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
அரும்பாம் பணைமுலையா யாம். 14

சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம்-பாராய்
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு. 15

செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாள்
முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்-கழுநீரைக்
கொய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
வையாரும் வேற்றடக்கை மன். 16

## தமையந்தியும் நளனும் நீராடல்.

காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித்-தேவின்
கழியாத சிந்தையுடன் கங்கை நதியாடி
ஒழியா துறைந்தா ருவந்து. 17

## நளன் தமையந்திக்குச் சோலைகாட்டல்.

நறையொழுக வண்டுறையு நன்னகர்வாய் நாங்கள்
உறையு மிளமரக்கா வொக்கும்-இறைவளைக்கைச்

சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற்
பொற்றொடியாய் மற்றிப் பொழில். 18

கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை
தன்மணிவா யுள்ளே தடுமாற-மன்னவனே
இக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா
ஒக்குமதோ வென்றா ளுயிர்த்து. 19

தொண்டைக் கனியாய் துடிப்பச் சுடர்நுதன்மேல்
வெண்டரள மென்ன வியர்வரும்பக்-கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழன்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி. 20

தங்கள் புலவித் தலையிற் றணித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்- அங்கண்
வடிவாண்மேற் கால்வளைத்து வார்புருவ மென்னுங்
கொடியாடக் கண்டானோர் கூத்து. 21

சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்-வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீல மாறாச் சிவப்பு. 22

அங்கைவேன் மன்ன னகல மெனுஞ்செறுவிற்
கொங்கையேர் பூட்டிக் குறுவியர்நீர்-அங்கடைத்துக்
காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
கோதையரின் மேலான கொம்பு. 23

வேரி மழைத்துளிக்கு மேகக் கருங்கூந்தல்
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான்-மூரித்
திரையேற மென்கிடங்கிற் சேலேற வாளை
கரையேறுங் கங்கைக் கரை. 24

சூதக் கனியூற வூற்ற சுருள்வாழை
கோதி னறவேற்குங் குப்பியென-மாதரார்
ஐயுற்று நோக்கு மகன்பொழில்சென் றெய்தினான்
வையுற்ற வேற்றானை மன். 25

நளன் தமயந்தியுடன் தன்னகர் சேர்தல்.

வான்றோய நீடுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்-வான்றோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநா டாளுடையாள்
இல்விளக்கே யெங்க ணகர். 26

பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்-தையலுடன்
ஆறிரண்டாண் டெல்லை கழிந்தா னடையலரைக்
கூறிரண்டாக் கொல்யானைக் கோ. 27

கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெதிர்ப்ப-நூலெனத்
தோன்றாத நுண்மருங்கு றோன்றச் சுரிகுழலாள்
ஈன்றாள் குழவி யிரண்டு, 28

ஆண்டிரண்டா றெல்லை யளவுந் திரிந்தேயுங்
காண்டகைய வெங்கலியுங் காண்கிலான்-நீண்டபுகழ்ச்
சேர்நெறியாற் பார்காத்த செங்கோ லிலவேந்தன்
றன்னெறியால் வேறோர் தவறு. 29

## கலி நளனைச்சேர்தல்.

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி-சிந்தையெல்லாந்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து. 30

நாராய ணாய நமவென் றவனடியிற்
சேராரை வெந்துயரஞ் சேர்ந்தாற்போற்-பாராளுங்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி. 31

## கலி புட்கரனை நளனுடன் சூதாட அழைத்தல்.

நன்னெறியில் சூதா னளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்-மன்னவனே
போதுவா யென்னுடனே யென்றான் புலைகரக்
கேதுவாய் நின்றா னெடுத்து. 32

புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்குங்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு-பொன்னுரைத்த
கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயினான்
கொல்லேற்றின் மேறிக் கொண்டு. 33

வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரையேறிச்-செங்கதிர்ப்பைம்
பொன்னொழியப் போதும் புறம்பணைசூழ் நன்னாடு
பின்னொழியப் போந்தான் பெயர்ந்து. 34

அடற்கதிர் வேன்மன்ன னவனேற்றின் முன்போய்
எடுத்தகொடி யென்னகொடி யென்ன-மிடற்குழ
வெல்லுங் கொடியென்றான் வெங்கலியா லங்கவன்மேற்
செல்லுங் கொடியோன் றெரிந்து. 35

## நளன் சூதாடச் சம்மதித்தல்.

என்றே யிதுவாயின் மெய்ம்மையே யெம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேறல்-தான்றேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கு நன்னாடன்
சூதாட வென்றான் றுணிந்து. 36

## மந்திரி முதலானோர் நளனுக்கு புத்திகூறல்.

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்மொழிதல்
ஈதன் மறுத்த லிவைகண்டாய்-போதிற்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி. 37

அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்ததே கொண்டருளைத் தேய்க்கும் மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து. 38

உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கும் மருவும்
ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. 39

ஆயம் பிடித்தாரு மல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரு நெஞ்சிடையே-மாயம்
பிடித்தாரின் வேறல்ல ரென்றுரைப்ப தன்றே
யடித்தாரின் ஞாலோர் வழக்கு. 40

மந்திரியின்பேரில் நளன் கோபித்தல்.

தீது வருக நலம் வருக சிந்தையாற
சூது பொறவிசைந்து சொல்லினோம்-யாதும்
விலக்கலிர் நீரென்றான் வராலேற மேதி
கலக்கலிநீர் நாடன் கனன்று. 41

புட்கரன் நளனை பந்தயம்யாதென வினவுதல்.

நிறையில் கவறாட னீநினைந்தா யாகில்
திறையிற் கதிர்முத்தஞ் சிந்தும்-துறையில்
கரும்பொடியா மள்ளா கடாவடிக்கு நாடா
பொரும்படியா தென்றானிப் போது. 42

இருவரும் பந்தயம் வைத்தல்.

விட்டொளிர்வில் வீசு விளக்குமணிப் பூணாரம்
ஓட்டினே னுன்னுடைய மோதென்ன-மட்டவிழ்தார்

மல்லேற்ற தோளானும் வான்பணைய மாகத்தன்
கொல்லேற்றை வைத்தான் குறித்து. 43

## நளன் சூதாடி ஒவ்வொன்றயித்தோற்றல்.

காரேயுங் கூந்தலார் காரிகைமேற் காதலித்த
தாரேயுந் தோளான் றனிமனம்போல்-நேரே
தவறாய்ப் புரண்ட தமையனொடுங்கூடிக்
கவறாய்ப் புரண்டான் கலி. 44

வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்த பணைய முரையென்ன-வைத்தநிதி
நூறா யிரத்திரட்டி நூறுநா றாயிரமும்
வேறாகத் தோற்றனவ் வேந்து. 45

டல்லா யிரம்பரியும் பத்துநா றாயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின்-வில்லாட்கள்
முன்றோற்று வானின் முகிறோய்கு மால்யானை
பின்றோற்றுத் தோற்றான் பிடி. 46

சாதுரங்கம் வென்றேன் றகும்பணைய மேதென்ன
மாதுரங்கம் பூணு மணித்தேரான்-சூதரங்கிற்
பாவையரைச் செவ்வழிபாழ்ப் பண்ணின்மொழிப் பின்னுகுழற்
பூவையரைத் தோற்றான் பொருது. 47

கற்பின் மகளிர்பா னின்றுஞ் சமைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போல்-விற்கும்

நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தா டிரு. 48

### புட்கரன் தமையந்தியைப் பயணமாகக் கோடுவெனல்.

மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்
நிலாச்சங்கின் வெண்டலையைத் தேறல்-நனைக்குங்
குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
இவளைப் பணயந்தா வின்று. 49

### நளன் தமையந்தியை கானகஞ்செல்ல அழைத்தல்.

இனிச்சூ தொழிந்தோ மினவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே-பனிச்சூதப்
பூம்போ தவிழ்க்கும் புனனாடன் பொன்மகளே
நாம்போது மென்றா னளன். 50

மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகங் கொள்ளத்தான் போனாற்போல்-தன்காற்
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து. 51

கடப்பா ரெவரே கவினையை வீமன்
மடப்பாவை தன்னுடனே மன்னன்-நடப்பான்
வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த
தனைத்தே விதியின் வலி. 52

## நகரத்திலுள்ளோர் வருந்தல்.

ஆருயிரின் றாயே யறத்தின் பெருந்தவமே
பேரருளின் கண்ணே பெருமானே-பாரிடத்தை
யார்காக்கப் போவதுநீ யாங்கென்றார் தங்கண்ணி
னீர்வார்த்துக் கால்கழுவா நின்று. 53

வேலை கரையிழந்தால் வேதநெறி பிறழ்ந்தால்
ஞால முழுதுநடு விழந்தாற்-சீலம்
ஒழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர். 54

வடியேறு கூரிலைவேன் மன்னாவோ வுன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்-கொடிகானில்
இன்றிருந்து நாளை யெழுந்தருள்க வென்றுரைத்தார்
வென்றிருத்த தோளான்றாள் வீழ்ந்து. 55

மன்றலிளங் கோதை முகநோக்கி மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணீர் நோக்கி-இன்றிங்
கிருந்துமோ வென்று னிளங்குதலை வாயாள்
வருந்துமோ தன்மனத்தில் வைத்து. 56

## நளனைப் புகழுமவர்களைக் கொல்லும்படி புட்கரன் கட்டளையிடுதல்.

வண்டாருந் தார்நளனை மாநகரில் யாரேனுங்
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று-தண்டா

முரசறைவா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசரிபா வேந்த னழன்று. 57

அறையும் பறையரவங் கேட்டழிந்து நைந்து
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி-முறுவலியா
இந்நகர்க்கி தென்பொருட்டா வந்ததென வுரைத்தான்
மன்னகற்றுங் கூரிலைவேன் மன். 58

நளன் மனைவிமக்களுடன்

நகரைவிட்டு வெளிப்படல்.

நல்வாயின் மென்மொழியே தாங்கினா னேங்குநகர்ப்
பொன்வாயில் பின்னாகப் போயினான்-முன்னாளில்
பூமகளைப் பாரினொடும் புல்லினான் நன்மகனைக்
கோமகளைத் தேவியொடுங் கொண்டு. 59

கொற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப-முற்றும்
இழவு படுமோபோ லில்லங்க டோறுங்
குழவிபா லுண்டிலவே கொண்டு. 60

மக்கள் பெற்றோரைநோக்கிக் கூறுவது.

பந்தக் கழற்று மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரு நோவப் பதைத்துருகி-எந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான தெல்லாங்
கடந்தோமோ வென்றா ரழுது. 61

### நளன் துக்கித்தல்.

ஆயதன் மக்க ளுயர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி-யாதுந்
தெரியாது சித்திரம்போ னின்றிட்டான் செம்மை
புரிவான் றுயராற் புலர்ந்து. 62

### நளன் கூறல்.

காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேத முடைத்திவரைக் கொண்டுநீ-மாதராய்
வீமன் திருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன்
தாமம் புனைவாளைத் தான் 63

### தமையந்தி கூறல்.

குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ-கொற்றவனே
நோக்காலே நினைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கான் மழைபொழியா நொந்து. 64

### நளன் சொல்லுதல்.

கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும்-மைதீர்
மகப்பெறா மானிடர்கள் வானவர்தம் மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து. 65

பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ-இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர். 66

சொன்ன கலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தா மின்முகத்து-முன்னங்
குறுகுதலைக் கிங்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி. 67

## தமையந்தி கூறுவது.

பெற்றரிய செல்வம் புணர்ந்தொடு போகத்
தோற்றமையும் யாவர்க்குந் தோற்றதே-ஆற்றலாய்
எம்பதிக்கே போந்தருளு கென்றா ளெழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன். 68

## நளன் உரைப்பது.

சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
எனக்கென்று மிம்மாற்றங் கண்டாய்-தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள். 69

மன்னரால் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
இன்னமுதந் தேக்கி யிருப்பாரேற்-சொன்ன

பெரும்பே டிகளலரேற் பித்தரே யன்றே
வருப்பேடை யானே யவர். 70

## தமையந்தி கூறல்.

செங்கோலா யுன்றன் றிருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்ப னெழினகர்க்கே-நங்கோலக்
காதலரைப் போக்கி யருளென்றாள் காதலருக்
கேதிலரைப் போல வெடுத்து. 71

## நளன் ஒருபிராமணனைநோக்கிச் சொல்லுதல்.

பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்-தாதைக்குக்
காட்டுநீ யென்றான் கலங்காத வுள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து. 72

## பிள்ளைகள் அரசன்முகத்தைநோக்கிக் கூறல்

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை யெதிர்நோக்கி எந்தம்மை
வேறாகப் போக்குதிரோ வென்றார் விழிவழியே
ஆறாகக் கண்ணீ ரழுது. 73

## தமையந்தி மக்களை மார்போடு அணைத்தல்.

அஞ்சனநேர் கண்ணி லருவிநீ ராங்கவற்கு
மஞ்சனநீ ராக வழிந்தோட-செஞ்சுருகி

வல்லிவிடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து. 74

பிள்ளைகள் குண்டினபுரஞ் சேர்தல்.

இருவருயிரு மிருகையால் வாங்கி
ஒருவனைகொண் டேகுவா னேத்து-வருமறையோன்
கோமைந்த னேடிளைய கோதையைக் கொண்டேகினான்
வீமனகர்க்கே விரைந்து. 75

காதலவர்மேலே கண்ணோட விண்ணோடும்
ஊதை யெனநின் றுயிர்போட-யாதும்
உரையாடா துள்ள மொடுங்கினான் உன்று
விரையாடுந் தாரான் மெலிந்து. 76

சேலுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காலிற்போய்த் தேவியொடுங் கண்ணுற்றான்-ஞாலஞ்சேர்
கள்ளிவே கத்தரவின் கண்மணிக டாம்பொடியாய்த்
துள்ளிவே கின்ற சுரம். 77

கலி புள்வடிவாய்த் தோன்றல்.

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்-நன்னெறிக்கே
அஞ்சிப்பா ரிந்த வரசனையுந் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து. 78

தமயந்தி பட்சியைப் பிடித்துத்தாவெனல்.

தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்-தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயா டொழுது. 79

நளன் அப்பொன்புள்ளைப் பிடித்தல்.

பொற்புள் ளதனைப் பிடிப்பா னளன்புகுதக்
கைக்குள்வரு மாபோற் சுழன்றோடி-எய்க்கும்
இளைக்குமா போல விருந்துகண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன். 80

கொற்றக் கயற்கட் கொடியே யிருவோரும்
ஒற்றைத் துகிலா லுடைபுனைந்து-மற்றிந்தப்
பொற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மென்றுரைத்தான்
பற்றகலா வுள்ளம் பரிந்து. 81

எற்றித் திரைபொரவெக் கோதேறி யிளமணலிற்
பற்றிப் பவளம் படர்கிழக்கீழ்-முத்தீன்று
வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்
புள்வளைத்தா ருடையாற் போர்த்து. 82

பறவைசொல்லல்.

கூர்ந்த விளக்குயிலுங் கோமானுஞ் சொன்னடைந்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று-வேந்தனே

தன்னோடு தோற்பித்தோ னேனகா ணென்றதே
பொன்னோடு மாசிறந்த புள். 83

காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும்
ஆவிபோ லாடையுமொன் றானதே-பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை யாதரித்த போது. 84

தமயந்தி வருந்தல்.

அறம்பிழைத்தார் பொய்த்தா ரருள்சிதைத்தார் மானக்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்-புறங்கடையிற்
சென்றார் புகுநரகஞ் சேர்வாய்கொ லென்றழியா
நின்றாள் விதியை நினைந்து. 85

வையந் துயருழப்ப மாயம் பலசூழ்ந்து
தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ-மெய்வகையே
சேர்ந்தருளி நின்றதனிற் செங்கோலா யிங்கொழியப்
போந்தருளு கென்றாள் புலர்ந்து. 86

சூரியன் அஸ்தமித்தல்.

அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும்
வெந்தழலை யாற்றுவான் மேல்கடற்கே-எந்தை
குளிப்பான்போற் சென்றடைந்தான் கூரிருளாற் பாரை
யொளிப்பான்போற் பொற்றே ருடன். 87

பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்ந்ததற்பின்
கான வடம்பின் கவட்டிலைகள்-மானின்

குளப்பேய்க்கு நன்னுடன் கோதையொடுஞ் சென்றான்
இளம்பேய்க்குந் தோன்றா விருள். 88

ஓர் பாழ்மண்டபங் காணல்.

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோய்
வெங்கா னகத்திரியும் வேலைதனில்-அங்கேயோர்
பாழ்மண்ட பங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டலங்கண்டான் வந்து. 89

அப்பாழ்மண்டபத்தில் இருவரும் சயனித்தல்.

மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரு மிடமற்றுத் தானில்லை சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா வென்றான் புலர்ந்து. 90

தமையந்தி வருந்தல்.

வைய முடையான் மகரயாழ் கேட்டருளுந்
தெய்வச் செவிசொருகின் சில்பாடல்-இவ்விரவில்
கேட்டவா வென்றழுதாள் கெண்டையங்க ணீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து. 91

அரசன் அவளைத்தேற்றல்.

பண்டை வினைப்பயனைப் பாரிடத்தி லார்கடப்பார்
கொண்ட விழலிற் குழைகடவுங்-கெண்டை
விழியனீ ரென்றார் மனமடங்கி வெய்துற்
றழியனீ யென்றா னரசு.

விரைமலர்ப்பூ மெல்லணையி லெய்காவல் பூண்ட
டரிசனமும் பள்ளி யறையும்-அரசேநான்
காணே னிங்கென்னாக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணேர் முலையாள் புலர்ந்து. 93

தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம்-நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கைகொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து. 94

## நளன் வருந்தல்.

புன்கண்கூர் யாமத்துப் பூமிமேற் றான்படுத்துத்
தன்கண் டுயில்வாளைத் தான்கண்டு-மென்கண்ணா
பொடியாதா லுள்ளாவி போகாதா னெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து. 95

## தமையந்தி வருந்தல்.

முன்றிறனின் மேற்படுக்க முனைறு லையுமின்றி
இன்று துயில விறைவனுக்கே என்றனது
கைபுகுந்த தென்னுடைய சால்புகுந்த தென்றழுதாள்
மைபுகுந்த கண்ணீர் வர. 96

வீடன் றிருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாம மெனக்களித்த தையலாள்-யாமத்துப்
பாரே யணையாப் படைக்கண் டுயின்றாணமற்
றீரே துயரடையா ராங்கு. 97

## கலிவலியால் தமையந்தியைப்பிரிய மனம் வேறுபடல்.

பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தன் செங்கோலான்-பொய்ம்மை
விலக்கினு னெஞ்சத்தை வேறுக்கி நின்று
கலக்கினான் வஞ்சக் கலி. 98

வஞ்சக் கலிவலியான் மாகத் தரவனைக்குஞ்
செஞ்சுடரின் வந்த சருஞ்சுடர்போல்-விஞ்ச
மதித்ததேர்த் தானை வயவேந்த னெஞ்சத்
துதித்ததே வேறே ருணர்வு. 99

ஊரிகைதன் வெந்துயரங் காணும னீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து-நேரே
இருவருக்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
அரிதற் கவனினைந்தா னங்கு. 100

எண்ணிய வெண்ண முடிப்பவிகல் வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்-பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து. 101

ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் னன்பை முதலோடும்-பற்றி

அரிந்தா னரிந்திட் டவணிலைமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் றிகைத்து. 102

போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த வடுபாலின்-தோயல்
கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். 103

சிந்துரத்தாற் றெய்வ முனிவர் தெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போன்-முந்த
ஒலித்ததேர்த் தானை யுயர்வேந்த னெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து. 104

நளன் வனதேவதைகளைப்பிரார்த்தித்தல்.

திக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்-நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான். 105

பிரிதல்.

ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினன்-தீந்தேன்
தொடைவிரவு நாண்மாலை சூட்டின னன்னை
இடையிருளிற் கானகத்தே யிட்டு. 106

தாருவெனப் பார்மேற் றருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போற்-கூரிருளிற்

செங்கா னசஞ்சிதையத் தேவியைவிட் டேகினன்
வெங்கா னகர்தனிலே வேந்து. 107

## தமையந்தி விழித்துக்கொண்டு அரசனைத்தேடித் துயருறல்.

நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்-வேல்வேந்தே
எங்குற்ற யென்ன வினவளைக்கை நீட்டினள்
அங்குத்தான் காண தயர்ந்து. 108

வெய்ய தரையென்ன மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டெவ்விடத்துங் காணமல்-ஐயகோ
என்னப்போய் வீழ்ந்தாளினமேதி மென்கரும்பைத்
தின்னப்போ நாடன் திரு. 109

அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்ற
துழலுங் களிமயிப்போ லோடிக்-குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி. 110

வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்-ஏனங்
குளம்பான் மணிகிளைக்குங் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைதலைமே லிட்டு 111

## சூரியன் உதித்தல்.

தைய றுயர்க்குத் தரியாது தஞ்சிறகாங்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்-வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம். 112

வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன்-போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று. 113

செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே என்றழைக்கும்
எய்துதுய ரக்கரைகா ணேனென்னும்-பையவே
என்னென்னு தென்னென்னு மிக்கானின் விட்டேகு
மன்னென்னு வாடு மயர்ந்து. 114

அல்லியந்தார் மார்ப னடித்தா மரையவடன்
நல்லுயிரு மாசையும்போ ஒுறுதலும்-மல்லுறுதோள்
வேந்தனேயென்று விழுந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான். 115

வெறித்த விளமான்காண் மென்மயில்கா ளிந்த
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர்-பிரித்தெம்மைப்
போனாரைக் காட்டுதிரோ வென்னுப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான். 116

வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசிபான்
மோட்டு வயிற்றரவு முன்றோன்ற-மீட்டதனை
ஓரா தருகணைந்தா ளுண்டே னறற்கூர்தற்
போரார் விழியாள் புலர்ந்து. 117

## தமையந்தியைப் பாம்புசுற்றிக்கோள்ளல்.

அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடையும்
வெங்க ணரவுபோன் மெல்லியலைக்-கொங்கைக்கு
மேலெல்லாந் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாந் தீயுமிழும் பாம்பு. 118

வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
தாளடைந்து வாழுந் தமியேனைத்-தோளால்
விலக்காயோ வென்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்று ளெடுத்து. 119

வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயராற் போயாவி மாள்கின்றேன்-இன்றுன்
திருமுகநான் காண்கிலேன் றேர்வேந்தே யென்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து. 120

மற்றெடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகுங்-கொற்றவனை
நீரேனுங் காண்குதிரோ வென்றழுதா ணீள்குழற்குக்
காரேனு மொவ்வாள் கலுழ்ந்து. 121

அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனே யோகோ-விடையெனக்குத்
தந்தருள்வா யென்றேத்தன் றாமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியா டேர்ந்து. 122

வேடன்வருதல்.

உண்டோ ரழுகுரலென் றெற்றி வருகின்ற
வெண்டோடன் செம்பங்கி வில்வேடன்-கண்டான்
கழுகுவாழ் கானகத்துக் காராவின் வாயின்
முழுகுவா டெய்வ முகம். 123

வெய்ய வரவின் விடவாயி னுட்பட்டேன்
ஐயன்மீ ருங்கட் கபயம்யான்-உய்ய
அருளீரோ வென்றா வரற்றினா ளஞ்சி
இருளீரும் பூணா ளெடுத்து. 124

வேடன் பாம்பின்வாயிலிருந்து
தமையந்தியை மீட்டல்.

சங்க நிதிபோற் றருசந்திரன் சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலக மீட்டாற்போன்-மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
சாம்பின்வாய் வில்வேடன் கண்டு. 125

ஆருயிரு நாணு மழியாம லையாவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்-நேரில்

இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றான் பெற்ற விளக்கு. 126

வேடன் ஏதோநினைந்து

தமயந்தியை அழைத்தல்.

இந்து நுதலி யெழிநோக்கி யேதோநன்
சிந்தை கருதிச் சிலைவேடன் - பைந்தொடிநீ
போதுவா யென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து. 127

வேட னழைப்ப விழிபதைதது வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா - ஓடினாள்
தாரெலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலா மாக வழுது. 128

வேடன் நீறானது.

நீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போல்
ஆக்கை தளர்வலமந்து - போக்கற்றுச்
சீறா விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து. 129

வண்டமிழ் வாணர் பிழைந்தவான் குடிபோற்றித் தழன்பீ
மண்டுகொடுஞ் சுரத்தோர் மாடிருந்து - பண்டையுள
வாழ்வெல்லாந் தானினைந்து மற்றழுதாண் மன்னிழைத்த
தாழ்வெல்லாந் தன்றலைமேற் றந்து. 130

அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிகன்
இவ்வளவு தீவினையே னென்பாடன்-மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய தெல்லா முணர்ந்து. 131

தமயந்தியை வணிகன்யாரெனவினவுதல்.

எக்குலத்தா யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்-மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு கார்தாரம்
விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து. 132

தமயந்தியின் விடை.

முன்னை வினையின் வலியான் முடிமன்னன்
என்னைப் பிரிய விருங்கானில்-அன்னவனைக்
காணா தழுகின்றே னென்றாள் கதிரிமைக்கும்
பூணாரம் பூண்டாள் புலர்ந்து. 133

சேதிநகர்க்கேகும்படி வழிகாட்டல்,

சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டப்
போதிற் கொடைவணிகன் போயினான்-நீதி
இடத்துவான் மன்னவர்தங் கீர்த்தி யினைப்பார்மேல்
நடத்துவான் வட்டை நடந்து. 134

அற்ற துகிலு மறுதொழுகு கண்ணீரும்
உற்ற துயரு முடையளாய்-மற்றொருத்தி

நின்றானைக் கண்டே நிலவேந்தன் பொற்றேவி
என்றார் மடவா ரெடுத்து. 135

போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
ஆய மயிலை யறியவே-நீயேகிக்
கொண்டுவா வென்றுடன் கொவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தன் மயில். 136

சேதியரசி தமையந்தியை வினவுதல்.

அந்தா மரையி லவளேயென் றையுற்றுச்
சிந்தா குலமெனக்குத் தீராதால்-பைந்தொடியே
உள்ளவா றெல்லா முறையென்று ளொண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு. 137

தமையந்தி கூறல்.

என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
அன்னவனைக் காணா தலமருவேன்-இந்நகர்க்கே
வந்தே னிதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்ந்து. 138

சேதியரசிசொல்லல்.

உன்றலைவன் றன்னை யொருவகையா னாடியே
தந்து விடுமளவுந் தாழ்குழலாய்-என்றனுடன்
இங்கே யிருக்க வினிதென்று ளேந்திழையைக்
கொங்கேயுந் தாராள் குறித்து. 139

வீமராசன் நளனைத்தேடவிடல்.

நாடி யொருவகையா னற்றேர் நளன்றன்னைத்
தேடி வருகென்னத் திசைமுழுதுஞ் சேடுதர்குந்
தேர்க்கோலங்கொண்டெழுந்தான் திண்டிரலோன் றன்பணியாற்
பேர்க்கோல மாமறையோன் பேர்ந்து. 140

வீமராசனால் அனுப்பப்பட்ட பிராமணன் முற்றுந்தேடி
சேதிநகர்வந்து தமயந்தியைக் காணல்.

ஓடும் புரவித்தேர் வெய்யோ னொளிசென்று
நாடு மிடமெல்லா நாடிப்போய்-கூடினான்
போதிற் றிருநாடும் பொய்கைத் திருநாடாஞ்
சேதித் திருநாடு சென்று. 141

தாமஞ்சே ரோதித் தமயந்திநின்றாளை
ஆமென் றறியா வருமறையோன் வீமன்
கொடிமேல் விழுந்தழுவான் கொம்புமவன் செம்பொன்
அடிமேல் விழுந்தா ளழுது. 142

மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
அங்கவனேன் கண்ணீ ரவளுடன்மேற்-பொங்கக்
கடல்போலுங் காதலார் கைபற்றார் தங்கள்
உடல்போலு மொத்தா ருயிர். 143

மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்ட துயர் கண்டாயோ-சேர்குழலும்

வேணியாய் வெண்டுகிலும் பாதியாய் வெந்துயருங்
காணியாய் நின்று ளயர்ந்து. 144

சேதியரசி தன்புத்திரியென்றறிந்து வருந்தல்.

தன்மக ளாவ தறியாத் தமோருப்
பொன்வடிவின் மேலழுது போய்வீழ்ந்தாள்-மென்மலரைக்
கோதிப்போய் மேதி குருகெழுப்புந் தண்பணைசூழ்
சேதிக்கோன் றேவி திகைத்து. 145

தமையந்தியை வீமன் பட்டணத்திற்கனுப்புதல்.

சந்தளையுங் கன்னியையுங் கண்டாயி லுஞ்சிறிது
தன்றுயரந் தீர்ந்து தனியாறத்-தந்தைப்
பதியிலே போக்கினன் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு. 146

கோயிலு மந்தப் புரமுஞ் செடிநுடங்கும்
வாயிலு நின்று மங்கிருந்தே தியசொடுங்
காருள மக்களையுங் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது- 147

அழுவார் விழுவா ரயிர்ப்பா ருயிர்ப்பார்
தொழுவார் தமரெங்குஞ் சூழ்வார்-வழுவாத
காமநீ ரோதக் கடல்கிளர்ந்தா லொத்ததே
நாமவேல் வீம னகர். 148

## தமயந்தி பிதாவைக்கண்டு துக்கித்தல்.

தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீர்சொரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்-தெந்தாயான்
பட்டதே யென்னப்போய் வீழ்ந்தாட் படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ. 149

## தமயந்தியைப்பார்த்துபெற்றோர்வருந்தல்.

செவ்வண்ண வாயாளுந் தேர்வேந் தனுமகளை
அவ்வண்ணங் கண்டக்கா லாற்றுவரோ-மெய்வண்ணம்
ஓய்ந்துகா ணீர்போ யுலகின்ற தொத்ததமர்
நீந்தினார் கண்ணீரி னின்று. 150

பனியிருளிற் பாழ்மண்ட பத்திலே யுன்னை
நினையாது நீத்தகன்ற போது-தனியேநின்
றென்னினைந்தா யென்செய்தா யென்னாப் புலம்பினாள்
பொன்னினைத் தாய்நோக்கிப் புலர்ந்து. 151

## கலிதொடர்காண்டம்
முற்றிற்று.



மூன்றவது

# கலிநீங்குகாண்டம்.

*

## காப்பு.

போதுவார் நீறணிந்து பொய்யாத வைந்தெழுத்தை
யோதுவா ருள்ள மெனவுரைப்பார்-நீதியார்
பெம்மா னமரர் பெருமா னொருமான்கை
அம்மானின் றாடு மரங்கு.

மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாம்
காலிக்குப் பின்னேயுங் காணலாம்-மால்யானை
முந்தருளும் வேத முதலே யெனவழைப்ப
வந்தருளுஞ் செந்தா மரை.

### இனித் தமையந்தியைப்பிரிந்த நளன்செய்தி கூறப்படுகின்றது.

மன்னா வுனக்கபய மென்னா வனந்தீயிற்
பன்னாக வேந்தன் பதைத்தருகிச்-சொன்ன
மொழிவழியே சென்றான் முரட்கலியன் வஞ்சப்
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

நளன் அக்கினியின்வாய்ப்பட்ட

சர்ப்பத்தைக்காத்தல்.

ஆருந் திரியா வரையிருளி னங்ஙனே
சோர்குழலை நீத்த துயரோடும்-வீரன்
திரிவானத் தீக்கானிற் செந்தீயின் வாய்ப்பட்
டெரிவானைக் கண்டா னெதிர். 2

தீக்கடவு டந்த வரத்தைத் திருமணத்தில்
ஆக்கியருளா லரவரசை-நோக்கி
அடைந்தா னடைதலுமே யாரழலோ னஞ்சி
யுடைந்தான் போய்ப்புக்கா னுவந்து, 3

வேத முனியொருவன் சாபத்தால் வெங்கானில்
ஆதபத்தின் வாய்ப்பட் டழிகின்றேன்-காதலால்
வந்தெடுத்துக் காவென்றான் மாலை மணிவண்டு
சந்தெடுத்த தோளானைத் தான். 4

சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூருந் தழலவித்துக் கொண்டுபோய்-பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழலால் வெம்மையுற்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து. 5

என்றுரைத்த வவ்வளவி லேழுலகுஞ் சூழ்கடலுங்
குன்றுஞ் சுமந்த குலப்புயத்தான்-வென்றி

அரவரசைக் கொண்டகன்று ணாணியர் தன்னில்
இரவரசை வென்று னெடுத்து. 6

மண்ணின்மீ தென்றனைநின் வன்றுளா லொன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடுகென்றான்-நண்ணிப்போர்
மாவலான் செய்த வுதவிக்கு மாறாக
ஏவலாற் றீங்கிழைப்பே னென்று. 7

அச்சர்ப்பம் நளனைக்கடித்தல்.

ஆங்கவன்று னவ்வா றுரைப்ப வதுகேட்டுத்
தீங்கலியாற் செற்ற திருமனத்தான்-பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மையால்
எண்ணினான் வைத்தா னெயிறு. 8

நளன் நுபம்மாறுதல்.

வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
காம நெடுந்தோள் வறியோருக்-கேமங்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் திருமேனி வேர்த்து. 9

ஆற்ற லரவரசே யாங்கென் னுருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சினவெயிற்றால்-மாற்றுதற்கின்
றென்கா ரணமென்று னேற்றமரிற் கூற்றழைக்கும்
மின்கா லயின்முகவேல் வேந்து. 10

காயுங் கடகளிற்றாய் கார்க்கோ டகனென்பேர்
நீயிங்கு வந்தி யானினைந்து-காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணமா
வேறாக்கிற் றென்றான் விரைந்து. 11

கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிறால் பாயுந் திருநாடா-கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினா யிந்த
அணியாடை கொள்கென்றா னாங்கு. 12

சாதி மணித்துகிளீ சாத்தினாற் றண்கமுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்-தாதின்
துளிக்குநா டீட்டுந் துறைநாடர் கோவே
ஒளிக்குநா ணீங்கு முரு. 13

வாகு குறைந்தமையால் வாகுவனென் றுன்னாமம்
ஆக வயோத்தி நகரடைந்து-மாகனகத்
தேர்த்தொழிற்கு மிக்கானீ யாகென்றான் செம்மனத்தால்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து. 14

இணையாரு மில்லா னிழைத்த வுதவி
புணையாகச் சூழ்கானிற் போனான்-பணையாகத்
திண்ணாக மோரெட்டுந் தாங்குந் திசையனைத்தும்
எண்ணாக வேந்த னெழுந்து. 15

தமையந்தியைப்பிரிந்த நளன் துயருறல்.

நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளுங்
கனற்புகைய வேகின்றான் கண்டான்-பனிக்குருகு
தண்படா நீழற் றனிப்பேடை பார்த்திரவு
கண்படா வேலைக் கரை. 16

கொம்ப ரிளங்குருகே கூறு திருத்தியால்
அம்புயத்தின் போதை யறுகாலால்-தும்பி
திறக்கத்தே னூறுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று. 17

புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்-இன்னருள்கண்
டஞ்சினா னாவி யழிந்தா னறவுயிர்த்து
நெஞ்சினா லெல்லா நினைந்து. 18

காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ-நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ வோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை. 19

பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்
கானலே வேலைக் கழிக்குருகே-யானுடைய
மின்னனைக்கும் பூணாள்வ் வீங்கிருள்வா யாங்குணர்ந்தால்
என்னினைக்குஞ் சொல்வீ ரெனக்கு. 20

போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்-தீவாய்
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று. 21

நளன் அயோத்திநகர் அடைந்து
ரிதுபர்னராசனிடத்தில் வேலைக்கமர்தல்.

முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்-பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு. 22

மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்குமிக்கோனென
றான்றேய்க்கும் வேலா னுயர்நறவத்-தேன்றேய்க்குந்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமி னென்றுரைத்தான்
தேர்வேந்தன் வாகுவனாய்ச் சென்று. 23

அம்மொழியைத் தூத ரரசற் கறிவிக்கச்
செம்மொழியாற் றேர்ந்ததனைச் சிந்தித்தே-இம்மொழிக்குத்
தக்கானை யிங்கே தருமி னெனவுரைக்க
மிக்கானுஞ் சென்றான் விரைந்து. 24

பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தன்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன்-ஐயாநீ

எத்தொழிற்கு மிக்கா னியாது பெயரென்றான்
கைத்தொழிற்கு மிக்கானைக் கண்டு. 25

அன்ன மிதிப்ப வலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர்-மன்ன
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லன்யா னென்றான்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து. 26

தமையந்தி புரோகிதனுக்கு
நளனைத்தேடக் கட்டளையிடல்.

என்னை யிருங்கானி னீத்த விகல்வேந்தன்
தன்னைநீ நாடெனத் தண்கோதை-மின்னுப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக்கிந்த
வுரைபகர்வ தானா ளுணர்ந்து. 27

காரிருளிற் பாழ்மண்ட பத்தேதன் காதலியைச்
சோர் துயிலி னீத்த துணிவன்றோ-தேர்வேந்தற்
கென்றுரைத்தா னோர்கின் றெதிர்மாற்றந் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்று டோர்ந்து. 28

புரோகிதன் நளனைத்தேடல்.

மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினான்;மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத்தேடி
யடைந்தா னயோத்தி நகர். 29

### புரோகிதன் நளனைக்கண்டு வினவுதல்.

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதுவும் வேந்தற்குப் போதுமோ-தானென்று
சாற்றினா னந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தா னெதிர். 30

### நளன் விடை.

ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்-தண்டரளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறே னீ. 3

### தமயந்தி புரோகிதனை வினவுதல்.

எங்க ணுறைந்தனைகொ லெத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தங் காவலனை-அங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீர்
அலைப்பட்ட கொங்கையா ளாங்கு. 3

### புரோகிதன் கூறுதல்.

வாக்கினான் மன்னவனை யொப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கி லவனல்லன்-பூக்கமழுங்
கூந்தலாய் மற்றக் குலப்பாக னென்றுரைத்தான்
ஏந்துநூன் மார்ப னெடுத்து.

அயோத்தி யரசனுக்குத் தமயந்தியின் இரண்டாஞ் சுயம்வரம் தெரிவித்தல்.

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்-நீண்ட
கொடைவேந்தர்க் கிந்திரந் தேர்க்கோலங்கொள்வான்
படைவேந்த னென்றாள் டரிந்து. 34

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயவரமென்
றங்கோர் முரச மறைவித்தான்-செங்கோலாய்
அந்நாளு நாளை யளவென்று னந்தணன்போய்த்
தெந்நாளுந் தாரானைச் சேர்ந்து. 35

வேத மொழிவாணன் மீண்டுஞ் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்-றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்று னிகல்சீறும்,
மின்செய்த வேலான் விரைந்து. 36

அதற்கு நளன்சொல்வது.

குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்
இறைவாத வேந்திழையா ளின்று-பறிபீறி
செல்லிற் பருவரா லோடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல். 37

அயோத்தியரசன் சிந்தித்தல்.

என்மே லெரிகின்ற மாலை யெழிநளன்றன்
முன்னை விழுந்ததுகாண் முன்னாளில்-அன்னதற்கு

காரணந்தா னீதன்றே நவன்றன் கடாஞ்சொரியும்
வாரணந்தா னன்னுன் மதித்து. 38

நளன் சிந்தித்தல்.

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண விசைந்ததோ-தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத்துரைபட்ட
தெவ்வாறு கொல்லோ விது. 39

நளன் ரிதுபர்ணனுக்கு சாரத்தியஞ்செய்தல்.

காவலனுக் கேவற் கடன்பூண்டேன் மற்றவன்றன்
ஏவன் முடிப்ப னினியென்று-மாவிற்
குலத்தேரைப் பூட்டினன் கோதையர்தங் கொங்கை
மலர்த்தேன் றுளிர்க்குந்தார் மன். 40

ஒற்றைத் தனியாழித் தேரென்ன வோவேதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்-மற்றிதற்கே
போந்தேறு கொன்றுரைத்தான் பொம்மென் றளிமுரலத்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய். 41

மூர்த்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே-சந்தவிரைத்
தார்குன்று மெல்லோதித் தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்ற னார்கின்ற தேர். 42

மேலாடை வீழ்ந்த தெடுவென்று னவ்வளவில்
நாலாறு காத நடந்ததே-தோலாமை
மேல்கொண்டா னேறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா. 43

இத்தாழ் பணையி லிருந்தான்றிக் காயெண்ணிற்
பத்தாயிரங்கோடி பாரென்ன-உய்த்ததனில்
தேர்நிறுத்தி யெண்ணினான் றேவர் சபைநடுவே
தார்நிறுத்துந் தோள்வேந்தன் றான். 44

ஏரடிப்பார் கோலெடுப்ப வின்றேன் றுடைபீறிக்
காரடுத்த சோலைக் கடனுடன்-தேரடுத்த
மாத்தொழிலு மித்தொழிலு மாற்றுதியோ வென்றுரைத்தான்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து. 45

## கலி நளனைவிட்டு நீங்குதல்.

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி-கொண்டாடும்
பாவலன்பா னின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பா னின்ற கலி. 46

## ரிதுபர்ணன் வீமராசன் பட்டணஞ்சேர்தல்.

ஆமை முதுகி லலவன் றுயில்கொள்ளுங்
காமர் நெடுநாடு கைவிட்டு-வீமன்றன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்றம்
அன்னகரியொன் றுடையா னங்கு. 47

வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயின்
முற்றத்திருத்தி முறைசெய்யுங்-கொற்றவர்க்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து. 48

## ரிதுபர்ணனை வீமன்வினவியது.

கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு-பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென். 49

## ரிதுபர்ணன் சொல்லல்.

இனறுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்கன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன்-என்றான்
ஒளியார்வேற் கண்ணான்மே லுள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய். 50

ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்-மேதிக்
கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்குநாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து. 51

ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்-யாதும்
திரப்பாம லெல்லா நிரம்பிற்றே பொற்றேர்
வலப்பாகன் புக்க மனை. 52

### தமயந்தி தன்மகவைத் தேர்ப்பாகனாகிய நளனிடத்தில் அனுப்பியது.

இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த
கொடைத்தொழிலா னென்றயிர்த்தக் கோமான்-மடைத்தொழில்கள்,
செய்கின்ற தெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்று
ணைகின்ற நெஞ்சா ணயந்து. 53

கோதை நெடுவேற் குமரனையுந் தங்கையையும்
ஆதி யரச னருகாகப்-போத
விளையாட விட்டவன்றன் மேற்செயனு டென்றுள்
வளையாடுங் கையாண் மதித்து. 54

### அரசன் மக்களைத்தழுவி வினவுதல்.

மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா-மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன். 55

### பிள்ளைகள் சொல்லுதல்.

மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட் டவனேக-இந்நகர்க்கே
வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றா னென்றா ரழுது. 56

ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்-பூங்காவில்

வள்ளம்போற் கோங்கு மலரும் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து. 57

அரசன் வினா.

உங்க ளரசொருவ னுளநீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ-செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி யெடுத்து. 58

மக்கள் விடையளித்தல்.

நெஞ்சாலிம் மாற்ற நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடுமடையா-எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி. 95

எந்தை கழலிணையி லெம்மருங்குங் காணலாஞ்
சந்து சுளியுங் கடாக்களிற்றின்-வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியிற் றேய்ந்த வடு. 60

அரசன் சொல்லுதல்.

மன்னர் பெருமை மடைய ரறிவரோ
உன்னை யறியா துரைசெய்த-என்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண். 61

## தமையந்தி துயரமுறல்.

சொற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்ற னுங்குரைத்த வாசகத்தை-முற்றும்
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தா ளழுது. 62

கொங்கை யளைந்து குழைதிருத்திக் கோலஞ்செய்
அங்கை யிரண்டு மடுபுகையால்-இங்கன்
கருகியவோ வென்றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேற் கண்ணாள் பதைத்து. 63

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து-மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்கா ணைங்கள்
கொடைத்தொழிலா னென்றாள் குறித்து. 64

## வீமன் நளனிடஞ்சொல்லல்.

போதலருங் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்-ஓதம்
வரிவளை கொண் டேறும் வளநாடன் றன்னைத்
தெரிவரிதா நின்றான் றிகைத்து. 65

செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கும்
ஒவ்வாதுகொண்ட வுருவென்று-எவ்வாயும்
நோக்கினா னோக்கித் தெளிந்தான் நுணங்கியதோர்
வாக்கினான் றன்னை மதித்து. 66

வீமன் நளனைநோக்கிச் சொல்லியது.

பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று-மந்தி
தெளியா திருக்குந் திருநாடா வுன்னை
ஒளியாது காட்டுன் னுரு. 67

அரவரசன் றுங்கொடுத்த வம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி யுடுத்தான்-ஒருதுகிலைப்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையாற் பூண்டளிக்குங்
கோத்தாய முன்னிழந்த கோ. 98

நளன் சுயரூபந் தரித்தல்.

மிக்கோ னுலகளந்த மெய்ப்படியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே-அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு. 69

நளனை அவன்மக்களும் மனைவியும் வணங்குதல்.

தாதையைமுன் கண்டலுமே தாமரைக ணீரரும்பப்
போதலருங் குஞ்சியான் புக்கணைந்து-சோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து 70

பாதித் துகிலோடு பாய்ந்திழியுங் கண்ணீருஞ்
சீதக் களபதனஞ் சேர்மாசும்-போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீ ரவற்கு. 71

வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும் வீழ்துயில்கொள்
அவ்விடத்தே நீத்த வவரென்றே இவ்விடத்தே
வாராார் முலையாளம் மன்னவனைக் காணமல்
நீரான் மறைத்தனவே நின்று. 72

தேவர்கள் நளன்மேல் பூமாரிசொரிதல்.

உத்தமரின் மற்றிவனை யொப்பா ரொருவரிலை
இத்தலத்தி லென்றிமையோ ரெம்மருங்கும்-கைத்தலத்தில்
தேமாரி பெய்யுந் திருமலர்த்தார் வேந்தன்மேற்
பூமாரி பெய்தார் புகழ்ந்து. 73

கலிபுருடன் நளனுக்கு வரமளித்தல்.

தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறைமைக்கும்
பூவுலகி லொப்பாயார் போதுவார்-காவலனே
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றென்பாற் பாரளிப்பான் முன். 74

உன்சரிதஞ் சொல்லி யுலகாளுங் காலத்து
மின்சொரியும் வேலாய் மிகவிரும்பி-என்சரிதம்
கேட்டாரை நீயடையே லென்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மதித்து. 75

என்காலத் துன்சரிதம் கேட்டாரை யானடையேன்
மின்கா லயில்வேலாய் மெய்யென்று-நன்காவி
மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி. 76

வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையு மக்களையுங் கொண்டுபோய்த்-தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து. 77

### ரிதுபர்ணன் தன்னகர் சேர்தல்.

உன்னையா னென்று முணரா துரைத்தவெலாம்
பொன்னமருந் தாராய் பொறுவென்று-பின்னைத்தன்
மேனீர்மை குன்றாவெறுந்தேர் மிசைக்கொண்டான்
மானீ ரயோத்தியார் மன் 78

### நளன்மனைவி மக்களுடன் நிடதேசஞ்செல்லல்.

விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினான்-முற்றும்பல்
தேனீ ரளித்தருகு செங்நெற் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மன். 79

தானவரை வெல்லத் தரித்துநெடு வைவேலாய்
ஏனெறி தூரமினி யெத்தனையோ-மானேகேள்
இந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
விந்தமெனு நம்பதிதான் மிக்கு. 80

இக்கங்குல் போக விகல்வே னளனெறிநீர்
செய்க்கங்கு பாயுந் திருநாடு-புக்கங்
கிருக்குமா காண்பான்போ லேறினான் குன்றிற்
செருக்குமான் றேர்வெய்யோன் சென்று. 81

மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்-சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்ததொரு
பூவிந்தை வாழும் பொழில். 81

நளன் புட்கரனுக்குத்தூதனுப்பி மறுபடியும் சூதாடல்.

மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்றபணைய முளதென்று-கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்டெரியற் றேர்வேந்தன் றான். 83

மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தூய நறுமலர்ப்பூஞ் சோலைவாய்-ஆய
பெருந்தானை சூழப் பேடைநடையாளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர். 84

செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினவினன்-அங்கோலக்
காவற் கொடைவேந்த காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று. 85

பந்தயம்வைத்தல்.

தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாதுபணைய மெனவியம்பச்-சூதாட
மையாரு யிற்றுயிலு மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து. 86

## நளன் வெற்றியடைந்து தன்னகரைக் கைப்பற்றல்.

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்-ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து. 87

அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்தபடியே வழிக்கொண்டான்-செந்தமிழோர்
நாவேந்த சொல்லா னளனென்று போற்றிசைக்குங்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து. 88

ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி-ஆனபுகழ்ப்
பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்பொலிந்துத்
தன்னகரம் புக்கா னளன். 89

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமே
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ-பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்ப னெதிர். 90

### நளவெண்பா-முற்றிற்று.



உ

கடவுள் துணை.

ஔவையார்

அருளிச்செய்த

# குறள் மூலம்.



இது

காஞ்சீபுரம் வித்வான்

ஸ்ரீமத். இராமசாமி நாயுடவர்களால்

பார்வையிடப்பட்டு,



மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை.



1903-ம் ஞு ஜுலைமீ.

இதன் விலை அணா-2.

# அட்டவணை.


| | பக்கம். | | பக்கம் |
|---|---|---|---|
| ௧. வீட்டுநெறிப்பால். | | முத்திகாண்டல் | ௧௬ |
| பிறப்பினிலைமை | ௧ | உருபாதீதம் | ௧௭ |
| உடம்பின்பயன் | ௨ | பிறப்பறுதல் | ௧௮ |
| உள்ளுடம்பினிலைமை | ௩ | தூயவொளிகாண்டல் | ௧௯ |
| நாடிதாரணை | ௪ | சதாசிவம் | ௨௦ |
| வாயுதாரணை | ௫ | ௩. தன்பால். | |
| அங்கிதாரணை | ௬ | குருவழி | ௨௧ |
| அமுததாரணை | ௭ | அங்கியிற்பஞ்சு | ௨௨ |
| அர்ச்சனை | ௮ | மெய்யகம் | ௨௩ |
| உள்ளுணர்தல் | ௯ | கண்ணாடி | ௨௪ |
| பத்தியுடைமை | ௧௦ | சூனியகாலமறிதல் | ௨௫ |
| ௨. திருவருட்பால். | | சிவயோகநிலை | ௨௬ |
| அருள்பெறுதல் | ௧௧ | ஞானநிலை | ௨௭ |
| நினைப்புறுதல் | ௧௨ | ஞானம்பிரியாமை | ௨௮ |
| தெரிந்துதெளிதல் | ௧௩ | மெய்ந்நெறி | ௨௯ |
| கலைஞானம் | ௧௪ | துரியதரிசனம் | ௩௦ |
| உருவொன்றிநிற்றல் | ௧௫ | உயர்ஞானதரிசனம் | ௩௧ |

ஆ அதிகாரம் ௩௧-க்கு குறள் ௩௧௦.


## அவையடக்கம்.

### நேரிசைவெண்பா.

நல்லார் பிறர்குற்ற நாடார் நலந்தெரிந்து
கல்லார் பிறர்குற்றங் காண்பரோ—அல்லாத
என்போல்வா ரென்னை யிகழ்வரோ வென்கவிக்குப்
பின்பாரோ காண்பார் பிழை.

ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காதலிரு வர்க்குங் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

---

# ஔவைகுறள்.

## (முதலாவது) - வீட்டுநெறிப்பால்.

### பிறப்பினிலைமை.

ஆதியாய் நின்ற வறிவு முதலெழுத்
தோதிய நூலின் பயன். (க)

பரமாய சத்தியுட் பஞ்சமா பூதந்
தரமாறிற் றோன்றும் பிறப்பு. (௨)

ஓசைபரிச முருவஞ் சுவை நாற்றம்
ஆசை படுத்து மளறு. (௩)

தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும்
உருவத்தா லாய பயன். (௪)

நிலமைந்து நீர்நான்கு நீடங்கி மூன்றே
உலவையிரண் டொன்று விண். (௫)

மாயன் பிரம னுருத்திரன் மகேசனோ
டாயுஞ் சிவமூர்த்தி யைந்து. (௬)

மாலய னங்கி யிரவிமதி யுமையோ
டேலுந் திகழ்சத்தி யாறு. (௭)

தொக்குதிரத் தோடூன் மூளைநிண மென்பு
சுக்கிலந் தாதுக ளேழு. (௮)

மண்ணொடு நீரங்கி மதியொடு காற்றிரவி
விண்ணெச்ச மூர்த்தியோ டெட்டு. (௯)

இவையெல்லாங் கூடி யுடம்பாய வொன்றி
னவையெல்லா மானது விந்து. (௧0)

---

## உடம்பின்பயன்.

உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண். (க)

உணர்வாவ தெல்லா முடம்பின் பயனே
யுணர்க வுணர் வுடையார். (உ)

ஒருபய னாவ துடம்பின் பயனே
தருபயனாஞ் சங்கரனைச் சார். (ங)

பிறப்பினாற் பெற்ற பயனாவ தெல்லாந்
துறப்பதாந் தூநெறிக்கட் சென்று. (ச)

உடம்பினா லன்றி யுணர்வுதா னில்லை
யுடம்பினா லுன்னியதே யாம். (ரு)

மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கால்
ஈசனைக் காட்டு முடம்பு. (சா)

ஓசை யுணர்வுக ளெல்லாந் தருவிக்கும்
நேசத்தா லாய வுடம்பு. (எ)

உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே
அயிர்ப்பின்றி யாதியை நாடு. (அ)

உடம்பினாற் பெற்ற பயனாவ தெல்லாம்
திடம்பட வீசனைத் தேடு. (கூ)

அன்னத்தா லாய வுடம்பின் பயனெல்லா
முன்னோனைக் காட்டி விடும். (க0)

## உள்ளுடம்பினிலைமை.

கற்கலாங் கேட்கலாங் கண்ணாரக் காணலாம்
உற்றுடம்பா லாய வுணர்வு. (௧)

வெள்ளிபொன் மேனிய தொக்கும் வினையுடைய
உள்ளுடம்பி னுய வொளி. (௨)

சென்றுண்டு வந்து திரிதரு முள்ளுடம்
பென்றுங் கெடாத திது. (௩)

வருபய னுண்டு மகிழ்ந்துடனு நிற்கும்
ஒருபயனைக் காட்டு முடம்பு. (௪)

அல்லற் பிறப்பை யகற்றுவிக்கு மாய்ந்தாய
தொல்லை யுடம்பின் றொடர்பு. (௫)

நல்வினையுந் தீவினையு முண்டு திரிதருஞ்
செய்வினைக்கும் வித்தா முடம்பு. (௬)

உள்ளுடம்பின் வாழ்வன வொன்பது மேழைக்
கள்ளவுடம் பாகி விடும். (௭)

பொய்க்கெல்லாம் பாசனமா யுள்ளதற்கோர் வித்தாகு
மெய்க்குள்ளா மாய வுடம்பு. (௮)

வாயுவி னாலாய வுடம்பின் பயனே
ஆயுவி னெல்லை யது. (௯)

ஒன்பது வாசலு மொக்க வடைத்தால்
அன்பதி லொன்று மரன். (௧௦)

---

## நாடிதாரணை.

எழுபத்தீ ராயிர நாடி யவற்றுள்
முழுபத்து நாடி முதல். (க)

நரம்பெனு நாடி யிவையினுக் கெல்லாம்
உரம்பெறு நாடியொன் றுண்டு. (உ)

உந்தி முதலா யுறுமுடிகீழ் மேலாய்ப்
பந்தித்து நிற்கும் பரிந்து. (ங)

காலொடு கையி னடுவிடைத் தாமரை
நூல்போலு நாடி நுழைந்து. (ச)

ஆதித்தன் றன்கதிர் போலவந் நாடிகள்
பேதித்துத் தாம்பரந்த வாறு. (ரு)

மெய்யெல்லா மாகி நரம்போ டெலும்பிசைந்து
பொய்யில்லை நாடிப் புணர்வு (சு)

உந்தி முதலாகி யோங்காரத்துட் பொருளாய்
நின்றது நாடி நிலை. (எ)

நாடிக ளூடுபோய்ப் புக்க நலஞ்சுடர்தான்
வீடு தருமாம் விரைந்து. (அ)

நாடிவழக்க மறிந்து செறிந் தடங்கி
நீடொளி காண்ப தறிவு. (கூ)

அறிந்தடங்கி நிற்குமந் நாடிக டோறுஞ்
செறிந்தடங்கி நிற்குஞ் சிவம். (கo)

---

## வாயுதாரணை.

மூலத்திற் றோன்றி முடிவிலிரு நான்காகிக்
கால்வெளியிற் பன்னிரண்டாங் காண். (௧)

இடை பிங்கலைக ளிரேசக மாற்றில்
அடையு மரனு ரருள். (௨)

அங்குலியால் மூடி முறையா லிரேசிக்கில்
பொங்குமாம் பூரகத்தி னுள். (௩)

எண்ணிலி யூழி யுடம்பா யிரேசிக்கில்
உண்ணிலைமை பெற்ற துணர்வு. (௪)

மயிர்க்கால் வழியெல்லா மாய்கின்ற வாயு
உயிர்ப்பின்றி யுள்ளே பதி. (௫)

இரேசிப்பது போலப் பூரித்து நிற்கில்
தராசுமுனை நாக்கதுவே யாம். (௬)

கும்பகத்தி னுள்ளே குறித்தரனைத் தானோக்கில்
தும்பிபோ னிற்குந் தொடர்ந்து. (௭)

இரேசக பூரக கும்பக மாற்றில்
தராசுபோ னிற்குந் தலை. (௮)

வாயுவழக்க மறிந்து செறிந் தடங்கில்
ஆயுட் பெருக்க முண்டாம். (௯)

போகின்ற வாயு பொருந்திற் சிவமொக்கும்
தாழ்கின்ற வாயு வடக்கு. (௧௦)

---

## அங்கிதாரணை.

அந்தத்தி லங்கி யழல்போலத் தானோக்கில்
பந்தப் பிறப்பறுக்க லாம். (க)

உள்ளும் புறம்பு மொருங்கக் கொழூவூறில்
கள்ளமல மறுக்க லாம். (உ)

எரியுந் தழல்போல வுள்ளூற நோக்கில்
கரியுங் கனலுருவ மாம். (ங)

உள்ளங்கி தன்னை யொருங்கக் கொழூவூறில்
வெள்ளங்கி தானும் விரைந்து. (ச)

உந்தியி னுள்ளே யொருங்கச் சுடர்பாய்ச்சில்
அந்தி யழலுருவ மாம். (ரு)

ஐயைந்து மாய வகத்து ளெரிநோக்கில்
பொய்யைந்தும் போகும் புறம். (சு)

ஐம்பது மொன்று மழல்போலத் தானோக்கில்
உம்பரொளி யாய் விடும். (எ)

தூண்டுஞ் சுடரைத் துளங்காமற் றானோக்கில்
வேண்டுங் குறைமுடிக்க லாம். (அ)

உள்ளத்தா லங்கி யொருங்கக் கொழூவூறில்
மெள்ளத்தான் வீடாம் விரைந்து. (கூ)

ஒள்ளிதா யுள்ள சுடரை யுறநோக்கில்
வெள்ளியா மாலை விளக்கு. (க0)

---

## அமுததாரணை.

அண்ணாக்குத் தன்னை யடைத்தங் கமிர்துண்ணில்
விண்ணோர்க்கு வேந்தனு மாம். (க)

ஈரெண் கலையி னிறைந்த வமிர்துண்ணில்
பூரண மாகும் பொலிந்து. (உ)

ஓங்கார மான கலசத் தமிர்துண்ணில்
போங்கால மில்லை புரிந்து. (ந)

ஆனகலசத் தமிர்தை யறிந் துண்ணில்
போனகம் வேண்டாமற் போம். (ச)

ஊறு மமிர்தத்தை யுண்டியுறப் பார்க்கில்
கூறும் பிறப்பறுக்க லாம். (ரு)

ஞானவொளி விளக்கா னல்லவமிர் துண்ணில்
ஆன சிவயோகி யாம். (சா)

மேலை யமிர்தை விலங்காமற் றுணுண்ணில்
காலனை வஞ்சிக்க லாம். (எ)

காலென லூக்கக் கலந்தவமிர் துண்ணில்
ஞான மதுவா நயந்து. (அ)

எல்லையி னின்னமிர்த முண்டாங் கினிதிருக்கில்
தொல்லை முதலொளியே யாம். (கூ)

நிலாமண்டபத்தி னிறைந்த வமிர் துண்ணில்
உலாவலா மந்தரத்தின் மேல். (க0)

## அர்ச்சனை.

மண்டலங்கண் மூன்று மருவ வுடனிருத்தி
அண்டரனை யர்ச்சிக்கு மாறு. (க)

ஆசனத்தைக் கட்டி யரன்றன்னை யர்ச்சித்துப்
பூசனைசெய் துள்ளே புணர். (உ)

உள்ளமே பீட முணர்வே சிவலிங்கந்
தெள்ளிய ரர்ச்சிக்கு மாறு. (ங)

ஆதாரத் துள்ளே யறிந்து சிவனுருவைப்
பேதமற வர்ச்சிக்கு மாறு. (ச)

பூரித் திருந்து புணர்ந்து சிவனுருவைப்
பாரித்தங் கர்ச்சிக்கு மாறு. (ரு)

விளக்குறு சிந்தையான் மெய்ப்பொருளைக் கண்டு
துளக்கற வர்ச்சிக்கு மாறு. (சு)

பிண்டத்தி னுள்ளே பெயரா திறைவனைக்
கண்டுதா னர்ச்சிக்கு மாறு. (எ)

மந்திரங்க ளெல்லா மயங்காம லுண்ணினைந்து
முந்தரனை யர்ச்சிக்கு மாறு. (அ)

பேராக் கருத்தினாற் பிண்டத்தி னுண்ணினைந்
தாராதனை செய்யு மாறு. (கூ)

உள்ளத்தி னுள்ளே யுறப்பார்த்தங் கொண்சுடரை
மெள்ளத்தா னர்ச்சிக்கு மாறு. (க0)

---

## உள்ளுணர்தல்.

எண்ணிலி யூழி தவஞ்செய்திங் கீசனை
உண்ணிலைமை பெற்ற துணர்வு. (க)

பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சித்து
நல்லுணர்வு பெற்ற நலம். (உ)

எண்ணற் கரிய வருந்தவத் தாலன்றே
நண்ணப் படுமுணர்வு தான். (ங)

முன்னைப் பிறப்பின் முயன்ற தவத்தினால்
பின்னைப் பெறுமுணர்வு தான். (ச)

காயக் கிலேச முணர்ந்த பயனன்றே
ஓயா வுணர்வு பெறல். (ரு)

பண்டைப் பிறவிப் பயனாந் தவத்தினால்
கண்டங் குணர்வு பெறல். (சு)

பேராத் தவத்தின் பயனும் பிறப்பின்மை
ஆராய்ந் துணர்வு பெறின். (எ)

ஞானத்தா லாய வுடம்பின் பயனன்றே
மோனத்தா லாய வுணர்வு. (அ)

ஆதியோ டொன்று மறிவைப் பெறுவதுதான்
நீதியாற் செய்த தவம். (கூ)

காடுமலையுங் கருதித் தவஞ் செய்தால்
கூடு முணர்வின் பயன். (கo)

## பத்தியுடைமை.

பத்தியா லுள்ளே பரிந்தரனைத் தானோக்கில்
முத்திக்கு மூல மது. (௧)

பாடியு மாடியும் பல்காலும் நேசித்துத்
தேடுஞ் சிவசிந்தை யால். (௨)

அன்பா லழுது மலறியு மாள்வானை
யென்புருகி யுள்ளே நினை. (௩)

பூசனைசெய்து புகழ்ந்து மனங் கூர்ந்து
நேசத்தா லீசனைத் தேடு. (௪)

கண்ணு லுறப்பார்த்துக் காதலாற் றானோக்கில்
உண்ணுமே யீச னொளி. (௫)

நல்லானைப் பூசித்து நாதனென வுருகில்
நில்லாதோ வீச னிலை. (௬)

அடியார்க் கடியரா யன்புருகித் தம்முள்
படியொன்றிப் பார்த்துக் கொளல். (௭)

ஈசனெனக் கருதி யெல்லா வுயிர்களையும்
நேசத்தால் நீநினைந்து கொள். (௮)

மெய்ம்மயிர் கூர விதிர்ப்புற்று வேர்த்தெழுந்து
பொய்ம்மையி லீசனைப் போற்று. (௯)

செறிந்தறிந்து நாடியே செவ்விதா யுள்ளே
அறிந்தரனை யாய்ந்து கொளல். (௧0)

வீட்டுநெறிப்பால் முற்றிற்று.

ஆகத்திருக்குறள் ௧00.

இரண்டாவது

# திருவருட்பால்.

## அருள்பெறுதல்.

அருளினு லன்றி யகத்தறி வில்லை
அருளின் மலமறுக்க லாம். (க)

இருளைக் கடிந்தின் றிறைவ னருளால்
தெருளுஞ் சிவசிந்தை யாம். (உ)

வாய்மையாற் பொய்யா மனத்தினல் மாசற்ற
தூய்மையா மீச னருள். (ங)

ஒவ்வகத்து ணின்ற சிவனருள் பெற்றக்கால்
அவ்வகத்து ளானந்த மாம். (ச)

உன்னுங் கருமம முடிக்கலா மொள்ளிதாய்
மன்னு மருள்பெற்றக் கால். (ரு)

எல்லாப் பொருளு முடிக்கலா மீசன்றன்
தொல்லையருள் பெற்றக் கால். (சு)

சிந்தையு ணின்ற சிவனருள் பெற்றக்கால்
பந்தமாம் பாச மறும். (எ)

மாசற்ற கொள்கை மதிபோலத் தான்ரேன் றும்
ஈசனருள் பெற்றக் கால். (அ)

ஆவாவென் ருேதி யருள்பெற்ருர்க் கல்லாது
தாவாதோ ஞான வொளி. (கூ)

ஓவாச் சிவனருள் பெற்ரு லுரையின்றித்
தாவாத வின்பந் தரும். (கo)

## நினைப்புறுதல்.

கருத்துறப் பார்த்துக் கலங்காம லுள்ளத்
திருத்திச் சிவனை நினை. (க)

குண்டலியி னுள்ளே குறித்தரனைச் சிந்தித்து
மண்டலங்கள் மேலாகப் பார். (உ)

ஓர்மின்கள் சிந்தையி லொன்றச் சிவன்றன்னைப்
பார்மின் பழம்பொருளே யாம். (ங)

சிக்கெனத் தேர்ந்துகொள் சிந்தையி லீசனை
மிக்க மலத்தை விடு. (ச)

அறிமின்கள் சிந்தையி லாதாரத் தைச்சேர்ந்
துறுமின்க ளும்முளே யோர்ந்து. (ரு)

நிற்றம் நினைந்திரங்கி நின்மலனை யொன்றுவிக்கில்
முற்று மவனொளியே யாம். (சா)

ஓசையுணர்ந் தங்கே யுணர்வைப் பெறும்பரிசால்
ஈசன் கருத்தா யிரு. (எ)

இராப்பக லன்றி யிருசுடர் சிந்திக்கில்
பராபரத்தோ டொன்றலு மாம். (அ)

மிக்க மனத்தால் மிகநினைந்து சிந்திக்கில்
ஒக்கச் சிவனுருவ மாம். (கூ)

வேண்டுவார் வேண்டும் வகைதான் விரிந்தெங்குங்
காண்டற் கரிதாஞ் சிவம். (க0)

---

## தெரிந்துதெளிதல்.

தேறித் தெளிமின் சிவமென்றே யுள்ளுணர்வில்
கூறிய பல்குணமு மாம். (க)

உண்டில்லை யென்னு முணர்வை யறிந்தக்கால்
கண்டில்லை யாகுஞ் சிவம். (உ)

ஒருவர்க் கொருவனே யாகுமுயிர்க்கெல்லாம்
ஒருவனே பல்குணமு மாம். (ங)

எல்லார்க்கு மொன்றே சிவமாவ தென்றுணர்ந்த
பல்லோர்க்கு முண்டோ பவம். (ச)

ஆயுமிரவியு மொன்றே யனைத் துயிர்க்கும்
ஆயுங்கா லொன்றே சிவம். (ரு)

ஓவாத தொன்றே பலவா முயிர்க்கெல்லாந்
தேவான தென்றே தெளி. (சு)

தம்மை யறியாதார் தாமறிவோ மென்பதென்
செம்மையா லீசன் றிறம். (எ)

எல்லா வுலகத் திருந்தாலு மேத்துவர்கள்
நல்லுலக நாத னடி. (அ)

உலகத்திற் பட்ட வுயிர்க்கெல்லா மீசன்
நிலவுபோ னிற்கும் நிறைந்து. (கூ)

உலகத்தில் மன்னு முயிர்க்கெல்லா மீசன்
அலகிறந்த வாதியே யாம். (க0)

---

## கலைஞானம்.

சத்தியாஞ் சந்திரனைச் செங்கதிரோ னூடுருவில்
முத்திக்கு மூல மது. (க)

அயனங்கொள் சந்திர னாதித்த னென்றில்
நயனமா முத்திக்கு வீடு. (உ)

அஞ்சானு மாயா தறம்பொரு ளின்பமுந்
துஞ்சாதவர் துறக்கு மாறு. (ங)

ஈசனோ டொன்றி லிசையாப் பொருளில்லை
தேசவிளக் கொளியே யாம். (ச)

தாஞ்செய் வினையெல்லாந் தம்மையற வுணரில்
காஞ்சனமே யாகுங் கருத்து. (ரு)

கூடக மான குறியெழுத்தைத் தானறியில்
வீடக மாகும் விரைந்து. (சா)

வீடகமாக விழைந் தொல்லை வேண்டுமேல்
கூடகத்திற் சோதியோ டொன்று. (எ)

பூரித்து நின்ற சிவனைப் புணரவே
பாரித்த தாகுங் கருத்து. (அ)

இரேசக மாற்றி யிடையறு தேகிற்கில்
பூரிப்ப துள்ளே சிவம். (சு)

சிந்தையில் நின்ற நிலைவிசும்பிற் சாக்கிரமாம்
சந்திரனிற் றேன்று முணர்வு. (கO)

## உருவொன்றிநிற்றல்.

எள்ளகத் தெண்ணெ யிருந்ததனை யொக்குமே
உள்ளகத் தீச னொளி. (க)

பாலின்க ணெய்போற் பரந்தெங்கு நிற்குமே
நூலின்க ணீச னுழைந்து. (உ)

கரும்பினிற் கட்டியுங் காய்பாலி னெய்யும்
இரும்புண்ட நீரு மியல்பு. (ங)

பழத்தினிர தம்போற் பரந்தெங்கு நிற்கும்
வழுத்தினு லீச னிலை. (ச)

தனுவோடு தோன்றுமே தானெல்லா மாகி
யணுவதுவாய் நிற்கு மது. (ரு)

வித்து முளைபோல் விரிந்தெங்கு நிற்குமே
ஒத்துளே நிற்கு முணர்வு. (சா)

அச்சமாங் கார மகத்தடக்கி னுற்பின்னை
நிச்சயமா மீச னிலை. (எ)

மொட்டினீர் நாற்ற முளைமுட்டை போலுமே
வீட்டுளே நிற்கு மியல்பு. (அ)

நினைப்பவர்க்கு நெஞ்சத்துள் நின்மலனாய் நிற்கும்
அனைத்துயிர்க்குந் தானு மவன். (கூ)

ஓசையி னுள்ளே யுதிக்கின்ற தொன்றுண்டு
வாசமலர் நாற்றம்போல் வந்து. (கo)

---

## முத்திகாண்டல்.

மனத்தோ டுறுபுத்தி யாங்காரஞ் சித்தம்
அனைத்தினு மில்லை யது. (க)

வாக்குங் கருத்து மயங்குஞ் சமயங்கள்
ஆக்கிய நூலினு மில். (உ)

உருவமொன் றில்லை யுணர்வில்லை யோதும்
அருவமுந் தானதுவே யாம். (ங)

தனக்கோ ருருவில்லை தானெங்கு மாகி
மனத்தகமாய் நிற்கு மது. (ச)

பெண்ணா ணலியென்னும் பேரொன் றிலதாகி
விண்ணாகி நிற்கும் வியப்பு. (ரு)

அனைத்துருவ மாய வறிவை யகலில்
தினைத்துணையு மில்லை சிவம். (சா)

துனிமுகத்துக் காதியாத் துன்னறி வின்றி
அணிதா ரிரண்டு விரல். (எ)

மயிர்முனையிற் பாதி மனத்தறி வுண்டேல்
அயிர்ப்புண்டங் காதி நிலை. (அ)

தற்பர மான சதாசிவத்தோ டொன்றில்
உற்றறி வில்லை யுயிர்க்கு. (கூ)

உறக்க முணர்வு பசிகெடப் பட்டால்
பிறக்கவும் வேண்டா பிறப்பு. (க0)

---

## உருபாதீதம்.

கருவின்றி வீடாங் கருத்துற வேண்டில்
உருவின்றி நிற்கு முணர்வு. (க)

பிறத்தலொன் றின்றிப் பிறவாமை வேண்டில்
அறுத்துருவ மாற்றி யிரு. (உ)

உருவங்க ளெல்லா மறுத்தற மாற்றில்
கருவேது மில்லை தனக்கு. (ங)

கறுப்பு வெளுப்பு சிவப்புறு பொன்பச்சை
யறுத்துருவ மாற்றி யிரு. (ச)

அனைத்துருவ மெல்லா மறக்கெடுத்து நின்றால்
பினைப்பிறப் பில்லையாம் வீடு. (ரு)

நினைப்பு மறப்பற்று நிராகரித்து நின்றால்
தனக்கொன்று மில்லை பிறப்பு. (சு)

குறித்துருவ மெல்லாங் குறைவின்றி மாற்றில்
மறித்துப் பிறப்பில்லை வீடு. (எ)

பிதற்று முணர்வை யறுத்துப் பிரபஞ்ச
விகற்ப முணர்வதே வீடு. (அ)

பிறப்பறுக்க வீடாம் பேருவமை யின்றி
அறுத்துருவ மாற்றி யிரு. (கூ)

ஓசை யுணர்வோ டுயிர்ப்பின்மை யற்றக்கால்
பேசவும் வேண்டா பிறப்பு. (கo)

---

## பிறப்பறுதல்.

தன்னை யறியு மறிவுதனைப் பெறில்
பின்னைப் பிறப்பில்லை வீடு. (க)

அறம் பாவமாயு மறிவுதனைக் கண்டால்
பிறந்துழல வேண்டா பெயர்ந்து. (உ)

சிவனுருவந் தானாய்ச் செறிந்தடங்கி நிற்கில்
பவநாச மாகும் பரிந்து. (ங)

உறக்க முணர்வோ டுயிர்ப்பின்மை யற்றால்
பிறப்பின்றி வீடாம் பரம். (ச)

நினைப்பு மறப்பு நெடும்பசியு மற்றால்
அனைத்துலகும் வீடா மது. (ரு)

உடம்பிரண்டுங் கெட்டா லுறுபய னென்றுண்டு
திடம்படு மீசன் றிறம். (சு)

தன்னை யறிந்து செறிந்தடங்கித் தானற்றால்
பின்னைப் பிறப்பில்லை வீடு. (எ)

மருளன்றி மாசறுக்கின் மாது வெளியாய்
இருளின்றி நிற்கு மிடம். (அ)

விகாரங் கெடமாற்றி மெய்யுணர்வு கண்டால்
அகாரமாங் கண்டீ ரறிவு. (கூ)

சிந்தை யாங்காரஞ் செறிபுல னற்றக்கால்
முந்தியே யாகுமாம் வீடு. (க0)

---

## தூயவொளிகாண்டல்.

தோன்றிய தெல்லாந் தொடக்கறுத்துத் தூவெளி
யாய்த், தோன்றியக்காற் றூய வொளி. (க)

தெளிவாய தேச விளக்கொளியைக் காணில்
விளியாய வீடதுவே யாம். (உ)

மின்போ லுருவ விளக்கொளிபோல் மேற்காணில்
முன்போல மூலம் புகும். (ங)

பளிங்கு வலம்புரி பானிறத்த தாகில்
துளங்கொளியாந் தூய நெறி. (ச)

சங்கு நிறம்போற் றவள வொளிகாணில்
அங்கையி னெல்லியே யாம். (ரு)

துளங்கிய தூண்டா விளக்கொளி காணில்
விளங்கிய வீடாம் விரைந்து. (சு)

மின்மினி போன்ற விளக்காகத் தான்றோன்றில்
அன்னப் பறவையே யாம். (எ)

உள்ளொளி தோன்றி லுணரி லருளொளி
அவ்வொளி யாதி யொளி. (அ)

பரந்த விசும்பிற் பரந்த வொளிகாணில்
பரம்பரமே யாய வொளி. (கூ)

ஆதி யொளியாகி யாள்வானுந் தானாகி
ஆதியவ னுருவ மாம். (க0)

---

## சதாசிவம்.

பத்துத் திசையும் பரந்த கடலுலகும்
ஒத்தெங்கும் நிற்குஞ் சிவம். (க)

விண்ணிறைந்து நின்று விளங்குஞ் சுடரொளிபோல்
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம். (உ)

ஆகமுஞ் சீவனு மாசையுந் தானாகி
ஏகமாய் நிற்குஞ் சிவம். (௩)

வாயுவாய் மன்னுயிராய் மற்றவற்றி னுட்பொருளாய்
ஆயுமிடந் தானே சிவம். (௪)

எண்ணிறைந்த யோனி பலவாய்ப் பரந்தெங்கும்
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம். (௫)

ஒன்றேதா னூழி முதலாகிப் பல்லுயிர்க்கும்
ஒன்றாகி நிற்குஞ் சிவம். (௬)

மூலமொன் றாகி முடிவொன்றா யெவ்வுயிர்க்குங்
காலமாய் நிற்குஞ் சிவம். (௭)

மண்ணிற் பிறந்த வுயிர்க்கெல்லாந் தானாகி
விண்ணகமே யாகுஞ் சிவம். (௮)

தோற்றமது வீடாகித் தொல்லைமுத லொன்றாகி
ஏத்தவரு மீச னுளன். (௯)

நிற்கும் பொருளும் நடப்பனவுந் தானாகி
உற்றெங்கும் நிற்குஞ் சிவம். (க0)

திருவருட்பால் முற்றிற்று.

ஆ திருக்குறள் - உ00.

---

மூன்றாவது.

## தன் பால்



### குருவழி.

தன்பா லறியுந் தவமுடையார் நெஞ்சகத்துள்
அன்பா யிருக்கு மரன். (க)

சிந்தை சிவமாகக் காண்பவர் சிந்தையில்
சிந்தித் திருக்குஞ் சிவம். (உ)

குருவி னடிபணிந்து கூடுவதல்லார்க்
கருவமாய் நிற்குஞ் சிவம். (ந)

தலைப்பட்ட சற்குருவின் சன்னிதியி லல்லால்
வலைப்பட்ட மானதுவே யாம். (ச)

நெறிபட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பிறிவற் றிருக்குஞ் சிவம். (ரு)

நல்லன நூல்பல கற்பினுங் காண்பரிதே
எல்லை யில்லாத சிவம். (சா)

நினைப்பு மறப்பு மில்லாதவர் நெஞ்சந்
தனைப் பிரியாது சிவம். (எ)

ஒன்றி லொன்றாத மனமுடையா ருடல்
என்று மொன்றாது சிவம். (அ)

நாட்டமில்லா விடம் நாட்ட மறிந்தபின்
மீட்டு விடாது சிவம். (கூ)

பஞ்சமா சத்த மறுப்பவர்க் கல்லாஅல்
அஞ்ச லென்னாது சிவம். (க0)

## அங்கியிற்பஞ்சு.

அங்கியிற் பஞ்சுபோ லாகாயத்தே நினையில்
சங்கிக்க வேண்டா சிவம். (க)

மெய்ப்பா லறியாத மூடர்த நெஞ்சத்தின்
அப்பால தாகுஞ் சிவம். (உ)

நெஞ்சகத்து ணோக்கி நினைப்பவர்க் கல்லா அல்
அஞ்ச லென்னுது சிவம். (ங)

பற்றிலா தொன்றினைப் பற்றுை லல்லது
கற்றதனு லென்ன பயன். (ச)

தம்மை யறிவாரைத் தாமறிந்து கொண்டபின்
தம்மை யறிவரோ தான். (ரு)

அசபையறிந் துள்ளே யழுலெழ நோக்கில்
இசையாது மண்ணிற் பிறப்பு. (சு)

இமையாத நாட்டத் திருந் துணர்வாருக்
கமையாத வானந்த மாம். (எ)

துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு. (அ)

மதிபோ லுடம்பினை மாசற நோக்கில்
விதிபோ யகல விடும். (கூ)

சீவன் சிவலிங்க மாகத் தெளிந்தவர்தம்
பாவ நசிக்கும் பரிந்து. (கO)

## மெய்யகம்.

மெய்யகத்தி னுள்ளே விளங்குஞ்சுடர் நோக்கில்
கையகத்தி னெல்லிக் கனி. (க)

கரையற்ற செல்வத்தைக் காணுங் காலத்தில்
உரையற் றிருப்ப துணர்வு. (உ)

உண்டுபசி தீர்ந்தாற் போலுடம் பெல்லாஅங்
கண்டுகொள் காதல் மிகும். (௩)

உரைசெயு மோசை யுரைசெய் பவர்க்கு
நரைதிரை யில்லை நமன். (௪)

தோன்றாத தூயவெளி தோன்றியக்கா லுன்னைத்
தோன்றாமற் காப்ப தறிவு. (௫)

வாக்குமனமு மிறந்த பொருள் காணில்
ஆக்கைக் கழிவில்லை யாம். (௬)

கண்ணகத்தே நின்று களிதருமே காணுங்கால்
உள்ளகத்தே நின்ற வொளி. (௭)

ஆனந்த மான வருளை யறிந்தபின்
தானந்த மாகு மவர்க்கு. (௮)

மறவாமற் காணும் வகையுணர் வாருக்
கிறவா திருக்கலு மாம். (௯)

விண்ணிறைந்து நின்ற பொருளே யுடம்பதன்
உண்ணிறைந்து நின்ற வொளி. (க௦)

### கண்ணாடி.

கண்ணாடி தன்னி லொளிபோ லுடம்பதனுள்
  உண்ணாடி நின்ற வொளி. (க)

அஞ்சு புலனின் வழியறிந்தாற் பின்னைத்
  துஞ்சுவ தில்லை யுடம்பு. (உ)

நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
  சாவது மில்லை யுடம்பு. (ங)

கண்டத் தளவிற் கடிய வொளிகாணில்
  அண்டத்த ராகு முடம்பு. (ச)

சந்திர னுள்ளே தழலுற நோக்கினல்
  அந்தர மாகு முடம்பு. (ரு)

ஆர்க்குந் தெரியா வுருவந் தனைநோக்கில்
  பார்க்கும் பரமா மவன். (சு)

வண்ண மில்லாத வடிவை யறிந்தபின்
  விண்ணவ ராகு முடம்பு. (எ)

நெற்றிக்கு நேரே நிறைந்த வொளிகாணில்
  முற்று மழியா துடம்பு. (அ)

மாதூ வெளியின் மனமொன்ற வைத்தபின்
  போதக மாகு முடம்பு. (கூ)

சுத்தமோ டொன்றி மனமு மிறந்தக்கால்
  முற்று மழியா துடம்பு. (கo)

## சூனியகாலமறிதல்.

நிரவி யழலுருவாய் நீண்ட வொளிகாணில்
அரவணையா னாகு முடம்பு. (க)

உருவந் தழலாக வுள்ளத்தே சென்று
புருவத் திடையிருந்து பார். (உ)

புருவத் திடையிருந்து புண்ணியனைக் காணில்
உருவற்று நிற்கு முடம்பு. (ந)

அகம்புறம் பேராப் பொருளை யறியில்
உகம்பல காட்டு முடம்பு. (ச)

ஆவிபாழ் போகா தடக்கி யிருந்தபின்
ஓவிய மாகு முடம்பு. (ரு)

அஞ்சு மடக்கி யறிவோ டிருந்தபின்
துஞ்சுவ தில்லை யுடம்பு. (சு)

தீயாக வுள்ளே தெளிவுற நோக்கினால்
மாயாது பின்னை யுடம்பு. (எ)

தானந்த மின்றித் தழலுற நோக்கிடில்
ஆனந்த மாகு முடம்பு. (அ)

ஒழிவின்றி நின்ற பொருளை யுணரில்
அழிவின்றி நிற்கு முடம்பு. (கூ)

பற்றற்று நின்ற பழம்பொருளைச் சிந்திக்கில்
முற்று மழியா துடம்பு. (க0)

## சிவயோகநிலை.

அடிமிசை வாயு வடுத்தடுத் தேகி
முடிமிசை யோடி முயல். (க)

உண்ணடி வாயு வதனை யுடனிரப்பி
விண்ணோடு மெள்ள விடு. (உ)

மெள்ள விரேசித்து மெய்விம்மிப் பூரித்துக்
கொள்ளுமின் கும்பங் குறித்து. (ங)

இரேசக முப்பத் திரண்டது மாத்திரை
பூரகம்பத் தாறு புகும். (ச)

கும்பக நாலோ டறுபது மாத்திரை
தம்பித் திடுவது தான். (ரு)

முன்ன மிரேசி முயலுபின் பூரகம்
பின்னது கும்பம் பிடி. (௬)

ஈரைந் தெழுபத் தீராயிர நாடியுஞ்
சேருமின் வாயுச் செயல். (எ)

வாச லீரைந்து மயங்கிய வாயுவை
யீசன்றன் வாசலி லேற்று. (அ)

தயாவினில் வாயு வலத்தி லியங்கில்
தியான சமாதிகள் செய். (கூ)

ஆதியா மூல மறிந்தஞ் செழுத்தினைப்
பேதியா தோது பினை. (க0)

---

## ஞானநிலை.

தற்புருட மாமுகந் தன்னிற் றனியிருந்
துற்பன மஞ்சை யுரை. (க)

தற்புருட மாமுகமேற் றாரகைதன் மேலே
நிற்பது பேரொளி நில். (உ)

ஓதிய தற்புரு டத்தடி யொவ்வவே
பேதியா தோது பிணை. (ங)

கொழுந்துறு வன்னி கொழுவுற வொவ்வில்
எழுந்தா ரகையா மிது. (ச)

மறித்துக் கொளுவிடு வன்னி நடுவே
குறித்துக் கொளுஞ்சீயைக் கூட்டு. (ரு)

காலுந் தலையு மறிந்து கலந்திடில்
சாலவும் நல்லது தான். (சா)

பொன்னொடு வெள்ளி யிரண்டும் பொருந்திடில்
அன்னவன் றாளதுவே யாம். (எ)

நின்ற வெழுத்துட னில்லா வெழுத்திணை
யொன்றுவிக்கி லொன்றே யுள. (அ)

பேசா வெழுத்துடன் பேசு மெழுத்துறில்
ஆசான் பரனந்தி யாம். (கூ)

அழியா வுயிரை யவனுடன் வைக்கில்
பழியான தொன்றில்லை பார். (கo)

---

## ஞானம்பிரியாமை.

பிறந்திட மாலிடம் பேரா திருப்பின்
இறந்திடம் வன்னி யிடம். (க)

சாகா திருந்த தலமே மவுனமது
ஏகாந்த மாக விரு. (உ)

வெளியில் விளைந்த விளவின் கனிதான்
ஒளியி லொளியா யுறும். (ங)

மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரிறவார் பின். (ச)

குருவாம் பரனந்தி கூடல் குறித்தாங்
கிருபோது நீங்கா திரு. (ரு)

சுந்தரச் சோதி துலங்கு மிடமது
மந்திரச் சக்கரமு மாம். (சு)

தூராதி தூரஞ் சொல்லத் தொலையாது
பாராப் பராபரம் பார். (எ)

ஈரொளி யீதென் றிறைவ னுரைத்தனன்
நீரொளி மீது நிலை. (அ)

அந்தமு மாதியு மில்லா வருட்பொருள்
சுந்தர ஞானச் சுடர். (கூ)

இதுமுத்தி சாதனமென் றேட்டில் வரைந்து
பதிவைத்தனன் குரு பார். (க0)

## மெய்ந்நெறி.

செல்லல் நிகழல் வருகால மூன்றினையுஞ்
சொல்லு மவுனத் தொழில். (௧)

பஞ்சிற் படுபொறி போலப் பரந்திருந்து
துஞ்சாது ஞானச் சுடர். (௨)

இமைப்பிற் பரந்தங் கொடுங்கு மின்போல
நமக்குட் சிவன்செயல் நாடு. (௩)

குவித்து மனத்தைக் குவித்துள்ளே யோங்கில்
செவித்துப் பெறுவ தெவன். (௪)

காலுந் தலையு மொன்றாகக் கலந்திடம்
நாலா நிலையென நாடு. (௫)

மூல நிலமிசை மூன்று நிலத்தினில்
ஆல மருந்துஞ் சிவம். (௬)

எழுஞ்சுட ருச்சியின் மேல்மனம் வைக்கத்
தொழிலொன் றிலாத சுடர். (௭)

அடைத்திட்ட வாசலின் மேல்மனம் வைத்துப்
படைத்தவன் றன்னையே பார். (௮)

அறுபதொ டாறு வருட மிதனை
உறுதிய தாக வுணர். (௯)

அட்டமா சித்தி யடையுமொ ராண்டினில்
இட்ட மிதனைத் தெளி. (௧௦)

## துரியதரிசனம்.

வன்னிய தெட்டு மதியம் பதினாறு
முன்னிய பன்னிரண்டு முள். (க)

சூரியன் வன்னியொன் றாகிடிற் சோமனும்
பாரு மினிது பயன். (உ)

மதியொடு வன்னியொன் றாகவே வந்தால்
கதிரவ னுமென்று காண். (௩)

மதிக்குட் கதிரவன் வந்தங் கொடுங்கில்
உதிக்குமாம் பூரணைச் சொல். (௪)

தோற்றுங் கதிரவ னுண்மதி புக்கிடில்
சாற்று மமாவாசை தான். (௫)

வன்னி கதிரவன் கூடிடி லத்தகை
பின்னிவை யாகு மெலாம். (௬)

அமாவாசை பூரணை யாகு மவர்க்குச்
சமனு முயிருடம்பு தான். (௭)

அண்டத்திலு மிந்த வாறென் றறிந்திடு
பிண்டத்திலு மதுவே பேசு. (௮)

ஏறு மதிய மிறங்கி லுறங்கிடும்
கூறுமப் பூரணை கொள். (௯)

உதிக்கு மதியமுங் கண்டங் குறங்கில்
மதிக்கு மமாவாசை யாம். (௧௰)

## உயர்ஞானதரிசனம்.

கொண்டிடு மண்டல மூன்றங்கி தன்னையிப்
பிண்டமு மூழி பிரியா. (௧)

வெள்ளி புதனொடு திங்க ளிடமெனத்
தள்ளுமின் கால சரம். (௨)

செவ்வாய் சனிநா யிறுவல மாகவே
கொள்ளிலிவ் வாறிடரு மில். (௩)

வளர்பொன் னிடம்பிறைத் தேய்வு வலமாம்
வளர்பிறை யென்றே மதி. (௪)

வலத்திற் சனிக்கே யிராப்பகல் வாயு
செலுத்து பேராது செயல். (௫)

இயங்கும் பகல்வல மிராவிடம் வாயு
தயங்குறல் நாடிக்குட் டான். (௬)

அர சறியாம லவன்பே ருரைத்துத்
தரைதனை யாண்ட சமன். (௭)

கல்லாத மூடர் திருவுருக் கொண்டிடச்
செல்லாத தென்ன செயல். (௮)

திருவருட் பாலைத் தெரிந்து தெளியில்
குருவிருப் பாமென்று கொள். (௯)

கற்கிலுங் கேட்கிலும் ஞானக் கருத்துற
நிற்கிற் பரமவை வீடு. (௧0)

ஆக திருக்குறள்—௩௧0.

முத்திக் கௌவையார்சொல் முந்நூற்றுப் பத்துமுன்
சித்தத்தில் வைத்துத் தெளி.

ஔவைகுறள் முற்றுப்பெற்றது.

---

